உ

சர்வம் சின்மயம்

# வேதாந்த சூடாமணி மூலமும்
# பிரம்மானந்த
# விளக்கமென்னும் உரையும்

உ

சிவமயம்

ஓம் தத்சத்பரப்பிரம்மணே நம:

நிஜகுண யோகீஸ்வரர் கன்னட பாஷையில் அருளிச் செய்த விவேக சிந்தாமணியிலுள்ள

**வேதாந்தப் பரிச்சேதத்தை**

நல்லாற்றூர் துரமங்கலம்

**ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள்**

182 தமிழில் பாடலாக மொழி பெயர்த்தருளிய

# வேதாந்த சூடாமணி மூலமும்

கோவிலூர் மடம் திருக்களர்

**ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின்**

சீடராகிய

**பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகளின்**

சீடரும்

சாத்தூர் வேதாந்த மடத்தின் தலைவருமாகிய

**ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள்**

இயற்றிய

**பிரம்மானந்த விளக்கமென்னும்**

உரையும்

இஃது

கோவிலூர் மடாலயத் தலைவர்

**ஸ்ரீ காசிவிசுவநாத ஞான தேசிக சுவாமிகளின்**

சொற்படிக்கு

**ஸ்ரீரங்கம் ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளால்**

வெளியிடப் பெற்றது

**1987**



பதிப்பு :

உரிமை : உரையாசிரியருடையது

# வேதாந்த சூடாமணி மூலமும்
# பிரமானந்த விளக்கமென்னும் உரையும்

விலை ரூ. 20



புத்தகம் கிடைக்கும் இடம்:

ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள்

198, சாத்தார வீதி,

ஸ்ரீரங்கம் (P. O.)

திருச்சி — 6



ஆனந்த நடனம்

# முன்னுரை



பரமேஸ்வரன் சிருஷ்டித்த பிரபஞ்சத்தில் ஏழுவகை பிறப்புள்ளன. அதில் மரம், செடி, கொடி முதலிய வற்றிற்கு பரிசமாகிய ஓர் அறிவும், நத்தை சிப்பி, முதலியவற்றிற்கு ஈரறிவுமான பரிசமும் இரசமுமாம். எறும்பு கறையான் முதலியவற்றிற்கு பரிசமும் இரசமும் கந்தமும் ஆகிய மூவறிவாம். தேன்வண்டு முதலிய வற்றிற்கு பரிசம், ரசம். கந்தம், ரூபத்துடன் நாலறிவாம். பசு முதலியவற்றிற்கு பரிசம், ரசம். கந்தம், ரூபம், சத்தத் துடன் ஐந்தறிவாம், மக்களுக்கு மட்டும் பகுத்தறி வோடு ஆறறிவாகும்.

அதிலும் அங்கக்குறைவின்றி ஆணாய்ப் பிறந்த மக்கள் சுக சாதனமாக தார புத்ர தனாதிகளைத் தேடினர் சிலர் யாகயக்ஞாதிகளால் சுவர்க்கத்தைத் தேடினர். சிலர் போதைப் பொருட்களையும் போக மாதைரையும் தேடினர். சிலர் அரசியற் பதவிகளை தேடினர். சிலர் மண்டலேஸ்வர பதவிகளைத் தேடினர். சிலர் படித்துப் பட்டி மண்டபத்தைத் தேடினர். சிலர் வக்கீல்களையும் கோர்ட்டையும் தேடினர், சிலர் பேப்பரையும், வாசக சாலையையும் தேடினர். சிலர் சூதாட்டத்தை தேடினர். சிலர் வம்பு பேசி கலகத்தைத் தேடினர். இன்னும் பல முயற்சிகள்ால் சுகத்தைத் தேடி அலுத்து அயர்ந்து தூங்கியவுடன் சுகரூபமான கடவுள் பிரம்மா னந்தமாக விளங்க அதை தூக்கமாக மதித்தனர். இந்த பிரம்மானந்தம் விஷயிகளுக்கு விஷயானந்தமாகவும் யோகிகளுக்கு யோகானந்தமாகவும் ஞானிகளுக்கு வித்தியானந்தமாகவும் சுருதி யுத்தி அநுபவங்களால் விளக்கவும்.

இதை நாஸ்திகர் இல்லை என்றனர். சூன்யவாதிகள் சூனியமென்றனர், தார்கீகர் முதலிய பேதவாதிகள்

மாயாவாதமென்றும் ஏகான்ம வாதமென்றும் கூறினர். அவர்களும் சுழுத்தியவஸ்தையில் ஏகரூபமாக இருந்தும் விழித்தவுடன் நான் வேறு ஈசுவரன் வேறு உலகம் வேறு சத்தியம் என்று விவகரிக்கின்றனர். இதற்குக் காரணம் உணர்ந்தவர்கள் நன்றாகச் சொல்லவில்லை. உணராதவர்கள் நன்றாக கேட்கவில்லை என்பதாம்.

இதற்கு உதாரணம் திரிபுரா இரகசியம் என்ற நூலில் ஏமலேகை என்ற பெண் தனது நாயகனுக்கு உபதேசித்து இந்த பிரம்ம வித்தையினால் நீங்கள் சர்வதுக்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தியாக இருக்கின்றீர்கள் என்பதை மற்ற புருஷர்களுக்கு உபதேசியுங்கள் நாம் மற்ற பெண்களுக்கு உபதேசிக்கின்றோம் என்று ஆரம்பித்துத் தனது இராஜ்யத்தில் உள்ளவர்கள் எல்லோரும் பிரம்ம ஞானிகளாகி பிரம்மத்தையே பேச அதைக் கேட்ட கிளி முதலிய பட்சிகளெல்லாம் பிரம்மம் ஒன்றேயுள்ளது. மற்றதெல்லாம் பொய் என்பதாகப் பாடத் தொடங்கியது. இதைக் கண்ட சனகாதி மகரிஷிகள் அந்த நகரத்திற்கு பிரம்ம வித்தியா நரகம் என்று பெயரிட்டனர் என்பது வரலாறு.

இதற்கு சத்துக்களால் சத்சாஸ்திர விசாரமில்லாததே பிரம்ம வித்தை மறைவதற்கு காரணமாகும். கோவிலூர் மடத்தில் முன்னுள்ள மகான்களால் நாநா சீவ வாதக் கட்டளை முதல் வாசிட்டம் வரை 16 நூல்கள் வகுத்துக் கொடுக்கப் பெற்றது. அதில் நடு நாயகமாக விளங்குவது வேதாந்த சூடாமணியாகும். இதனை நிஜகுண யோகீஸ்வரரால் கன்னட பாஷையில் வேதாந்தப் பரிச்சேதம் என்ற பெயரால் செய்யப் பெற்றது. அதை துறமங்கல சிவப்பிரகாச சுவாமிகளால் தமிழ்ப் பாடலாகப் பாடி வேதாந்த சூடாமணி என பெயரிட்டுத் தந்தனர். அதற்குப் பல பெரியோர்களால் செய்யப்பெற்ற உரைகள் 8 விதமாக காணப்படுகின்றது. அதில் சில அச்சாகவில்லை, சில அச்சாகியும் மறு பதிப்பு



போடாமல் விட்டார்கள். அதனால் இப்பொழுது படிப்பவர்களுக்கு புத்தகம் கிடைக்கவில்லை. அதனால் வேதாந்த சூடாமணிக்கு பிரம்மானந்த விளக்கமென்னும் உரையை வெளியிடுகின்றோம். இந்த உரை பெரியோர்களால் செய்யப்பெற்ற பேருரைக்கு நிகரல்ல. ஆயினும் சூரியன் மறைந்த போது தீபத்தால் காண்பது போல் நமது உரையும் பயன்படும். அல்லாமலும் பண்டிதர்களான பேரறிவாளப் பெரும் குடிமக்கள் மழலைச் சொற்களை மாதா பிதாக்கள் கேட்டு மகிழ்வது போல மகிழ்வரே அன்றி இகழ மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

மேலும் படித்த பண்டிதத் திறமையினால் எழுதினவனல்ல. இந்த நூலை படித்தவனுமல்ல. கேட்டவனுமல்ல பல வருஷங்களுக்கு முன் கோவில்பட்டி முத்தானந்த சுவாமிகள் மடாலயத்தில் இப்பொழுது அதிபராயிருக்கும் சதானந்த சுவாமிகளுக்கு பாடம் சொல்லும் படியாக திருவருளால் விளங்கியது. அதன்பின் பல ஜில்லாக்களில் சொல்லிவரும் போது முசிறியம்பதியில் பாடம் சொல்ல நேர்ந்தது. அப்போது ஓர் உரை எழுதுவோம் என்ற எண்ணத்துடன் எழுதியவுரை இன்று திருவருளே உலகிற்கு பயன்பெறும்படி திருவாடுதுறை குருமகா சந்நிதானம் தானே மனம் உவந்து பொருள் உதவி இருக்கின்றார்கள். அத்திருவருளாலேயே வெளிவருவதாகும். இந்த பிரம்ம வித்தையை உணராதவன் புருஷனாக மாட்டான். பெண்ணாயினும் தத்துவத்தை அறிந்தால் புருஷர் ஆகிறார்கள். அதனால் எல்லோரும் பிரம்ம வித்தையை உணர்ந்து சர்வ துக்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தியாகிய மோட்சத்தை அடைய வேண்டுமென்று ஈசுவரனைப் பிரார்த்திக்கின்றேன்.

மேலும் இதுபோல் 1972ல் பிரம்ம கீதை மூலமும், பிரம்மானந்த லகரியென்னும் உரையும் வெளியிட்டோம். இந்நூலில் நான்கு வேதங்களிலுள்ள பிரதான

மான உபநிஷத்துக்கள் ஒன்பதிருக்கின்றன. அதன் அர்த்தங்களை பிரம்மதேவர் - தேவர்களுக்கு பிரம்ம லோகத்தில் உபதேசித்ததாகும். இந்த பிரம்ம கீதையை தமிழில் உரை எழுதுங் காலத்தில் இராஜ ராஜேஸ்வரி தெரிசனங் கொடுத்தருளிய பெருமையினால் பிரம்ம கீதை மூலமும் பிரம்மானந்த லகரியென்னும் உரையுடன் உலகத்தில் உலவி உணர்வையூட்டி வருகின்றன. இந்நூல் கிடைத்ததற்கு அருமையாகும். இன்னும் சில பிரதிகள் தான் இருக்கின்றன. வேண்டுவோர் பெற்றுக் கொள்ளலாம். இந்நூல் எளிதில் வெளியிட முடியாத காரியமாகும். இந்த அரும்பெரும் நூல்களுக்கு அச்சிட உதவிய புண்ணியவான்களுக்கு ஆண்டவன் அருள் புரிவானாக. மேலும் வேதாந்த சூடாமணி உரையுடன் நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த காரைக்குடி தி சௌத் இந்தியா பிரஸ் உடையவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

**ஸ்ரீ பிரம்மானந்தம்**
198, சாத்தார வீதி,
ஸ்ரீரங்கம் (P. O.)
திருச்சி - 6



## சாற்றுக்கவி

உன்னதமாம் வேதாந்த நெறியனைத்தும் உலகோருக்கு
உணர்த்த வேண்டி
கன்னடநன் மொழியினில்ஸ்ரீ நிஜகுணயோ
கீச்வரர்தாம் கருணை கொண்டு
பன்னிடுஞ்சீர் வேதாந்தப் பரிச்சேதம்
எனும்நூலை படைத்தா ராக
இன்னமுதம் உண்பவர்போல் அதைப்பயின்றார்
மெய்யறிவா லின்புற் றாரே 1

சிந்தனைக்குத் தெளிவென்னும் விருந்தூட்டும்
இந்நூலின் சிறப்பை நோக்கி
நந்தமிழ்த்தாய் தவப்புதல்வர் சிவப்பிரகாச
ஸ்வாமியெனும் ஞான வேந்தர்
முந்துறத்தம் மதிநலத்தால் அதிலுள்ள
கருத்துமணி முற்றும் கோத்து
செந்தமிழில் வேதாந்த சூடாமணி உலகில்
சொலிக்கச் செய்தார் 2

மங்கலமார் சாத்தூரின் வேதாந்த மடத்தலைவர்
மாட்சி மிக்கார்
பொங்க ருள்ப்ரும் மானந்த ஸ்வாமிகளென்
றுலகோர்கள் போற்றும் ஞானி
கங்கையுறு வெள்ளமெனக் கவிபுனையும்
தீறமிக்க கல்விச் செல்வர்
தங்கருணைத் திறத்தாலின் நூற்பொருளை
உலகுணரச் சாற்றினாரால் 3

உற்றதவ நெறியுணர்வார் புகழ்பிரம்ம
கீதைக்கோர் உரையைத் தந்து
கற்றவர்போற் றக்குவதை பரணியாம்
காவியத்தை காட்டி யென்றும்

முற்றுணர்வை யூட்டத்வைதானந்த விளக்கவுரை
முறையாய்க் கூறி
நற்றமிழின் நலம் வளர்த்த நாயகரே
இவ்வுரையை நல்கு கின்றார் 4

உருவழகன் சிங்கார வேலனுக்கோர்
அந்தாதி ஒளிரச் சாற்றி
மருகலுறும் இறைவர்க்கும் இறைவிக்கும்
அந்தாதி மாலை சூட்டி
பெருகன்பில் இராமபிரானுக் கொருபிள்ளைத்
தமிழ்தந்தும் பின்னும் கேட்க
அருகிலுறும் அரங்கருக்கீ ரந்தாதி
அனுபூதி யளித்தா னன்றே 5

சொற்பொருளின் நயம் தோன்ற பதவுரையாய்
சாரமுறச் சுவையைக் காட்டி
கற்பவர்க்கு மிகவெளிதாய்க் கற்கண்டைப்
போலினிக்கும் கருத்து மிக்க
அற்புதமாம் இவ்வுரைதான் எல்லோர்க்கும்
நலம்புரிந்திவ் வகிலம் போற்ற
விற்பனர்கள் கொண்டாடும் வேதாந்த
விளக்காக விளங்கநன்றே 6



# "சாற்றுக் கவி"

## [நிஜமான நிலை]

இயற்றியவர் :

**" கவிகாளமேகதாஸன் "**

இராகம்: ஹிந்தோளம்

தாளம்: ஆதிதாளம்

பல்லவி:

பிர்மத்திற் கொருநூல் ''சூடாமணியே''—சுவாமி
பிர்மானந்தர் விளக்கும் பெரும் நிதியே!
(பிர்மத்திற்கொரு)

அநுபல்லவி:

ஆதி சங்கரரே அருளினர்;
அத்வைத பாஷ்யம்!
பாமரரும் பண்டிதரும் கொண்டார்;
பரம சந்தோஷம்!
(பிர்மத்திற்கொரு)

சரணம்:

''ஏகம்'' கொள்ளும் உள்ளம் ஏகாந்தமே-யாக
யோக மெல்லாம் ஞானந்தமே!
வேகம் மோகம் வேரறுக்குமே-நிஜ
லோக நிலையினைக் கூறுமே!
(பிர்மத்திற்கொரு)

## உரை வணக்கம்

மூவுருவாய் உலகனைத்தின் முதலும் ஆகி-
மோனத்தில் விளங்குபர இன்ப மாகி,

நாவலரும் ஞானிகளும் நயந்து போற்றும்
நாயகனே நல்லவர்க்கு நலமே தந்து.

காவலனாய் இருந்தருளும் கருணை நோக்கி-
கதியில்லாக் கடையனேன் கருதி யுய்ய

ஆவலுடன் ஏங்குகின்றேன் அடிகள் தந்துன்-
அருளதனால் ஆண்டுகொள்வ தாண்மையாமே 1

வேதநான் கெடுத்து ரைத்தவியாசமா முனியே போற்றி
பேதவேர் அறுத்துஞானப் பேரரசு ஆள வைத்த
நாதசங் கரனே போற்றி ஞானமாதவர்கள் போற்றி
போதசற் குருவாய்வந்த புனிதனே போற்றி போற்றி 2

கோவிலூர்த மைக்கவந்த குருமுத்து ராம லிங்கக்
காவலன் கழல்கள்போற்றி கருணைமா நிதியே போற்றி
மேவரும் துறவோய்போற்றி வீரமா தவனே போற்றி
தேவபொன் னம்பலத்தோய் திருவடி போற்றி
போற்றி 3

மும்மதக் களிறாம்பேத முக்குறும் பொழித்து ஞான
சிம்மமாய் எழுந்தசூடா மணிதிரு வருளி னாலே
செம்கதிர் எழுந்த போதும்தீபத்தாற் கண்ட வாறே
இம்மையில் உரைசெய் தீந்தேன் எளியனேன்பெற்ற
பேறே 4

சுருதிமுதற் பலகலையும் தொடர்ந்து காணாச்
சுரருடனே மூவர்களும் சொல்ல வொண்ணா
பருதிமுதல் ஒளிக்கெல்லாம் ஒளியே யாகி
பராபரமாம் அத்தனைக்கும் பரமே யாகி,



கருதியுணர் வார்க்கின்பக் கடலே யாகி
கருதாதான் உருவாயென் கருத்தில் நிற்கும்
அருமுருபொன் னம்பலவன் அத்வை தனாவந்(து)
ஆண்டு கொண்ட அடிக்கமலம் அணைந்து
வாழ்வாம் 5

## வாழ்த்துக்கவி

கங்கையும் பிறையும் சூடும் கடவுளே கருணைகூர்ந்து
சங்கரப் பெயரால் தோன்றிச் சாற்றிய வுரைகள் தம்மில்
சிங்கவே தாந்தசூடா மணிக்குரை யருளால் செய்தேன்
இங்கிதைப் படித்தோர் கேட்டோர் இன்பவீ
டெய்துவாரே





ஸ்ரீ பிரும்மானந்த சுவாமிகள்

# தற்சிறப்பாயிரம்

அருமறையின் பொருடெரித்த விவேக சிந்தா
மணியதனுள் அறை வேதாந்தப்

பொருளினைமுன் நீர்வரைப்பி னுலகறியச்-
செந்தமிழாற் புனைதல் செய்தான்

பெருகுசுவை நறவொழுகு செஞ்சொன் மல-
ராற்புனைபாப் பெருந்தண் மாலை

கருமிடற்று வானவற்கே சாத்துசிவப்
பிரகாசன் கவிஞர் வேந்தே

(இ-ள்)

| | | |
|---|---|---|
| பெருகுசுவை நறவொழுகு | — | அளவில்லாது பெருகி நவரச மென்னும் தேன் ஒழுகுகின்ற |
| செம்சொல்மலரால் | — | அழகிய சொற்களாகிய மலர்களால் |
| புனைபாபெரும் தண்மாலை | — | தொகுத்த பாடலாகிய பெருமையும் இனிமையும் வாய்ந்த மாலையை |
| கருமிடற்று வான வற்கே சாத்து | — | திருநீலகண்டத்தையுடைய சிவபெருமானுக்கே அணிவிக்கின்ற |

சிவப்பிரகாசன் கவிஞர்வேந்து — சிவப்பிரகாச சுவாமிகள் (என்னும் கவிஞர்களுக்கு அரசன்அனதிகாரிகளறிதற்கு)

அருமறையின் பொருள்தெரித்த — அருமையாயுள்ள வேதார்த்தங்களை விளக்கமாகக் கூறிய

விவேகசிந்தாமணியதனுள் — விவேக சிந்தாமணியென்னும் நூலின் கண்

அறைவேதாந்தப் பொருளை — சொல்லப்படுகின்ற வேதாந்தப் பரிச்சேதத்தின் பொருள்களை

முந்நீர் வரைப்பின் — கடல் சூழ்ந்தவுலகத்தின் கண்

உலகு அறிய செம் தமிழால் புனைதல் செய்தான் — உயர்ந்தோர் கண்டுவக்குமாறு செந்தமிழ் பாடலால் அழகாக வேதாந்த சூடாமணி யென்னும் ஓர் நூலாக இயற்றி அருளினான்



ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன் —
ஞானகுருவாணியையுள் நாடு



உ

ஓம் தச்சத் பரப் பிரம்மணே நம:

# வேதாந்த சூடாமணி மூலமும் பிரம்மானந்த விளக்கமென்னும் உரையும்

### காப்பு

தருணமா துமைமுகத்தா மரைக்கெழும்
அருண னாமெனவுதித் தடியர் பாற்புரி
கருணைமா மதமெனக்காட்டு மாமுகன்
சரவணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்

(இதன் பொருள்)

தருணமாது உமை முகத் தாமரைக்கு — இளமையும் அழகும் உடைய உமா தேவியாரது செந்தாமரை மலர் போன்ற திருமுகம் மலரும் பொருட்டு

எழும் அருணனும் என உதித்து — தடாகத் தாமரை மலர்கள் மலரும்பொருட்டு உதயகிரியில் உதிக்கின்ற சூரியனை யொத்தவனும் எனபுலவர் கூறுமாறு அவர்க்கு முன்பு வந்து தோன்றி

அடியார் பால்புரி கருணைமாமதம் எனக் காட்டும் — தனதடியார்களிடத்துச் செய்கின்ற கருணையையே பெருமதமாகக் காட்டுகின்ற

| | | |
|---|---|---|
| மாமுகன் சரண வாரிச மலர் | — | யானை முகமுடைய விநாயகப் பெருமானது திருவடித் தாமரை மலர்களை |
| தலையில் கொள்ளுவாம் | — | எடுத்துக் கொண்ட நூல் இனிது முடிதற்பொருட்டு மனவாக்கு காயத்தால் வணங்கி சிரத்திற் சூடுவோமாக. |

சீர்கொண்ட அருமறையின் முடிமணியை தெய்வ,
சிகாமணியை அடியவர் தம்கண்மணியை மாயைப்
பேர்கொண்ட விருளிரிக்குந் தினமணியை முக்கட்
பெருமணியை அகத்தினுக் கோர்விளக்காக இருத்தி
ஏர்கொண்ட விவேக சிந்தாமணியெனும் நூல் அதனுள்
எடுத்தியம்பும் வேதாந்தப் பரிச்சேதப் பொருளை,
நேர்கொண்ட தமிழ் விருத்த யாப்பதனுல் தெரிய
நிகழ்த்துவன் வேதாந்த சூடாமணி யென்றனன்றே

(இதன் பொருள்)

| | | |
|---|---|---|
| சீர்கொண்ட அருமறையின் முடிமணியை | — | மக்களுக்கு உயர் வைத்தரும் உறுதிப் பொருளை தமதிடத்து வைத்திருக்கும் எல்லை (காண்பதற்கு அரியதாயிருக் கின்ற வேதங்களின் சிரசில் விளங்கும் சுத்தப் பிரம்மாகிய சிவ) மாணிக்கத்தை |
| தெய்வ சிகா மணியை | — | பிரம்மா முதலிய தேவர்களின் முடியில் விளங்கும் காரண பிரம்மமாகிய அன்பு மாணிக்கத்தை |



| | | |
|---|---|---|
| அடியவர் தம் கண்மணியை | — | சரணடைந்தவர்களுடைய (அகக்) கண்ணில் (குருவாய் விளங்கும் இன்ப) மாணிக்கத்தை |
| மாயைப் பேர் கொண்ட இருள் இரிக்கும் தினமணியை | — | மாயையென்னும் பெயர் பெற்றுள்ள அஞ்ஞான இருளைக் கெடுக்கும் பிரம்மாகார விருத்தி ஞானமாகிய சூரிய மாணிக்கத்தை |
| முக்கண் பெரு மணியை | — | சோம சூரியாக் கினியென்னும் மூன்று கண்களையுடைய பெரிய காரிய பிரம்மாகிய ஈசுவர மாணிக்கத்தை |
| அகத்தினுக்கு ஓர் விளக்கு ஆக இருத்தி | — | எனது சித்தத்தின் கண் ஒப்பற்ற தீபமாக வைத்து |
| ஏர்கொண்ட விவேக சிந்தாமணி எனும் நூல் அதனுள் | — | சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய, அழகு (பத்தும்) தன்னிடத்து, கொண்டுள்ள விவேகச் சிந்தாமணியென்கின்ற சாஸ்திரத்தினுள் (சாரமாக) |
| எடுத்து இயம்பும் வேதாந்தப் பரிச் சேதப் பொருளை | — | எடுத்துக் கூறுகின்ற வேதாந்தப் பரிச் சேதமென்னும்ஓர் பகுதியின் அர்த்தத்தை |
| நேர் கொண்ட தமிழ் விருத்த யாப்பதனுல் தெரிய | — | இலக்கண, நேர்மை கொண்டுள்ள தமிழில் விருத்தப் பாடல்களாக, மந்தாதிகாரிகளுக்கும், விளங்குமாறு |

| | | |
|---|---|---|
| வேதாந்த சூடாமணி என்று நிகழ்த்துவன் | — | வேதாந்த சூடாமணியென்கின்ற திருநாமத்துடன் (ஓர் நூலை) கூறுகின்றேன் (அன்று ஏ அசை) |

## நூல்

### (அவதாரிகை) — சதுர்தச வித்தைகள்

வேதமொரு நான்குமா றங்கமுந ன்னியாயம்
மீமாஞ்சை யொடுமிருதி புராணமீ ரேழாம்
ஓதலுறும் வித்தைகளாம் அவற்றுள்மீ மாஞ்சை
உயர்ந்ததாய் ஐநான்கத் தியாயமாய் அருத்த
பேதமுறவிரு கூறும் அவற்றுள் முதற்கூறே
பிறங்கும் அருட்சைமினி சூத்திர போதுமீராறத்தி
யாயமாய்க் கருமம் ரூபமாகி
பொருளுணர்த்திப் பூர்வ மீ மாஞ்சையெனப்படுமால்

(இ = ள்)

| | | |
|---|---|---|
| வேதம் ஒரு நான்கும் | — | இருக்கு, எசுர், சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் |
| ஆறு அங்கமும் | — | சந்தசு, கல்பம், வியாகரணம், சிட்சை, சோதிடம் நிருத்தம் என்னும் ஆறங்கமும் |
| நல்நியாயம் | — | சிறந்த நியாயம் என்ற தர்க்கமும் |
| மீமாஞ்சை ஓடு மிருதி புராணம் | — | மீமாஞ்சையும், மனு முதலிய ஸ்மிருதி இருபதும் பிரம்மம் முதலிய புராணம் பதினெட்டும் என |



| | | |
|---|---|---|
| ஈரேழ் ஆக ஓதல் உறும் வித்தைகள் ஆம் | -- | பதினான்காக சொல்லப் படுவன சதுர்தச வித்தைகளாகும் |
| அவற்றுள் மீமாஞ்சை உயர்ந்ததாய் | — | அவ்வித்தைகளுக்குள் மீமாஞ்சையானது சிறப்புடையதாய் |
| ஐந்நான்கு அத்தியாயமாய் அருத்த பேதம்உற | — | இருபது அத்தியாயம் உடையதாய் பொருள் வேற்றுமை பொருந்தி இருப்பதால் |
| இரு கூறுஆம் அவற்றுள் | — | இரண்டு பாகமாக விளங்கும் அவ்விரண்டு பாகத்துள் |
| முதல் கூறு பிறங்கும் அருள் சைமினி | — | முதல் பாகம் விளங்கா நின்ற கருணையுடைய சைமினி முனிவரால் |
| சூத்திர ரூபமாகி போதும் ஈராறு அத்தியாயமாய் | — | சூத்திர வடிவமாக கூறப்பட்டு முறையாய் வருகின்ற பன்னிரண்டத்தியாய முடையதாய் |
| கருமப் பொருள் உணர்த்தி | — | வேதத்தின் கர்ம காண்டப் பொருளுணர்த்தி வருவதால் |
| பூர்வ மீ மாஞ்சை எனப்படும் | — | பூர்வ மீமாஞ்சையென்று கூறப்படும் |

விசேடவுரை — வேதம் நான்கும் அநாதியாய் பரமேஸ்வரனால் சிருஷ்டி தோறும் திருவாய் மலர்வதாம் அதில் இருக்கு வேதம் 21 பேதம், எசுர் வேதம் 101 பேதம், சாமவேதம் 1000 பேதம், அதர்வண வேதம் 9 பேதம் ஆவதாம். வேத வாக்கியம், விதிவாதம்

அர்த்தவாதம், மந்திர வாதம், நாம தேயம் என நான்கு வித பேதத்தால் சகல தர்மத்தையும் கூறுகின்றன.

1 விதி வாக்கியம் — அரசனைப் போல, மக்களைப் பாவம் செய்யாதே புண்ணியமே செய்யென்று விதிப்பதாம்

2 அர்த்தவாதம் — புண்ணிய கர்மங்களை அரசனைத் துதிப்பது போல துதிப்பதாம்

3 மந்திரவாதம் — குருவைப் போல செய்யத் தக்கவற்றை காட்டுவதாம்

4 நாமதேயம் — மாதாபிதாக்கள் போல யாகாதிகளுக்குப் பெயரிடுவதாம்

வேதாங்கம் 6 அவை முறையே அவ்வேதங்களுக்கு பாதம் அஸ்தம், முகம், கிராணம் நேத்திரம் — சுரோத்திரம் போன்றிருப்பனவாம்.

சந்தசு — மந்திரம் 'சுலோகம் முதலியவற்றுக்கு அட்சர கணிதம் செய்வதாம்.

கல்பம்—ஆஸ்வலாயன, போதாயன, ஆபஸ்தம்ப முதலிய சூத்திரவடிவத்தால் யாகப் பிரயோகாதிகளை கற்பிப்பதாம்.

வியாகரணம்—சப்த சித்தியை செய்வதாம்.

சிட்சை—உதாத்தா, அனுதாத்தா, ஸ்வரித, பிரசய-மென்னும் நான்குவித ஸ்வாகா பூர்வகமான சொற்களின் வரிசைக் கிரம வேதாத்திய யனுதிகளைக் கூறுவதாம்.

சோதிடம்—லக்கன, திதி, வார, நட்சத்திர, யோக கரணுதிகளால் வைதீக கர்மங்களைச் செய்வதற்கு உரிய



காலத்தை தெரிவிப்பதாம் நிருத்தம்-வைதீக சப்தத்தை அபிநயத்தால் காட்டுவதாம்.

வேதோபாங்கம்—நியாயம் அது தருக்க சாஸ்திரமாம், அதுவும் நியாயம், வைசேடிகம் என இருவகையாம், நியாயம், பிரமாண முதல் நிக்கிரகஸ்தானம் ஈறாயுள்ள 16 பதார்த்தம் நிருபணம் செய்வதாம். வைசேடிக சாஸ்திரம், திரவியம் முதல் அபாவம் ஈறாயுள்ள 7 பதார்த்தங்களை நிருபணம் செய்வதாம்

மீமாஞ்சை—தருமத்தையும், பிரம்மத்தையும் ஆராய்ச்சி செய்யும் நூலாம் அதுவும் முறையே-பூர்வ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை என இருவகைப்படும்.

ஸ்மிருதி—அது வருணு சிரமதர்மங்களைக் கூறும் நூலாம். இதுவும், மநு, அத்திரி, ஹாரிதம், விஷ்ணு, யாக்கியவற்கயம், உசனம், ஆங்கரீசம், யமம், ஆபஸ்-தம்பம், சம்வர்த்தம், கார்த்தியாயனம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கம், லிகிதம், தட்சம், கௌதமம், சாதாதபம், வசிட்டம் என 20. இவற்றுள் மநு கிரேத யுகத்திற்கும், கௌதமம்-திரேதாயுகத்திற்கும் சங்கமும் லிகிதமும் துவாபரயுகத்திற்கும், பராசரம் கலியுகத்திற்கும் முக்கியமாகும்.

ஜாபால நசிகேதா முதலிய உபஸ் மிருதிகளும், இராமாயணம் பாரதம், சைவாகமம், வைஷ்ணவாக-மங்களும், மந்திர சாஸ்திரம், சாங்கிய சாஸ்திரம், யோக சாஸ்திரம் முதலியன வெவ்லாம் ஸ்மிருதியில் அடக்கம். இராமாயணம், பாரதம் என்னும் இதிகாசம் வேதத்தில் அடக்கம் என்பதும் உண்டு. புராணம்-அது சிருஷ்டி, உபசிருஷ்டி, வம்சம், மநுவந்தரம் வம்சாநு சரிதம் என்னும் பஞ்சலட்சணங்களையும் சகல வைதீகதாந்திரீக கருமங்களைக் கூறும் நூலாம். இது 18. இதன் பரம தாற்பரியம், உபநிஷத்களின் பொருளை விளக்கிக்

கூறுவதாகும். இதில் சைவம், ஸ்காந்தம், இலிங்கம், கூர்மம், வாமனம், வராகம், மார்க்கண்டேயம், பௌஷ்யத் மச்சியம், பிரம்மாண்டம் என்னும் 10ம் சிவபுராணமாம். நாரதீயம், பாகவதம், காருடம், விஷ்ணுவென்னும் 4ம் விஷ்ணு புராணங்களாம். பிரமம், பத்மம். என்னும் இரண்டும் பிரம்மாவின் புராணங்களாம். பிரம்மகைவர்த்தம் சூரியபுராணம்! ஆக்கினேயம் அக்கினிபுராணம். வேதம் அறிவு நூல். வேதாங்கம் உறுப்பு நூல். நியாயம் அளவை நூல். மீமாஞ்சை ஆராய்ச்சி நூல்.ஸ்மிருதி தரும நூல். புராணம் பழமைநூல், எனக்கூறப்படும்.

உப வேதங்கள் : ஆயுள் வேதம், அர்த்த வேதம், தநுர் வேதம், கந்தருவ வேதம் என்பதாம். இதில் வியாதி, நிதானம் வியாதி சின்னம், மந்திர ஔஷத சிகிச்சை என்பவற்ருல் ஆயுள் ஆரோக்கியம் முதலியவற்றை தெரிவிக்கும், நூல் ஆயுள் வேதமாம்.

தட்சணை, நெய், அவி முதலிய உபகரணங்களால் தருமார்த்தம் முதலியவற்றை பெறும் வழியைக் கூறும் நூல் அர்த்த வேதமாம். நீதி சாஸ்திரம், அசுவ சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம், முதலிய யாவும் இதிலடக்கமாம். பகைவரை, வெல்லுதற்குரிய மந்திரப் பிரயோகம் அஸ்திரப் பிரயோகம் முதலியவற்றைக் கூறும் நூல் தநுர் வேதமாம். சாம வேத முதலியவற்றின் சரிகமபதநி என்னும் சப்த ஸ்வர கீதங்களைக்கூறும் நூல் காந்தருவ வேதமாம்.

(அ—கை—மீமாஞ்சை சாஸ்திர விபரம்)

2 சாற்றியவச்சை மினி சூத்திரத்திற்கு [மிக்க சாபர மென்றொரு பாடியம் புரியப்பட்டது. ஏற்ற மிகும் அம் மீமாஞ்சைக்கு மதம்பாட்டம் எனவொன்று பட்டா



சாரியனுல் வந்தன்று. போற்றுமவன் சீடனுகிய பிரபாகரனுல் புகழ் பிரபாகரமெனவோர் மதாந்தர நன்கமைய ஆற்றிய வச்சாபர பாடியத்திற்கு விளங்க ஆக்கப்பட்டுலகமெலாம் அறிந்திட நின்றதுவே.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| அச்சை மினி சாற்றிய சூத்திரத்திற்கு | — | அந்தசை மினி முனிவர் கூறிய சூத்திரத்திற்கு (சபரரென்னும் முனிவரால்) |
| மிக்க சாபரம் என்று ஒரு பாடியம் புரியப்பட்டது | — | சிறப்பு மிகுந்த சாபரமென்பு தாக ஓர் பேருரை செய்யப் பட்டது. |
| ஏற்ற மிகும் அம் மீமாஞ்சைக்கு மதம்பாட்டம் என பட்டாசாரியனுல் ஒன்று வந்து அன்று போற்றும் அவன் சீடன் ஆகிய புகழ் பிரபாகரனுல் | — | புகழ் மிகுந்த அந்த மீமாஞ்சைக்கு பாட்டமத மென்று கூறுமாறு குமாரில பட்டரால் (வேருேர் மதமாக விளங்கும்படி) ஓர் உரை செய்யப்பட்டது. யாவரும் துதித்தற்குரிய அப்பட்டாசாரி யானது சீடராகி பிரபாகர ரென்னும் முனிவரால். |
| நன்கு அமைய ஆற்றிய அச்சாபர பாடியத்திற்கு | — | சபர முனிவரால் பொருள் விளக்கம் நன்ருக பொருந்தச் செய்யப்பட்ட அந்தச் சாபர பாடியத்திற்கு |
| புகழ் பிரபாகரம் என ஓர் மதாந்தரம் விளங்கஆக்கப்பட்டு | — | புகழத்தக்க பிரபாகரமென்று வேறொரு மதமாக விளங்கும் படி ஓர் உரை செய்து |
| உலகு எலாம் அறிந்திட நின்றது | — | வைதீக உலகத்தார் யாவரும் அறியும்படி நிலைபெற்று நின்றது |

### 3 உத்தர மீமாஞ்சை தேவதா காண்டம்

உரைத்த விரண்டாங் கூறுபிரமம் உரைப்பதனுல்
உத்தர மீமாஞ்சை யெனப் பட்டருள் கூர்வியாதன்

தெரித்த சூத்திர வடிவமாகி யிரு நான்கத்
தியாயமாய் அவற்றுள் முதல் நான்கத்தியாயம்

விரித்தலுறு தேவதா காண்டமெனப் பட்டு
விளங்குறு தெய்வத விலக்கணம் பலபத்திரனுல்

நிரைத்துரைசெய் யப்படுமேல் நான்கத்தியாயம்
நிகழ் பிரம காண்டமெனவே நிகழ்த்தப் படுமால்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| உரைத்த இரண்டாம் கூறு, பிரமம்உரைப் பதனுல் உத்தர மீமாஞ்சை எனப்பட்டு | — | முன் கூறிய மீமாஞ்சையின் இரண்டாம் பாகம் (சீவ) பிரம்ம அயிக்கியத்தைக் கூறு வதால் பெரியோர்களால் உத்தமீமாஞ்சை எனக் கூறப்பட்டு |
| அருள்கூர் வியாதன் தெரித்த சூத்திர வடிவம் ஆகி | — | கருணை மிகுந்த வியாச முனிவர் திருவாய் மலர்ந்தருளிய சூத்திர ரூபமாய் |
| இரு நான்கு அத்தி யாயம், அவற்றுள் முதல் நான்கு அத்தி யாயம் விரித்தல் உறு | — | எட்டத்தியாய முடையதாம் அவ்வெட்டத்தியாயத்தினுள் முதல் பகுதியாய நான்கத்தி யாயம் (தேவதைகளை உபா சனை செய்யுங் கிரமத்தை) கூறலுற்ற |



| | | |
|---|---|---|
| தேவதாகாண்டம் எனப்படும் | — | தேவதா காண்டமென்பதாக கூறும்படிக்கு |
| விளங்கு உறு தெய்வத இலக் கணம் | — | விளங்குவனவாம், அந்த தேவதாகாண்டத்துள் (மந்திர வாதம் போல) தேவதை களின் இலக்கணங்கள் |
| பலபத்திரனுல் நிரைத்து உரை செய்யப்படும் | — | பல பத்திர இராமரால் முறையாய் கூறப்பட்டு இருக்கின்றன |
| மேல் நான்கு அத்தியாயம் | — | பிற்பகுதியாய் நான்கு அத்தியாயங்கள் |
| நிகழ் பிரமகாண்டம் என நிகழ்த்தப்படும் | — | விளங்கா நின்ற பிரம்ம காண்டமென்று கூறப்படும். |

(இது குளகம்)

### 4 அஃகை — பிரம்ம காண்டம்

அப்பிரம காண்டத்துள் சிவமொடுயிர் அயிக்கம் அறைதலால் சங்கராசாரியனுங் குருவால் ஒப்பரிய பாடியமொன்றுரைக்கப்பட்டு அதுபின் உரைத்தற்கு விவரணுசாரியனென்பவனுற் செப்பரிய விவரணம் ஆக் குறப்பட்டதுவே தெரியின் வேதாந்த நூல் என்றுரைக் கப்படுமால் இப்பெரிய வேதாந்த நூற்பொருளின் அகலம் எங்ஙனமென்றிடினுரைத்தும் இயம்பிய நூல் முறையே.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| அப்பிரம்மகாண்டத் துள் சிவம் ஒடு உயிர் அயிக்கம் அறைத லால் | — | அந்தப் பிரம்ம காண்டத்தி னுள் பிரம்மாத்மா, ஐக்கியம் கூறுவதால் (அக்காண்டத் திற்கு) |

| | |
|---|---|
| சங்கராசாரியனாம் குருவால் ஒப்பரிய பாடியம் ஒன்று உரைக்கப்பட்டது — | சங்கராசாரியரென்னும் லோக குருவால் ஒப்பில்லாப் பேருரை ஒன்றை திருவாய் மலர்ந் தருளப்பட்டதாம். |
| பின் உரைத்தற்கு விவரணுசாரியன் என்பவனுல் — | பின்னர் சங்கர மாமுனிவர் அருளிய பேருரைக்கு விவரணு சாரியரென்னும் பெரியாரால். |
| விவரணம் ஆக் குறப்பட்டது — | விவரணமென்னும் ஓர் உரை செய்யப்பட்டது |
| அதுவே தெரியின் வேதாந்த நூல் என்று உரைக்கப்படும் — | அவ்வுரையே, ஆராயுமிடத்து வேதாந்த சாஸ்திரமென்று சொல்லப்படுவதாம். |
| இப்பெரிய வேதாந்த நூல் பொருளின் அகலம் — | இம்மகத்தாய வேதாந்த சாஸ்திர அர்த்தங்களின் விரிவை. |
| எங்ஙனம் என்றிடின் இயம்பிய நூல் முறையேஉரைத்தும் — | நீர் கூறுவது எங்ஙனம் என்று வினவில் (நிஜ்குணயோகீசு வரர்) திருவாய் மலர்ந்தருளிய நூல் கிரமமாகவே (அதனைக்) கூறுவாம். |

## 5 அ—கை மங்களா சரணத்திரயம்

வாய்த்தநூன் முகத்துரைக்கும் மங்களா சரணை
வாழ்த்துவனக் கொடுவத்து நிர்த்தேசம் என முன்
றாத்தபதம் பதப்பொருளே வாக்கிய யோசனையே
யறிவினு விடையிவையைந் துரையிலக்கணமாம்
கோத்துரை செய் விசேடவி சேடியங்கருத்தா கருமம்
கொள்கிரியை யிவையைந் தன்வய விலக்கணமாம்



சாற்றுமநு பந்தசதுட்டய நூற்குவி டயம்
சம்பந்தம் பயன் அதிகாரிகளென நான்கறியே

(இ—ள்)

| | |
|---|---|
| வாய்த்த நூல் முகத்து உரைக்கும் மங்களா சரணை — | அழுகமைந்த நூலாரம்பத்தில் கூறுகின்ற மங்களாசரணை எனப்படுவது |
| வாழ்த்துவனக் கொடுவத்து நிர்த் தேசம் என முன்றும் — | வாழ்த்துவதென்றும் நமஸ்காரமென்றும் பொருளியல் புரைத்தலென்று மூவகைப்படும் |

(வியாக்கியன பஞ்ச லட்சணம்)

| | |
|---|---|
| உரை இலக்கணம் — | வியாக்கியான லெட்சணமாவது |
| ஆத்த பதம் பதப் பொருளே வாக்கிய யோசனை — | மூலகிரந்தத்தில், சொல்லப் படுகின்ற பதம், பதார்த்தம் வாக்கியத்தின் முடிந்த அர்த்த ஆராய்ச்சி வாயிலாகக்கூறுதல் |
| அறிவினு விடை இவை ஐந்தாம் — | ஐயப்பொருளை அறிதற்கு (உரிய) வினுவிடை (என்னும்) இவ்வைந்து வகையாம் |

(அன்வய பஞ்ச லெட்சணம்)

| | |
|---|---|
| அன்வய இலக்கணம்— | அன்வய இலக்கணமாவது |
| கோத்து உரை செய் — | அவ்வுரையின் கண் சேர்த்துக் கூறப்படும் |

விசேடியம் விசேடம் கருத்தா கருமம்கொள் கிரியை இவை ஐந்து — விசேடியம் விசேஷணம் கர்த்துரு கருமம் (என்னும் செயப்படு பொருளைச் செயக்) கொள்கின்ற கிரியை என்னும் இவை ஐந்து விதமாகும், (அநுபந்தம் நான்கு)

நூற்கு சாற்றும் அநுபந்த சதுட்டயம், விடயம், சம்பந்தம் பயன் அதிகாரி என நான்கு அறி — சாஸ்திரங்களுக்கு உரியனவாக அறிஞரால் கூறப்படுகின்ற அநுபந்தம் நான்கு விதமாம் (அவை) விடயம், சம்பந்தம், பிரயோசனம் அதிகாரி என்றறிவாய். (5)

6) விடயமது சிவ சீவர் தம தேகத்துவமாம்
விமலனெடு நூற்கறையப் படலறை யுந்தன்மை
அடைதலுறு சம்பந்தம் பயன்றுயர்எ லாநீத்-
தானந்தப் பதம் பெறுதல் சாதன நான்கினையும்
உடையவனே யதிகாரியென்றறைவர் அறிஞர்
உரைத்த சாதன சதுட்டய நித்தவ நித்தப்
படு பொருளின் விவேகமிக பரபோக விராகம்
பழிப்பரிய சமைமு முட்சுத்வ மெனப்படுமால்

(இ—ள்)

விடயமது சிவசீவர் தமது ஏகத்துவம் ஆம் — அவ்வநுபந்தத்துள், விடயமாவது பிரம்மாத்துமாக்களின் அபேதமாம்

அடைதல் உறு சம்பந்தம் — பொருந்துகின்ற சம்பந்தமாவது

விமலனெடு நூற்கு அறையப் படல் அறையும் தன்மை — பிரம்மத்திற்கும் வேதாந்த சாஸ்திரத்திற்கும் (உள்ள) சொல்லப்படுதலும், சொல்லும் தன்மையும் ஆம்



பயன்துயர் எலாம் நீத்து ஆனந்தபதம் பெறுதல் — பிரயோசனமாவது துன்பமனைத்தையும் ஒழித்து ஆனந்த வடிவமாக விளங்கும் நிலைமையை அடைவதாம்

அதிகாரி சாதனம் நான்கினையும் உடையவனே — அதிகாரி என்பவன் விவேகாதி நான்கு சாதனங்களை அடைந்தவனாகும்

என்று அறைவர் அறிஞர் — இவ்விதமாக அநுபந்த சதுட்டயத்தை கூறுவர் அறிவுடையோர்

உரைத்த சாதன சதுட்டயம் — முன் கூறிய சாதன சதுட்டயமென்பன

நித்த அநித்தப்படு பொருளின் விவேகம் — நித்தியமாகவும் அநித்தியமாகவும் பொருந்திய பொருள்களின் விவேகம்

இகபரபோகம் விராகம் — இகலோகத்தும்பரலோகத்தும் உள்ள போகங்களில் ஆசையில்லாமை

பழிப்பு அரியசமை முமுட் சுத்வம் எனப்படும் — பழிப்பில்லாத சமம் (முதலிய ஆறு குணங்களை பெறுதலும்) மோட்சவிருப்பமும் எனக் கூறுவர்)

## 7 விவேகத்தின் விளக்கம்

நித்தியமான் மாவேபொய் விடயமெலாம் எனத்தேர்
நிலைதரு நித்தியா நித்தியவத்து விவேகம் பின்,
மெத்திவரும் இகமொடு அமுத்திரத்தில் வரு போக
விராகமிம்மை மறுமையுளவிடய நுகர்வனைத்தும்,
பொய்த்தழியும் இடும்பைமயம் என விடுதலாகும்

புகழ்சமையே முதலாய சட்குணங்கள் பெறுதல்
வைத்தசமையியல்பாய முத்தி விருப்பதுவே
வயங்கு முமுட்சுத்தவ மென்றறிந்திடுக மதித்தே

(இ—ள்)

நித்திய அநித்திய வஸ்துவிவேகம் — அச்சாதன சதுட்டயத்துள் நித்தியா நித்திய வஸ்து விவேகம் என்பது

நித்தியம் ஆன்மாவே— பிரம்ம ரூபமான ஆன்மாவே நித்தியம் என்றும்

விடயம் எலாம் மாய் என தேர்தரு நிலை — மாயை அதன் காரியமான நாமரூபப் பிரபஞ்சமனைத்தும் அநித்தியமாம் எனப்பகுத் துணரும் திரமான புத்தியாம்

(விராக விளக்கம்)

பின்மெத்தி வரும் — அதன்பின்பொருந்திவருகின்ற

இகமொடு அமுத்திரத்தில் வரு போக விரகம் — இக முத்திராத்த பலபோக விராக மாவது

இம்மை மறுமை உள விடயம், — இகலோகத்திலும் பரலோகத் திலும் உள்ள விஷயானுபவ மனைத்தும்

பொய்த்து அழியும் — மித்தையாய் ஒழிவனவாம்

இடும்மை மயம் என விடுதல் ஆகும், — துன்பவடிவமென்றவற்றை யுணர்ந்து அவற்றிலுள்ள விருப்பத்தை விடுதலாகும்



வைத்த சமை — அதன்பின்வரும் சமாதி சட் சம்பத்தியாவது

புகழ் சமையே முதலாய சட்குணங்கள் பெறுதல் — பெரியோர்கள், புகழும் சமம் முதலாக உள்ள ஆறு குணங்களைப் பெறுதலாம்

(மோட்ச இச்சையின் விளக்கம்)

வயங்கு முமுட் சுத்துவம் — அதன்பின் விளங்குகின்ற முமுட் சுத்துவமாவது

இயல்பு ஆய முத்திவிருப்பதுவே — சுபாவமாயுள்ள சர்வ துக்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தில் விருப்பமாம்

என்று மதித்து அறிந்திடுக — என்பதாக சாதன சதுட்டயங் களை ஆராய்ந்து அறிவாயாக அமுத்திரம்—மறுமை (7)

## 8 சமாதி சட்க சம்பத்தி விளக்கம்

சமைதமையே திதிக்கை யுபரதிசிரத்தை சமாதி
சமைமுதலாம் அறுகுணங்கள் உட்கரண மடக்க
சமைதமைதான் புறக்கரணம் அடக்குதல் காமாதில்
தணித்திடுகை திதிக்கைகரு மங்களனைத் தினையும்
சுமையெனவே விடுத்தலுப ரதிசுருதி குருவைத்-
துணிவின னம்புமதே சிரத்தைகுரு மொழிநெஞ்
சமைவுறவே திட்பமுறல் சாமாதியச் சாதனந் சேர்
அதிகாரி செயுங்குரு சேவையினையெடுத் தியம்பில்

(இ—ள்)

சமைமுதலாம் அறுகுணங்கள் — சமம், தமம், திதிட்சை உபரதி சிரத்தை சமாதிஎன்பனவாம்.

சமம் உள்கரணம் அடக்கல் — அவற்றுள், சமமாவது, (மனம் புத்தி சித்தம் அகங்காரம் என நான்காயுள்ள) அந்தக் கரணத்தை அடக்குதலாம்.

தமை புறக் கரணம் அடக்குதல் — சுரோத்திராதி ஞானேந்திரியங்களையும், வாக்காதிகர் மேந்திரியங்களையும் அடக்குதலாம்.

திதிக்கை காமாதி தணித்திடுகை — திதிட்சையாவது காமம் வெகுளி முதலியவற்றை (பெருகாமல்) தணியச் செய்வதாம்.

உபரதி கருமங்கள் அனைத்தும் சுமை எனவே விடுதலாம் — உபரதியாவது - கருமங்கள் யாவும் (பெரும்) பாரமெனக் கருதி விடுதலாம்.

சிரத்தை சுருதி குருவை துணிவினுல் நம்புவதே — சிரத்தையாவது - வேதத்தையும் சற்குருநாதனையும் நிச்சயமாக நம்புவதேயாம்.

சமாதி குருமொழி நெஞ்சு அமைவுறவே திட்பம் உறல் — சமாதியாவது - குருநாதனது உபதேச வாக்கியம் மனத்தின் கண் பொருந்த உறுதியாக இருத்தல்.

இச் சாதனம் சேர் அதிகாரிசெயும் குரு சேவையினை எடுத்து இயம்பில் — இந்தச் சாதன சதுட்டயங்கள் பொருந்தியுள்ள அதிகாரி புருஷன் செய்யும் குரு பணிவிடைகளை எடுத்துக் கூறமிடத்து - இது குளகம்.



## 9 சதுர்வித குருநாதன் சேவை

ஆத்தமுடன் அங்கமே தானஞ்சற் பாவம்-
ஆமவற்றுள் குருபரனுக் கனுகூல விருத்தி
ஆத்தமுயர் குருபரன் குற்றேவலே யங்கம்-
அருட்குரவர்க் குரியமனை நிலமுதலா மவற்றை
காத்தலது தானமாம் சற்குருவே மெய்யாக்
கண்டசிவ மெனநம்பு மதுவேசற் பாவம்
ஏத்துகரு மம்பத்தி மிகுஞான காண்டம்
எனுமிவற்ருல் மூவதிகாரிகள் வேறுமுளரால்.

(இ—ள்)

ஆத்தம் உடன் அங்கம் தானம் சற்பாவமாம் — அக்குருசேவை, ஆப்தம், அங்கம், தானம், சத்பாவம் என நான்காம்.

அவற்றுள் குருபரனுக்கு அநுகூல விருத்தி ஆப்தம் — அந்நான்கினுள்குருநாதனுக்கு அனுகூலமானவற்றை செய்வதே ஆப்தமாம்.

அங்கம், உயர்குரு பரன் குற்றேவலே — அங்கமாவது நற்குணங்களால் உயர்ந்துள்ள குருநாதனுக்கு சரீரத்திற்குரிய பணி செய்தலாம்.

தானம் அருள் குரவற்கு உரியமனை நிலம் முதலாம் அவற்றை காத்தலது — தானமாவது, அருளையுடைய குருநாதருக்குரிமையாயுள்ள வீடு நிலம் முதலியவற்றைப் பாதுகாத்து வருவதாம்.

சத்பாவம் சற்குருவே மெய்யாக் கண்ட சிவம் என நம்பும் அதுவே, — சத்பாவமாவது-சற்குருநாதரே பிரத்யட்சமாக தரிசித்த பரம சிவமென்று (அவரை) நம்புவதாம்.

| | |
|---|---|
| ஏத்து கருமம் பத்தி — மிகு ஞான காண்டம் எனும் இவற்ருல் வேறு மூவதிகாரிகள் உளர். | ஆஸ்திகர், போற்றும் கர்ம காண்டம் (மேன்மை) மிகுந்த ஞான காண்டம், பத்தி காண்டம் என்னும் இம்மூன்று காண்டத்தால் வேருக மூன்று அதிகாரிகளிருக்கின்ருர்கள். |

10 உடம்பினையும் வரு குடும்பந்தனையு
மியானெனதென்
றுளன் கரும காண்டியெலாக் கிரியையு மீசற்கே
திடம் பெற நின்ருக்குமவ னேபத்தி காண்டி -
செயுங்கரும மனைத்தினுக்குங் கரிதா
னென்றிருப்போன்
மடந்தவிருநன்ஞான காண்டியென லாகும்-
மற்றுமுளர். ஐவரொரு வர்க்கொருவ ருயர்வாய்
அடைந்த வதிகாரிகளங் கவர்கருமி முமுட்சோ
டறையுமப் பியாசியநு பவியுடனு ரூடன்

(இ = ள்)

| | |
|---|---|
| உடம்பினையும் வரு — குடும்பந் தனையும் | அம் மூன்று காண்டிகளுள், தேகத்தையும் அதன் காரண மாக, வருகின்ற குடும்பத்தையும் |
| யான் எனது என்று — உளன் கருமகாண்டி — | முறையே யானென்றும் எனதென்று (கருதி) இருப்பவன் கருமகாண்டி யாவன். |
| ஏலாக்கிரியையும் — ஈசற்கே திடம்பெற நின்று ஆக்கும் அவன் பத்தி காண்டி | எல்லாச் செயல்களையும் ஈசுவரர் புணம் என்றுஉறுதி யாக நிலைத்துச் செய்பவனே பத்தி காண்டியாவன். |



| | |
|---|---|
| தான் செயும் கருமம் — அனைத்தினுக்கும் கரிதான் என்று இருப்போன் | தான் செய்யும் செயலனைத் தினுக்கும் யான் சாட்சி மாத்திர மென்றிருப்போன். |
| மடம் தவிரும் நல் — ஞான காண்டி எனல் ஆகும் | அறியாமை நீங்கிய சிறந்த ஞான காண்டியென்று அவனைக் கூறலாம் |
| ஒருவர்க்கு ஒருவர் — உயர்வாய் அடைந்த அதிகாரி கள் மற்றும் ஐவர் உளர் | ஒவ்வொருவருக்கும் உயர் வாகப் பொருந்திய அதிகாரி கள் இன்னும் ஐந்து பேர் களிருக்கின்றனர், அவ்வைந்து பேர்கள் கருமிமுமுட்சுவுடன் உயர்வாக கூறுகின்ற அப்பியாசி அனுபவி ஆரூடன் எனச் சொல்வர், |

## 11 அதிகார பஞ்சகம்

மூடமொடு தன்சாதி கருமமே பற்றி —
முத்தனும் அவன்நூறு பிறப்பினிலொண் கருமி,
நீடுலகம் இன்மையென நினைந்துபுறக் கரும —
நிட்டனுய் முப்பிறப்பின் முத்தனும் அவனே,
நாடரிய முமுட்சுலகம் கனவெனக்கண் டுள்ளம்
நற்கருமஞ் சேர்ந்துபிறப் பிரண்டுளனப்பியாசி
வீடுலக விவகாரம் நினையாமல் விவேகம் —
மேவியோர் பிறப்பினுன் முத்தனநுபவியே,

(இ—ள்)

| | | |
|---|---|---|
| மூடமொடு தன்சாதி கருமமே பற்றி நூறு பிறப்பினில் முத்தனும் அவன் ஒள் கருமி | — | உடலுயிர் பேதம், அறியா தவன் தன் வருணாச் சிரமத்திற் குரிய கருமங்களைச் செய் பவனாய் நூறு சென்மத்திற்குப் பின் சீவன் முத்தனாதற் குறியவனே சிறந்த கருமகாண்டியாவான். |
| நீடுலகம் இன்மை என நினைந்து புறக் கரும நிட்டன் ஆய் | — | விரிந்தவுலகம் பொய்யென்று பரோட்சமாய், அறிந்து குரு சேவையாகிய பாகிய கர்மத்தில் நிற்பனாய். |
| முற்பிறப்பில் முத்தன் ஆம் அவனே நாடரிய முமுட்சு | — | மூன்று சென்மங்களில் சீவன் முத்தனாகுமவனே அறிதற்கரிய முமுட் சுவாவன். |
| உலகம் கனவு எனக் கண்டு உள்ளம் நல் கருமம் சேர்ந்து பிறப்பு இரண்டு உளன் அப்பியாசி | — | சாக்கிரப் பிரபஞ்சம் சொப்பனம் போல்பொய் யென்றறிந்துதன் மனம் தியானப் பியாசத்திற் பொருந்தி இருக்க பிறப் பிரண்டால் சீவன் முத்தனாவன் அப்பியாசி |
| வீடுலக விவகாரம் நினையாமல் விவேகம் மேவி ஓர் பிறப்பினில் முத்தன் அநுபவியே | — | முன் விட்டவுலக விவ காரத்தைக் கருதாமல் (ஆத்மனாத்மா) விவேக மடைந்து ஓர் சென் மத்தில்சீவன்,முத்தனாதற் குரியவனே அநுபவியாம் |



12 உலகநிலை தோன்றுமற் றன்றிகழ் ஞானத்தால்-
உண்மை முத்தனாமவனே யாரூடன் மற்றும்
உலகமுதல் யாதெனத்தேர் வொடுகுருவை யடைந்தும்
உடம்பாதி பொய்யெனக் கண்டருள் குருவையடைந்தும்
உலகிலொரு குரவன்றன் மகற்குபதேசம் செய்
துறக்கேட்டு முயர்தருஞா நிகளாகி முத்தி
உலகுதொழு விவேகமொடு விரத்திதெய்வ கதியாய்
உற்றிடுவர் மூவரதிகாரிகளாகுவரால்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| உலகநிலை தோன்றுமல் | — | உலக விவகாரம் சிறிதும் தோற்றாது. |
| தன்றிகழ் ஞானத்தால் | — | சுயம்பிரகாச ஆத்ம |
| உண்மை முத்தன் ஆம் அவனே ஆருடன் | — | ஞானத்தினால் உடனே இதே சரீரத்தில் மோட்சப் பேறடைபவனே ஆரூட னென்பதாம். |

(அதிகாரத்திரயம்)

| | | |
|---|---|---|
| மற்றும் உலகில் உலக முதல்யாது எனதேர் வொடு குருவைஅடைந்து | — | மேலும் இவ்வுலகின் கண் செகத் காரணமெது என்கின்ற விசாரத்தோடு சற்குருநாதனைச் சரண டைந்தும் |
| உடம்பு ஆதிபொய் எனக்கண்டு அருள் குருவை அடைந்தும் | — | தேகாதிப் பிரபஞ்சத்தை பொய்யென்றறிந்து கருணாமூர்த்தியாகிய சற்குரு நாதனைச் சரணடைந்தும் |

| | |
|---|---|
| ஒரு குரவன் தன் மகற்கு உபதேசம் செய்துறக் கேட்டும் — | ஓர் ஞானாசிரியர் தன் சீடனுக்கு ஞானோபதேசம் செய்ய அவ்வுபதேசத்தை கேட்டதனாலும் |
| உலகுதொழும் விவேகமொடு விரத்தி தெய்வ கதியால் — | முறையே, உயர்ந்தோர் வாழ்த்தி வணங்கும் விவேகத்தாலும் வைராக்கியத்தாலும் ' தெய்வ கதியாலும் |
| உயர்தரு ஞானிகள் ஆகி முத்தி உற்றிடுவர் மூவர் அதிகாரிகள் ஆவர் — | உயர்வளிக்கின்ற தத்வஞானிகளாய் மோட்சத்தையடைபவர்கள் மூன்றுபேர்கள் முன்சொன்னவரினும் வேருய் அதிகாரிகள் ஆவார்கள். |

## 13 எட்டுவித குருக்கள்

சாதகர்களாஞ் சீடர் பேதத்தால் குரவர்
தாமும் போதக குருவே முதலாக இருநால்
பேதமடை குவரவருட் போதகன் முன்நூலிற்
பெரும்பொருள் கூறிடுபவன்றத் துவந்திகழ்த்துபவனே
வேதகன் நல்வசியாதி யாலிம்மை யின்பம்
வெந்துயரங் குதவுமவ னிசிதகுரு வறத்தை
போதகஞ்செய் திருமையினும் இன்பமருள் பவனே
புகழ்தரு காமியகுருவென் றறைகுவர்மு தறிஞர்.

(இ—ள்)

| | |
|---|---|
| சாதகர்கள் ஆம் சீடர் பேதத்தால் குரவர் தாமும் — | மோட்சத்திற் சாதனம் செய்யும் சீடர்க்கு உபதேசஞ் செய்யும் அதிகார வேறுபட்டால் ஆசாரியர்களும் |



| | |
|---|---|
| போதக குருவே முதலாக இருநால் பேதம் அடைகுவர் அவருள் — | போதகாசிரியர் முதலாக எட்டு விதமாக இருப்பார்கள். அவ்வெண்மருள் (சீடர்க்கு) |
| முன்னூலில் பெரும் பொருள் கூறிடுபவன் போதகன் — | முதனூலான வேதத்தின் (அத்தியயனாதி) தூலார்த்தங்களை போதிக்கின்றவனே போதக குருவாவன் |
| தத்துவம் திகழ்த்து பவனே வேதகன் — | தத்துவார்த்தங்களை விளங்கச் செய்கின்றவனே வேதக குருவாவன் |
| நல்வசியாதியால் இம்மை இன்பம் அங்குவெந்துயர் உதவும் அவன் நிசிதகுரு — | சிறந்த வசியம் ஆகருஷ்ணம் முதலியவற்ருல் இவ்வுலகில் சுகத்தையும் அவ்வுலகில் கொடிய (நரகாதி) துக்கத்தையும் கொடுக்கின்றவனே நிசிதகுருவாம் |
| அறத்தை போதகம் — செய்து இருமையினும் இன்பம் அருள்பவனே புகழ் தருகாமிய குரு— என்று மூது அறிஞர் அறைகுவர் | தர்மசாஸ்திரத்தை உபதேசித்து இம்மை மறுமையென்னும் இரண்டுலகத்திலும் சுகத்தை தருகின்றவனே யாவரும், புகழ்கின்றகாமிய குருவாவன் என்று (இவ்விதம்) ஆசிரியர்கள் பேதங்களை பேரறிஞர்கள் பேசினர், |

14 தூசகனாம் விவேகத்தால் சமைமுதலாம் குணங்கள்
தொகுப்பவன் பொய் விடயமென வான்ம
விருப்பருள்வோன்
வாசகனாம் சிவசீவர் ஐக்கிய ஞானத்தை-
வழங்குமவன் காரகனை யந்தவிர்த்து நிலைத்த
ஆசகலும் முத்தியருள் பவன் விகித குருவாம்
அதிகாரியாவர்கள் என முன்னர் கூறும்
நேசமுறு சீடர்தம்முள் ஒருவன்முத் தாப
நெருப்பினால் வெந்துசிந்தா குலமுடைய னாகி

(இ—ள்)

| | |
|---|---|
| விவேகத்தால் சமை முதலாம் குணங்கள் தொகுப்பவன் தூசகனாம் — | ஆத்மாநாத்ம, விவேக வாயிலாக சமம் முதலாக வுள்ள ஆறு குணங்கள் ஒரு மிக்க வரச் செய்பவன் தூசகனாகிய குருவாம் |
| விடயம் பொய் என ஆன்ம விருப்பு அருள்வோன் வாசகனாம் — | மாயப் பிரபஞ்ச வடிவ, விஷயங்கள் மித்தையா மென்று (கூறும் வாயிலாக) ஆன்மாவின் கண் விருப்ப முண்டாகச் செய்வோன் வாசக குருவாம் |
| சிவ சீவர் ஐக்கிய ஞானத்தை வழங்கும் அவன் காரகனாம் — | பிரம்மாத்ம ஐக்கிய ஞானத்தை (உபதேச மூலமாய்) கொடுப்பவனே காரக குருவாவன் |
| ஐயம் தவிர்த்து நிலைத்த ஆசு அகலும் முத்தி அருள்பவன் விகித குருவாம் — | சந்தேகம் நீக்கி (அதனால்) நித்தியமாய் குற்றமற்ற மோட்ச சாம்ராஜ்யத்தைக் கொடுப்பவனே விகித குருவாம் |



| | |
|---|---|
| அதிகாரி இவர் ஆவர் என முன்னர் கூறும் நேசம் உறு சீடர் தம்முள் ஒருவன் — | இவர்களே அதிகாரிகள் ஆவரென்று முன்னம் கூறிய தில் அன்புற்ற சீடருக்குள் ஒரு சீடனானவன் |
| முத்தாப நெருப்பி னால்வெந்து சிந்தா குலம் உடையன் ஆகி — | + மூன்று துக்கமாகிய அக்கினி யால் வெதும்பிய வியாகுல சித்தம் உடையவனாய் |

+ தனது மூன்றுடம்பால் வரும் துக்கம் அன்னிய புலி பாம்பு, திருடர்களால் வரும் துக்கம் பூதப் பிரேதாதி களால் வரும் துக்கம், இவை முத்தாபம்

## 15 சீடன் விதிப்படி சரணடைதல்

நானாரிப் பவமெனக்கு வந்தவா றென்கொல்—
நசிப்பதெவ ராலெனவாய்ந் தலர்கரந் கொண்டேகி—
ஆனாநற் கல்வியறி வடக்கம்வை ராகம்—
ஆதியாங் குணமுடைச்சற் குருவையடைந்
தெதிர்மண்
ஊனாரப் பணிந்தெழுந்தன் பாற்கரங் குவித்தே
உறவழுத்தி யருட்குருவே யென்பாசத் தொழிவு
தானாமெத்திறத்தினால் ஆம் என வினவல் சீடன்
தனது விதிவத்துபசந் நத்துவமாம் அன்றே

(இ — ள்)

| | |
|---|---|
| நான் ஆர் எனக்கு இப்பவம் வந்த ஆறு என் எவரால் நசிப் பதுஎன ஆய்ந்து — | நானென்பதற்குபொருள் யாது எனக்கிந்தப் பிறவி வந்த விதம் எப்படி (இது) யாரால் நாசமாகும் என்று சிந்தித்து (சாதி முதலியவற் றுல் யான் உயர்ந்தவன் என்னும் புத்தியை நீக்கி) |

| | |
|---|---|
| அலர்கரம் கொண்டு — ஏகி | பத்திர புட்ப பழாதிகளை கைப் படையாக கொண்டு சென்று, |
| ஆனாத நல்கல்வி — அறிவு அடக்கம் வைராகம் ஆதியாம் | கெடாத சிறந்த (வேதாந்த) வித்தை விவேக ஞானம் வினயம் வைராக்கிய முதலிய |
| குணமுடையச் சற் — குருவை அடைந்து | நற்குணங்களையுடைய சற்குரு நாதனைச் சரணடைந்து |
| எதிர் மண் ஊனார — பணிந்து எழுந்து | அவர் சன்னிதானத்தில் (வந்து) மண்ணின்கண் (தன்) உடம்பு பொருந்த வணங்கி எழுந்து நின்று |
| அன்பால் கரம் — குவித்துஉறவழுத்தி அருள்குருவே | பயபக்தியால் கை கூப்பி சிரசின் மீது வைத்துக் கொண்டு மிகத் தோத்திரம் செய்து, கிருபா சமுத்திரமாகிய சற்குரு மூர்த்தியே |
| என் பாசத்து ஒழிவு — எத்திறத்தினுல் ஆம் | எனது அஞ்ஞானத்திற்கு நாசம் எந்த விதத்தினுல் ஆகும். |
| என வினவல் சீடன் — தனது விதிவத்துஉ பசன்னத்துவம் ஆம் | என்று கேட்டு விண்ணப்பம் செய்வது சீடனது விதிப்படி சரணமடையும் தன்மையாகும் |

16 அனையவனததிகாரந் தெரிந்தருளால் நோக்கி—
அஞ்சலோம்பென்ற பய கரஞ் சிரத்திலிருந்தி,
புனையவருஞ் சுருதி யுக்தியாலவன தநான்ம—
புத்தியினை யொழித்துத்தா தான்மிய
வாக்கியத்தால்,



நினையவரும் ஒரு பிரம நீயேயென் றுள்ள,
நிலையயுணர்த்துதல் குரவன் உபதேசமாகும்,
இனைய வுபதேச முறையுத்தேசத் துடனே
யிலக்கணஞ் சோதனையெனு முன்றினையுமுடைத்
தாமல்

இ — ள்

| | |
|---|---|
| அனையவனது — அதிகாரம் தெரிந்து | அவ்விதம் வினாவிய, அந்தச் சீடனது பக்குவத் தைச் சோதித் தறிந்து |
| அருளால் நோக்கி — | கருணையுடன் (பாவமகலும் படி) பார்த்து |
| அஞ்சல் ஓம்பு — என்று அபயகரம் சிரத்தில் இருத்தி | நீ பயப்பட வேண்டாம் யாம் உபதேசிப்பதை, பாதுகாப் பாய் என்று கூறி அபயாஸ் தத்தை அஞ்ஞான நீங்கி ஆன்ம ஞானம் உதிக்கட்டும் என்று அவன் சிரசின் மீது வைத்து |
| புனைய வரும் சுருதி — யுக்தியால் அவனது | சுரங்களால் அலங்கரித்துவரும் உபநிடத வாக்கியத்தாலும் யுக்தியினாலும், அவனுடைய |
| அநான்ம புத்தி — யினை ஒழித்து | தேகாதிகளில் தானென்ற புத்தியை நீக்கி |
| தாதான்மிய — வாக்கியத்தால் | சீவப்பிரம்ம அபேதத்தைத் தத்துவ மசிமகா வாக்கிய உபதேசத்தால் |

| | | |
|---|---|---|
| நினையல் அரும் ஒரு பிரமம் நீயே என்று | | நினைத்தற்கரிய ஒப்பற்ற பரப் பிரம்மம் நீயாயிருக்கின்ருய் என |
| உள்ள நிலையை உணர்த்தல் குரவன் உபதேசம் ஆகும் | — | யதார்த்த நிலையினை அறிவித் தலே குருவினால் செய்யு முபதேசமாம் |
| இனைய உபதேச முறை | — | இவ்வுபதேசக் கிரமம் |
| உத்தேசம் உடன் இலக்கணம், சோதனை எனும் முன்றினையும் உடைத்து | — | உத்தேசமுடன் இலக்கணை சோதனையென்று முவித மாயிருப்பதாம் |

(உத்தேசம் முதலியன கூறல்)

17 அறிய வுணர்த்துறு பொருளை நாமமாத் திரத்தால்
அறைந்திடுதல் உத்தேச மாங்களகம் பளமாம்,
குறியுடையதானெனல் போலப் பொருளில் சிறந்த
குறியுரைத்த லிலக்கணமவ் விலக்கியமாம் பொருளில்
செறிவுறுமவ் விலக்கண முண்டோ விலையோ வென்ன
தெரிந்திடுதல் பரிட்சையோர் பொருளறிந்து பெறற்கு
பொறியுறல் செய் காட்சியாம் அளவை முதலாக-
பொருந்துபிர மாணங்கள் எட்டுளவாம் அன்றே 17



(இ—ள்)

| | | |
|---|---|---|
| அறிய உணர்த்துறு பொருளை நாம மாத்திரத்தால் அறைந்திடுதல் உத்தேசம் ஆம் | — | அம்முன்றினுள் சீடன், அறியும்படி (அவனுக்கு) அறிவிக்கும் பொருளை பெயர் மாத்திரம் (ஆசிரியர்) கூறுதல் உத்தேசமாம் |
| களம், கம்பளமாம் குறி உடையது ஆன் எனல் போல் அப் பொருளில் சிறந்த குறி உரைத்தல் இலக்கணம் ஆம் | — | கண்டத்தின் கண் கம்பளம் போலும் ஆடுதோலாகிய அடையாளம் உடையது ஆவென்பது போல் அந்தப் பொருளில் சிறந்த அடையாளம் கூறல் அசாதாரண தர்மமான இலக்கணமாம் |
| அவ்விலக்கியமாம் பொருளில் செறிவுறும் அவ்விலக்கணம் உண்டோ இல்லையோ என்ன தெரிந்திடுதல் பரிட்சை | — | அந்த இலக்கியமாகிய பொருளின் கண், அந்த இலக்கணமிருக்கின்றதா இல்லையா என்று ஆராய்ந்து பார்த்தல் பரீட்சையாம் |
| ஓர் பொருள் அறிந்து பெறற்கு | — | ஒரு பொருளினையுணர்ந்து பெறுதற்கு |
| உறல் செய் பொறி காட்சியாம் அளவை முதலாக | — | விஷயங்களில், கூடுகின்ற இந்திரியங்களாகிய பிரத்யட்சப் பிரமாண முதலாக |
| பொருந்து பிரமாணங்கள் எட்டு உளவாம் | — | மதவாதிகளுக்குப்பொருந்திய பிரமாணங்கள் எட்டு விதமாயிருப்பதாம் |

கடமுதலா மவற்றினது காண்கையது தானே,
காட்சி புகையாலங்கி ஞான மனுமானம்
திடமருவு மவ்வநுமானம் பதிஞ்சையேது
திட்டாந்தம் ஏனுமங்கம் உடைத்தவற்றுட்
பதிஞ்சை
இடமலை வெவ் வழலுடைத்தென்பது புகை
யுண்மையினால் —
எனலேது மடைப்பளி போல் என்பது
திட்டாந்தாம்,
உடைமையுணர் ஆத்தனுரையானதி தீராதி —
யுறுகனியாதிகளுண்மை ஞானமா கமமாம். 18

(இ—ள்) [பிரத்யட்சப் பிரமாணம்]

| | | |
|---|---|---|
| கடம் முதலாம் அவற்றின் காண்கை அதுதானே காட்சி | — | அந்தப் பிரமாணங்களுள் கடமுதலாயுள்ள அவ்வப் பொருளின் பிரத்யட்ச ஞானத்திற்கு சிறந்த காரணமாயுள்ள நேத்திரமுதலிய இந்திரியங்களே பிரத்யட்ச பிரமாணங்களாம், |

## அநுமானப் பிரமாணம்

| | | |
|---|---|---|
| புகையால் அங்கி ஞானம், அநுமானம் | — | இம்மலை, புகையுடைத்து என்னும் ஞானத்தால் (அது) நெருப்புடைத்தென்னும் ஞானத்தையுண்டு பண்ணும் புகை ஞானம் அனுமானப் பிரமாணமாம். |
| திடமருவும் அவ் வநுமானம் பதிஞ்சை ஏது திட்டாந்தம் எனும் | — | உறுதியமைந்த அந்த அநுமானப் பிரமாணம், பிரதிஞ்சை ஏது திருஷ்டாந்தம் என்று கூறப்படுகின்ற |



| | | |
|---|---|---|
| அங்கம் உடைத்து அவற்றுள் இடமலை வெவ் அழல் உடைத்து என்பது பதிஞ்சை | — | மூன்று அவயவமுடையது அம் மூன்றினுள் பெரிதான (இம்) மலை வெம்மையான அக்கினியை யுடையது என்பது பிரதிஞ்சா வாக்கியம் |
| புகை உண்மை யினால் எனல் ஏது மடைப்பள்ளி போல் என்பது திட்டாந்தம் | — | புகையுடைமை யாலென்பது ஏதுவாம், அடுக்களை போலென்பது திருஷ்டாந்தமாம். |

## சப்தப் பிரமாணம்

| | | |
|---|---|---|
| உடைமை உணர் ஆத்தன் உரையால் | — | உள்ளபடி பொருள்களின் இருப்பை உணர்ந்துள்ள உண்மையுரைப்போன் வாக்கியத்தால் |
| நதிதீராதி உறுகனி யாதிகள் உண்மை ஞானம் ஆகமம் ஆம் | — | ஆற்றங்கரை முதலியவற்றில் பொருந்திய பழ முதலியன (இருக்கின்றன) என்னும் யதார்த்த ஞானம் உண்டாமிடத்து அவ்வார்த்தை ஆகமப் பிரமாணமாகும் |

பகற்பொழுதுண்ணானொருவன் இளையாமை
கண்டு பரிந்திரவுண் கற்பித்தல் காணருத்தா பத்தி
அகத்தினிலையுறு தேவதத்தனெனில் இருப்பன்
அவன் வேறோரிடத்திலெனத் தெரிந்திடுதல்
தன்னைத் தகப் பெரியர் கேள்வியருத் தாபத்தி
யென்பர்
தகும் பசுவோடொக்கு மரையெனுமொழி
கேட்டிருந்தோன் புகப்படரும் வனத்திலதன் விடய
ஞானந்தான் பொருந்தலே யுவமானப் பிரமாணம்
ஆகும். 19

(இ—ள்) (அர்த்தாபத்திப் பிரமாணம்

பகல் பொழுது உண்ணான் ஒருவன் — அவ்விரண்டனுள், பகல்காலத்தில் உணவு உண்ணாத ஒருவனதுஉடம்பு

இளையாமை கண்டு — இளையாமல் (பருத்திருத்தல்) பார்த்து

பரிந்து இரவு ஊண் கற்பித்தல் காண் ஆருத்தா பத்தி உறுதேவதத்தன் அகத்தில் இல்லை எனில் — விரும்பி (காணப்படும் பருமைக்குக் காரணமான) இராத்திரி போஜனத்தைக் கற்பிப்பது திருஷ்டார்த்தா பத்தியாம் (ஒருவன் உடலோடு) பொருந்திய தேவதத்தனென்பவன் வீட்டின் கண் இல்லை என்று கூறுவானாயின்

அவன் வேறோர் இடத்தில் இருப்பன் என — அதனைக் கேட்ட மற்றொருவன் அத்தேவத்தன் வேறிடத்தில் உயிரோடிருக்கின்றானென்று

தெரிந்திடுதல் தன்னை — ஆராய்ந்து பொருளுணர்வதை

தகப்பெரியர் கேள்வி அருத்தா பத்தி என்பர் — தகவுற்ற பேரறிஞர் சுருதார்தா பத்தியென்று கூறுவர்

## உபமானப் பிரமாணம்

தகுபசுவோடு ஒக்கும் மரை எனும் மொழி கேட்டிருந்தோன் — தகுதியுடைய ஆவைவொக்கும் ஆமா என்னும் வார்த்தை கானகத்திலிருப்போன் கூறக் கேட்டிருந்தவன்



படரும் வனத்தில் புகு அதன் விடய ஞானம் தான் பொருந்துதலே உவமானப் பிரமாணம் ஆகும் — விரிந்திருக்கும் காட்டின் கண் சென்று, காட்டுப் பசுவை கண்டு அக்காட்டுப் பசுவின் கண்ணுள்ள ஆஒப்புவமை ஞானத்தால் (ஆவின் கண் ஆமாவின் ஒப்புவமை ஞானமாகிய) விடய ஞானத்தை தான் அடைதலே உபமானப் பிரமாணமாகும்

## 20, அநுபலப்திப் பிரமாணம்

இந்நிலனில் கடமில்லை யென்பதானால் தோன்றும்
இன்மை யுணர் வபாவமா மாயிரமாகிய வெண்
தன்னிலொரு நூறெனும் எண்ணுண்டெனு ஞானந்தான்
சம்பவமாமிம் மரத்தில் இயக்கனுளனென்னுஞ்
சொன்னிகழ்வில் வருமியக்க விடயவுணர் வதனைச்
சொற்றிடுவர் அறிஞரை திக மாகு மளவை, என்ன
விவண்டொகுத்துரைத்தகாட்சி முதலாயஎண்வகையில்
சமயர் கொளல் இன்னவென வுரைப்பாம்.

(இ—ள்)

இந் நிலனில் கடம் இல்லை என்பதனல் தோன்றும் இன்மை உணர்வு அபாவம் — இப்பூமியின் கண் கடமானது விளங்கவில்லை என்னும் காரணத்தால் (ஈண்டு கடமில்லையெனத் தோன்றுகின்ற கடத்தின்) அபாவ ஞானம் அநுபலப்திப் பிரமாணம். ஆம்

## சம்பவப் பிரமாணம்

| | | |
|---|---|---|
| ஆயிரம் ஆகிய எண்தன்னில் ஒரு நூறு எனும் எண் உண்டு எனும் ஞானந்தான் சம்பவம் ஆம் | — | ஆயிரமென்னும் எண்ணின் கண் ஒரு நூறெனு மெண்ணானது உண் டென்னும் ஞானமே சம்பவப் பிரமாணம் ஆம் |

## ஐதீகப் பிரமாணம்

| | | |
|---|---|---|
| இம்மரத்தில் இயக்கன் உளன் என்னும் சொல் நிகழ்வில் வரும் | — | இந்த (ஆல) மரத்தின் கண் யட்சனிருக்கின்றான் என்கின்ற வார்த்தை விளங்கி வருவதால் உண்டாகின்ற |
| இயக்க விடய உணர்வு அதனை ஐதீகம் என்ன அறிஞர் சொற்றிடுவர் | — | இவ்வால மரத்தில் யட்ச னிருக்கின்றான் என்னும், யட்ச விடய ஞானத்தை ஐதீகப் பிரமாணமென்று அறிவுடையோர் கூறுவார்கள் |

## அஷ்டப் பிரமாணங்கள் என்று சமயர்களின் கோட்பாடு

| | | |
|---|---|---|
| அளவை என்ன இவண் தொகுத்து உரைத்த காட்சி முதல் ஆய | — | பிரமாணங்களென்று ஈண்டுத் தொகுத்துக் கூறிய பிரத்தி யட்சப் பிரமாணம் முதலாகிய |
| எண்வகையில் சமயர் கொளல் இன்ன என உரைப்பாம் | — | எட்டுப் பிரமாணங்களுள் சார்வாகர் முதலிய, சமய வாதிகள் கொள்ளுதல் இவையாம் எனக் கூறுவாம் |



புகல் உலகாயதனுக்குக் காட்சியொன்றே சைன
புத்தவை சேடியர் தமக்கு இரண்டு அனு
மானத்தோடு
உகலரும் சாங்கியருக்கு மூன்று உரையொடு
நான்குவமை
யொடு நியாயர்க்கு அருத்தா பத்தியொடு
ஐந்தாகும்
மிகுபிரபாகரற்கு ஆறாம் அபாவமொடு பாட்ட
வேதாந்திகட்கு ஆகுமென அறிக தெரிவுற்று
இகலரும் ஓண் புராணிகர்கர்கள் தமக்கு அளவை
யெட்டாமென்று உரைப்பர் சம்பவ ஐதிகங்கள்
உடன் அன்றே 21

| | | |
|---|---|---|
| புகல் உலகாயத னுக்குக் காட்சி யொன்றே | — | ஈசனில்லை சீவனில்லை என்று கூறுகின்ற சார்வாகனுக்குப் பிரத்தியட்சம் ஒன்றே பிரமாணமாம். |
| சைன புத்தவை சேடியர்கள் தமக்கு அனுமானத்தோடு இரண்டு | — | சைனர் பௌத்தர் வை சேடியர் என்பவருக்கு அனுமானப் பிரமாணத்தோடு இரண்டாம். |
| உகலலும் சாங்கிய ருக்கு உரையோடு மூன்று | — | கெடாத சைவரோடு சாங்கி-யர்க்கு ஆகமப் பிரமாணத் தோடு மூன்றாகும். |
| நியாயர்க்கு உவமை யொடு நான்கு | — | தார்க்கீகருள் மற்றொரு வகை யினரான நியாயருக்கும் உவமான பிரமாணத்துடன் நான்காம். |
| மிகு பிரபாகரர்க்கு அருத்தாபத்தியுடன் ஐந்தாம் | — | மேன்மைமிகுந்த பிரபாகரர்க்கு அருத்தாபத்தி பிரமாணத் துடன் ஐந்தாகும் |

| | | |
|---|---|---|
| பாட்ட வேதாந்தி | — | பட்டர் வேதாந்திகள் என்பவருக்கு |
| கட்கு அபாவமொடு ஆறும் | | அநுபலப்திப் பிரமாணத்துடன் ஆறுகும். |
| ஆகும் என தெறிவுற்று அறிக | | இவ்விதம் மத பேதத்தால் பிரமாணங்கள் அவரவர்களுக்கு, ஆகுமென்று ஆராய்ச்சி செய்து அறிவாயாக |
| இகலறும் ஒண்புராணிகர்கள் தமக்கு சம்பவ ஐதீகங்களுடன் அளவை எட்டாம் என்று உரைப்பர் | — | மாறுதலற்ற நல்ல புராணிகர்கள் தமக்கு சம்பவம் ஐதீகப் பிரமாணத்துடன் எட்டுவிதம் என்று பிரமாணங்களின் வேறுபாட்டினைக் கூறுவார்கள். |

[வேதாந்திகட்கு உபயோகமான ஆறுபிரமாணங்கள் பிரம்ம சாட்சாத்கார ஞானத்திலும் பத்தாமவனது ஞானத்திலும் சத்தம் கரணமும் மனமும் நேத்திரமும் சகாரிகளாம். அவ்வாறே பிரமத்தின் அபரோட்ச ஞானமாகிய பிரமைக்குக் கரணம் மகாவாக்கியமாகிய சத்தமும் சாதனங்களால் சம்ஸ்கரிக்கப்பட்ட மனமும் சககாரியாம் ஆனதால் விஷய சேதனத்தோடு விருத்தி சேதனத்திற்கு உண்டாம் அபேதமே பிரத்யட்ச ஞானமென்னும் இலக்கணத்தினல் பிரத்தியட்சப் பிரமானமும் சப்தப் பிரமாணமும் இரண்டும் பிரம்ம சாட்சாத்கார ஞானத்தில் உபயோகமாம் மற்ற நான்கும் மனனத்தில் உபயோகமாம்.]

## 22 திருக்கு விவேகம்

திருந்தியவே தாந்தநூல் இயம்புறுவ திருக்குத்-
திருசிய மென் றிருபொருளங் கவற்றின் முதல் திருக்கில்
வரைந்திடுவ சுவகதந்தன் சாதிவிசா திகளாம்-



மற்றவைமுன் றினுக்குமுதா ரணமுறையே மொழியில்
விரிந்தநிழல் தருநெடும்பூம் பணைமரமொன் றிற்கு-
ஞிமிரினங்கள் புக்குமுகத் துழுதுபெரு குறுதேன்
அருந்துநறு மலர்முதலாயினவும் வே றுள்ள-
அணிமரமும் கல்முதலா யினவும் போலாம்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| திருந்திய வேதாந்த நூல் இயம்புருவ | — | திருத்தமாயுள்ள வேதாந்த சாஸ்திரங்களால் கூறப்படுவன. |
| திருக்கு திரிசியம் என்று இருபொருள் | — | அறிவென்றும் அறிபடும் பொருளென்றும் இருவகைப் படும், |
| அவற்றுள் முதல் திருக்கில் வரைந்திடுவ | — | அவ்விரண்டு பொருட்களில் முதலில் திருக்குப் பொருளினின்றும் நீக்கப் படுவன |
| சுவகதம் தன் சாதி விசாதிகளாம் | — | சுவகத பேதம் சசாதி பேதம் விசாதி பேதமென் பனவாம் |
| முறையே உதாரணம் மொழியின் | — | அம்மூன்றிற்கும், கிரமமாக உதாணம் கூறுமிடத்து |
| விரிந்த நிழல் தரு நெடும் பூம் பணைமரம் ஒன்றிற்கு | — | பரந்த நிழல் தருகின்ற நீண்டு உயர்ந்தழகிய கிளைகளையுடையவிருட்சத்திற்கு |
| ஞிமிறு இனங்கள் புக்கு முகத்து உழுது | — | வண்டுக் கூட்டங்கள் உள்ளே சென்று மலரும் பக்குவத்துள்ள பேரரும்பைத் தனது முகத்திலுள்ள மூக்கால் கிளறி |

பெருகுறுதேன் அருந்து நறுமலர் முதலாயினவும் — அதனுல், பெருகுகின்ற தேனுண்கின்றவாசனையுடைய புஷ்ப முதலியனவும்

வேறு உள்ள அணி மரமும் கல் முதலாயினவும் போலாம் — அம்மரத்திற்கு வேறாயுள்ள அழகிய மரமும் கல் முதிலியன போல் வனவாம்.

(பொருள் நான்குவிதம் அவற்றுள் சேதனம் பாரமார்த்திகம் மாயாப் பிரபஞ்சம் வியாவகாரிகம் கயிற்றரவு கானல் நீர் சொப்பன முதலிய பிராதிபாசிகம் மலடி மகள் முயல் கொம்பு முதலியனதுச்சம் ஆம்)

## 23 பேதநிரா கரணம்

நிரவயவ மாதலினா னுஞ்சத்து வேறு
நிகழாமை யானுமிறை தனக்குமுதல் நடுவின்
றொருவுறுக விவ்வுலக காரணமா மாயை
உண்மையினா னிறுதியதி லென்பதென் கொலென்னில்
வரைவுதரு சித்திரிகன் சித்திரசத் தியைப்போல்
மாயையுஞ் சந்மாத்திரமாம் பிரமத்தின் வேறாய்த்
தெரிவதிலா மையினென்றுஞ் சச்சிதா நந்த
சிவத்தினுக்கு விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே

(இ—ள்)

நிரவயவம் ஆதலினாலும் வேறு சத்து நிகழாமை யானும் — சத்ருபப் பிரம்மம் ஆகாயம் போல, அவயவ மில்லாததாலும் அதற்கு வேறாக சத்துப்பொருள் விளங்காமை யாலும்

இறை தனக்கு முதல் நடுவு இன்று ஒருவுறுக — அச்சத்ருப, பிரம்மத்திற்கு சுவகத பேதமும், சசாதீய பேதமும் இல்லையென்றவற்றை விட்டு விடுக



இவ்வுலக காரணமாம் மாயை உண்மையினுல் — இந்த வுலகத்திற்கு பரிணாமியுபாதான காரண மாயுள்ள மாயையிருத்தலால்

இறுதியது இல் என்பது என்கொல் என்னில் — முடிவில் கூறிய விசாதீய பேதம் இல்லையெனக் கூறல் எவ்விதம் என வினவில்

வரைவு தரு சித்திரிகன் சித்திர சத்தியைப் போல் — ஓவியம் எழுதுகின்ற ஓவியக் காரனது சித்திர சக்தியானது தனக்கு வேறில்லாதது போல்

மாயையும் சன்மாத்திரமாம் பிரமத்தின் — செகத்காரண மாயையானது சத்ருப பிரம்மத்திற்கு

வேறாய் தெரிவது இலாமையில் என்றும் சச்சித்து ஆனந்த சிவத்தினுக்கு — வேறாக விளங்காமையாலே எப்போதும் முக்காலத்தும், இருப்பு விளக்க இன்ப ரூப பிரம்மத்திற்கு

விசாதி இலை என்று தெரிந்து உணர்க — விசதீய பேதமும் இல்லையாம் என்று ஆராய்ந்துணர் வாயாக

சத்ருப பிரம்மத்திற்கு சுசாதி விசாதி சுவகதமாகிய மூன்று பேதங்களும் இல்லையென்றறியவும். 23

## 24 பேதநிராகரணத்திற்கு சுருதிப் பிரமாணம்

சுருதியினுள் ஏகமேவரத் வைதம் என்னும் —
சொற்கிடையுள் ஏகமெனும் சொல்லதனுக் கயிக்கம்
அரிதிலுணர் ஏவமெனு மிடைச் சொல்லுக்குத்
தேற்றம்.
அத்துவிதமெனு மொழிக்குத் துவிதவிலக்காகக்

கருதுபொருள் வருதலினால் இம்முறையே மாயா
கற்பனைகள் கடந்து நிரவயவமாயென்றும்
திரிதலில் சின்மயமாகும் ஒரு பிரமந் தனக்குத்
தெரித்த சுவகத முதலாயின மூன்றும் இலையே

(இ - ள்)

| | |
|---|---|
| சுருதியின் உள் ஏகம் ஏவா அத்து விதம் என்னும் — | சாம வேதத்தின் கண் ஏகமே வாத்துவிதம் என்று கூறப் படுகின்ற |
| சொற்கு இடையுள் ஏகம் எனும் சொல்லதனுக்கு அயிக்கம் — | வாக்கியத்துள் இருக்கின்ற ஏகமென்னும் சொல்லுக்கு சீவப்பிரம்ம ஐக்கியமும் |
| அரிதில் உணர் ஏவா எனும் இடைச் சொற்கு தேற்றம் — | அருமையாயுணர்குரிய ஏவ என்னும் நடுவிலிருக்கும் பதத்திற்கு நிச்சயமும் |
| அத்துவிதம் எனும் மொழிக்குதுவித — | அத்துவிதம் என்னும் பதத் திற்கு இரண்டாவது பொருளில்லை |
| விலக்காககருது பொருள் வருதலினல் — | யென்றாராய்ந்து அறிதற் குரியஅர்த்தம் (இலக்கண முறையாகப் பெற்று) வருவதால் |
| இம்முறையே மாயா கற்பனைகள் கடந்து — | இக்கிரமமாக மாயா கற்பிதங் கள் (இயல்பாகவே) நீங்கியிருக்க |
| நிரவயவமாய்என்றும் திரிதல் இல் சின்மயம் — | நிரவயவமாய் எக்காலத்தும் மாறுதலின்றிய சித்பிரகாசமா |



| | |
|---|---|
| ஆகும் ஒரு பிரமம் தனக்கு | யுள்ள ஒப்பற்ற பிரம்ம சொருபத்திற்கு |
| தெரித்த சுவகத முதலாயின மூன்றும் இலை — | முன் கூறிய சுவகாதி பேதங் கள் மூன்றும் இல்லையென் பதாம் |

வி - ஏக மேவாத்துவிதீயம் என்பதன் கண்ணுள்ள ஏகமென்னும் பதம் சுவகதபேதமும், ஏவா என்னும் பதம் சசாதீய பேதமும் அத்துவிதமென்னும் பதம் விசாதீய பேதமும் பிரம்மத்திற்கு இல்லை என்பதை விளக்குவதாம். 24

## 25 கற்பிதம் இரண்டு

அத்தியா ரோபம வாதமென விரண்டாய் —
அறைகுவர் கற் பிதமத்தி யாரோப முள்ள
சுத்தியூ டிலாதவிர சதம் விளைதல் போலச் —
சொல் பிரம சத்தினில்லா வுலகதுகற் பித்தல்,
எய்த்திதுதான் வெள்ளியதன் றிப்பியெனல் போலோர்ந்
தின்றுலகம் பிரமமெனத் தெளிதலப வாதம்
மெய்த்த பொருள் அறியுமிலக் கணமூன்றா மவை தாம்
விளங்கதத் வியாவிருத்தி தடத்தமொடு சொருபம்

(இ—ள்)

| | |
|---|---|
| கற்பிதம் அத்தியா ரோபம் அபவாதம் என — | மனோ பாவனையான பொய்த் தோற்றம் அத்தியா ரோபம் அப வாதமென்று இருவிதமா யிருக்கு மென்றுஅதனை மேலோர் கூறுவார்கள் |
| அத்யா ரோபம் — | அவற்றுள் அத்தியா ரோபமாவது |

| | | |
|---|---|---|
| உள்ள சுத்தி ஊடு இலாத இரசதம் விளைதல் போல் | — | வியாவ காரியமாய், இருக்கும் இப்பியின் கண் இல்லாத வெள்ளி கற்பிதமாகத் தோன்றுதல் போல் |
| சொல் பிரமசத்தின் இலா உலகத்து கற்பித்தல் | — | உபநிடதங்கள் கூறும் சத்ருப பிரம்மத்தின் கண் இல்லாத மாயாப் பிரபஞ்சம் கற்பித மாக தோற்றுதலாம் |
| அபவாதம் எய்த்து இது தான் வெள்ளி அன்று இப்பி எனல் போல்ஓர்ந்து உலகம் இன்று பிரம்மம் என தெளிதல் அபவாதம் | — | அபவாதமாவது ஆராய்ந் தறிந்து இது வெள்ளியல்ல கிளிஞ்சலே என்றுள்ளபடி யுணர்தல் போல் விசாரித்து தேகாதிப் பிரபஞ்சம் இலதென்றும் பிரம்மமேயுள தென தேர்ந்தறிவதே அபவாதமாம் |

## பிரம்ம லெட்சண விவேகம்

| | | |
|---|---|---|
| மெய்த்த பொருள் அறியும் இலக்கணம் மூன்றாம் | — | சுபாவ சித்தமாயுள்ள பிரம்ம வஷ்துவை அறிதற்குத் காரணமான இலக்கண மூன்று விதமாம் |
| அவை தாம் விளங்கு அதத்துவாவிருத்தி தடத்தமொடு சொருபம் | — | அவ்விலக்கணங்கள் அதத்வாவிருத்தி தடஸ்தம் சொருபமெனப்படும் |





26 ஆகமுதலன நேதி யதுசெய்து நின்ற
வாருயிரை யறிவித்தல் அதத்விய விருத்தி
சாகைநுனி மதியுளதென் றுணர்தலிற் பூதாதி
சகமாய காரணகொண் டறிவுணர்த்தல் தடத்தம்
மாகனலி விளங்குகதிர்ச் சொருபனெனல்
போலான்
மாவினிச சொருபமிது வெனவுணர்த்தல் சொருபம்
நீகடவு சொருபநிசம் சச்சிதானந்தம்
நித்தியம் பூரணமாக நீ நினைந்து கொள்ளே

(இ — ள்)

| | | |
|---|---|---|
| ஆக முதலன நேதியதுசெய்து | — | அம்மூன்றனுள் தேகாதி யனான்மப் பொருள்களை இஃதான் மாவன்று அன்றென நீக்கி (என்றும்) |
| நின்ற ஆர் உயிரை அறிவித்தல் அதத்வியா விருத்தி | — | நிங்காது நிலை நிற்கும் ஆன்மாவை அறிவித்தலே அதத்வியா விருத்தி லெட்சணமாம் |
| சாகை நுனி மதியுளது என்று உணர்த்தல் இல் | — | இம்மரக்கிளையின் நுனியின் கண் மூன்றாம் பிறைச் சந்திரன் இருக்கின்றான் எனக் கூறி அக்கிளையைக் காட்டி சந்திரனைக் காட்டுவது போல |
| பூத ஆதி ஆயசெகம் காரணம் கொண்டு | — | பஞ்ச பூதங்களை முதற் காரணமாகவுடைய உலகத் திற்கு ஆத்மா அபின்ன நிமித்தவுபாதான காரண மாயிருக்கிறதென்று கூறி அக்காரணமாயிருத்தலைக் கொண்டு |

அறிவுணர்த்தல் தடத்தம் — ஆத்மாவை அறிவித்தல் தடஸ்த லெட்சணமாம்.

மாகனலி விளங்கு கதிர் சொருபன் எனல் போல் — பெருமையிற் சிறந்த சூரிய பகவான் ஆயிர கிரணங்களை யுடையவன் என்று கூறுதல் போல்

ஆன்மாவின் நிச சொருப இதுஎன உணர்த்தல் சொருபம் — ஆத்மாவின் உண்மை வடிவம் இதுவாமென்று (அபரோட் சமாய்) அறிவிப்பதே சொருப லட்சணம்.

நீ கடவு நிச சொருபம் சச்சி தானந்தம் நித்தியம் பூரணம் ஆக நீ நினைந்து கொள்ளே — நீ வினவும் 5 வித உண்மை சொருபம் சத்துசித்து ஆனந்தம் நித்தியம் பூரணம் ஆக இருப்பதென்று நீ சிந்தித்துக் கொண்டிருக்கக் கடவாய். 26

மதித்தன் மதியாமைநன வாதிகளிற் நனக்கோர்
வாதையிலா துண்டெனல் சத் தவத்தை
யனைத்தினுமே
உதித்தவிட யங்களை நின் றறிந்திடுதல் சித்தாம்-
உவப்பினுக்கு விடயமாந் தன்மையானந்தம்
திதித்தசதோ தித நித்தம் அனைத்தினும் சாதகமாந்
திறத்தினால் அனைத்தினுஞ்சம் பந்த நிறை
வெனவே
விதித்திடுக உயிர் சச்சிதானந்த மயமேல்
விளங்கியதில் அவற்றுளானந்த மெங்குமெனவே. 27

(இ-ள்)

மதித்தல் மதியாமை — ஒன்றனை அறிதல், (பிறி தொன்றனை) அறியாமை



நநவாதிகளில் தனக்கு ஓர் வாதை இலாது உண்டு எனல்சத்து — என்பவற்றிலும் காமாதி விருத்திகள் தோன்றுமிடத்து தோன்றுவிடத்து (ஒன்றின் மேலொன்றாக மாறி மாறி வருகின்ற) சாக்கிராதி அவஸ்தைகளிலும் தனக் கொருவித கேடுமில்லாமல் இருக்கும் தன்மையே ஆன் மாவின் சத்ருபமாம்,

அவத்தை அனைத்தினும் — சாக்கிர முதலிய எல்லா அவஸ்தைகளிலும்.

உதித்தவிடயங்களை — தோன்றா நின்ற சப்த முதலிய விடயங்களை

நின்று அறிந்திடுதல் சித்தாம் — மாறாமல் இருந்தறிவதே (ஆன்மாவின்) சித்துருபமாம்.

உவப்பினுக்கு விடயமாம் தன்மை ஆனந்தம் — பரமப் பிரீதிக்கு விஷய மாவதே ஆன்மாவின் ஆனந்த ருபமாம்.

திதித்த சதோதிதம் நித்தம் அனைத்தினும் சாதகமாம் திறத்தினால் — நிலை பெற்ற சதோதய மாவது (ஆன்மாவின்) நித்திய ருபமாம்.

அனைத்தினும் சாதக மாம் திறத்தினால் — கற்பிதப் பொருள், எல்லா வற்றிலும் அதிஷ்டான மாயிருக்கும் தன்மையினால்

அனைத்தினும் சம்பந்தம் நிறைவு எனவே விதித்திடுக உயிர்சத்சித்து — கடத்திற்கு மண் போல கற்பிதப் பொருள் எல்லா வற்றிலும் (பூரணமாய் கூடி யிருப்பதே (ஆன் மாவின்)

ஆனந்த மய மேல் — பூரண ரூபாமாமென்றும் ஆராய்ந்தறி வாயாக ஆத்மா சச்சிதானந்த சொருபமா யிருக்கு மேல்

அவற்றுள் ஆனந்தம் எங்கும் விளங்கியது இல் எனின் — அச் சச்சிதானங்களில் ஆனந்தமானது சத்தும் சித்தும் போல சர்வ விருத்தி களிலும் விளங்குதலில்லையே (அதனால்) ஆத்மா ஆனந்த வடிவமன்று என்று வினவினால் 27

## 28 திருஷ்டாந்தம்

வெம்மையொளி யுருவாய வழல் விளக்கின் ஒளியே
விளங்கியிடும் புனலிடத்தின் வெம்மையே விரியும்
வெம்மையொளி யிரண்டுமெழும் விறகினிலவ்
வகைபோல்
விமலசத்தொன்றே திகழுங்கன் முதலாமவற்றின்
மெய்மை தவிர் புத்தியது தமோ குணத்தின் மூட
விருத்தியினும் இராசதத்தின் கோர விருத்தியினும்
மெய்மையொடு சித்தாகும் சத்துவத்திற் சாந்த
விருத்தியிற் சச்சிதானந்தங்கள் தோன்றும்
(இ—ள்)

வெம்மை ஒளி உருவு ஆய அழல் விளக்கின் ஒளியே விளங்கியிடும் — சூடும் பிரகாசமும் வடிவா யுள்ள தீ, விளக்கின் கண் பிரகாசமே விளங்குவதாம் அதன் சூடு விளங்குவதில்லை

புனல் இடத்தில் வெம்மையே விரியும் — அக்கினியின் சம்பந்தமுள்ள, நீரின் கண் சூடு மாத்திரம் விரிந்து விளங்குவதாம் பிரகாசம் தோன்றுவதில்லை



வெம்மை ஒளி இரண்டும் விறகினில் எழும் — சூடும் பிரகாசமும் ஆய இரண்டும் அக்கினியின் சம்பந்தமுள்ள விறகின் கண் காணப்படும்

அவ்வகை போல் — அந்த திருஷ்டாந்தம் போல்

விமலசத்து ஒன்றே கல் முதலாம் அவற்றில் திகழும் — மலமற்ற ஆத்மாவின் சத்ருப மொன்றே மலை (கடல்) முதலாயுள்ள பொருள்களில் அதனதனிருப்பு மாத்திரம் விளங்கியதன் சித்தும் ஆனந்தம் விளங்கு வதில்லையாம்

மெய்மை தவிர் — உண்மை வடிவமில்லாத

புத்தியது தமோ குணத்தின் மூட விருத்தியினும் — புத்தியின் தமோ குணத்தினால் அஞ்ஞான மயமான மூட விருத்தியிலும்

இராசதத்தின் கோரவிருத்தியிலும் — இரசோ குணத்தின் (ராகமய மான) கோரவிருத்தியிலும்

மெய்ம்மை ஓடு சித்தாகும். சத்துவத்தின் சாந்த விருத்தியினில் சச்சிதானந்தங்கள் தோன்றும் — ஆத்மாவின் சத்ருபத்தோடு சித்ருபமும் விளங்குவதாம் சத்துவ குணத்தினால் (வைராக்கியமான) சாந்த விருத்தியின் கண் (ஆத்மா வின்) சச்சிதானந்த சொருபம் மூன்றும் விளங்குவதாம்

## 29 சத்து முதலியவற்றிற்கு உபாதி பேதமுண்டு

ஆதலினாலானந்தம் ஆன்மமய மாமவ் —
வைந்தினுக்கும் உபாதியுள அவை முறையே
மொழியின்,
பேதமுறும் சத்துவிவகாரிகம்பின் பிராதி —
பாசிகம் பாரமார்த்தி கசத்தென மூன்றும்,
முதுணர்வில் சுழுத்தியில் தோன்ருது நனவுற்று
முத்தியுறு மளவுமுறும் கடாதி முதலதுவாம்
போதுகன வினில்தோன்றி யழிவதிடை யதுவாம்—
பொன்ருத பிரம்மசத் தேயிறுதி யதாம்.

(இ—ள்)

| | |
|---|---|
| ஆதலினால் ஆனந்தம் ஆன்ம மயம் ஆம் — | ஆனதால் ஆனந்தம் ஆன்மாவின் சொரூபமாம் |
| அவ்வைந்தினுக்கும் உபாதி உள — | சத்து முதலிய அவ்வைந்து ருபத்திற்கும், (அவித்தை அந்தக்காண விருத்திகளின்) உபாதிகளிருக்கின்றன, |
| அவை முறையே மொழியின் — | அவ்வுபாதிகளைக் கிரமாக கூறுமிடந்து |
| பேதம் உறும் சத்து விவகாரிகம் — | கற்பித வேற்றுமையுள்ள சத்தானது வியாவ காரிக சத்தாம் |
| பின் பிராதி பாசிகம் — | பின்னர் பிராதிபாசிக சத்தாம் |
| பாரமார்த்திகம் என சத்து மூன்றாம் — | பாரமார்த்திக சத்தாம் என்று முவிதமாம் |
| முதுணர்வில் சுழுத்தியில் தோன்றாது — | விசார ஞானத்திலும் நித்திரை காலத்திலும் தோற்றாது |
| நனவுற்று முத்தி உறும் அளவும் உறும் கடாதி — | சாககிரா வஸ்தையிலிருந்து தோன்றி விதேக முத்தியடையும் வரை இருக்கின்ற கடபட |



| | |
|---|---|
| முதலதுவாம் | முதலியன வியாவ காரிக சத்தாம் |
| போது கனவினில் தோன்றி அழிவது இடை அதுவாம் — | (நனவுறப் பொய்யாய்ப்) போகும் சொப்பனாவஸ்தையில் தோன்றி (பிரம்ம ஞானமின்றி) அழியும் பொருள்கள் பிராதி பாசிக சத்தாம் |
| பொன்றாத பிரம்ம சத்தே இறுதியதாம் | முக்காலத்தும், கெடாத சத்துருப பிரம்மமே பாரமார்த்திக சத்தாம் |

[வி—பாரமார்த்திகம் வியாவ காரிகம் பிராதிபாசிகம் என்ற முவிதசத்திற்கும், திருஷ்டாந்தம், மகாபாரதக் கதையில், சுமித்திரா கல்யாணத்தில் நாடகம் நடிக்குமவன், பாரமார்த்திக சந்தைக்குத் திருஷ்டாந்தமாம் அவன் அருச்சுன வேடம் தரிப்பது வியாவ காரிக சத்தைக்குத் திருஷ்டாந்தமாம் அர்ச்சுனாக வந்தவன் சுமித்ரா கன்னிகா மாடத்திற்குச் செல்ல சந்நியாசி வேடம் தரித்தது பிராதிபாசிக சத்தைக்குத் திருஷ்டாந்தமாம் தாஸ்டாந்தம் முறையே சுழுத்தி சாக்கிரம் சொப்பனம் என்ற மூன்றிலும் பரமாத்மா சீவாத்மா அந்தராத்மா என விளங்குவதாம் எப்படி அருச்சுன வேடம் தரித்தவன் நாடகத்திற்கு முன்னும் முடிந்த பின்னும் ஒருவனாகவே இருந்ததுபோல பரமாத்மா ஒருவனே சாக்கிர சொப்பன சுழித்திய வஸ்தைகளுக்கு முன்னும் பின்னும் ஒருவனென்றுணர்வது விவேகமாம்.

## 30 சித்து நான்கு

சீவனொடீ சன்கூடத்தன் பிரமம் என்னச்
சித்துநான் காங்குடநீர் கதுவுறுவெண் மீன்வான்
தூவுபனி நீர்பிம்ப அநுமிதா காசம்—
சொல்கடா வச்சின்னா காசமொடு மாவான்,
மேவுமிவை யவற்றினுக்குத் திட்டாந்த முறையாம்-
விடயமொடு பிரம்மம் வாசனை முக்கியம் பின்,

ஏவுநிச வான் மாவோடத்துவிதம் வித்தை-
யெனுமிவற்றின் பெயரால் எண் வகைப்படு
மானந்தம்.

(இ—ள்)

| | |
|---|---|
| சித்து சீவனொடு ஈசன் கூடத்தன் பிரம்மம் என்ன நான்காம் — | சித்தானது, சீவன் ஈசன் கூடத்தன் பிரம்மம் என நான்கு விதமாம் |
| குடநீர் கதுவுறும் வெண் மீன் வான் — | கடநீரின்கண் பிரதி பிம்பித் துள்ள வெண்மையாகிய நட்சத் திரங்களோடு கூடிய ஆகாயம் |
| தூவு பனி நீர்விம்பம்— | பெய்யும் குளிர்ந்த நீரை |
| அநுமித ஆகாசம் — | யுடைய, மேகத்தின் கண் பிரதி பிம்பத்துள்ள அநு மானத்தால் அறியுமாசமும். |
| சொல் கட அவச்சின்—னாகாச மொடுமாவன் | உவமை கூறும் கடத்திற்கும் இடமான ஆகாசமும், மகா காசமும். |
| மேவும் இவை அவற்றினுக்கு முறையாம் — | ஆகப் பொருந்திய இந் நான்கும் சீவன் முதலிய அந் நான்கிற்கும் கிரமமாகவு தாரணங்களாம் |

வி—சித்து நான்கு

1 ஜலம் நிறைந்த கடத்திற்கு எவ்வள வாகாசம் இடங்கொடுத்திருக்கின்றதோ அவ்வாகசமும் அதிற் பிரதிபிம்பத்துள்ள ஆகாசமும் சேர்ந்தும் கடசலா காசமாம் அவித்தை அல்லது அந்தக்கரணம் அதன் பிரதிபிம்பம் அதற்கதிஷ்டானமான கூடஸ்தன் சேர்ந்து சீவனும்.

2 மேகத்திற் பிரதிபிம்பத்துள்ள ஆகாசமும் அம்மே காசத்திற்கு இடங்கொடுத்திருக்கின்ற ஆகாசமும் சேர்ந்து மேகாச மெனப்படும். அதுபோல மாயை யின் அதிஷ்டான சேதனமும் அதிற்பிரதி பிம்பத்



துள்ள சேதனத்தின் பிரதிபிம்பமும் சேர்ந்து ஈசுவரனும்.

+ அவித்தை அல்லது அந்தக்காரணம் அதின் பிரதி பிம்பம் அதற்கதிஷ்டானமான கூடஸ்தன் சேர்ந்து சீவனும் 3) கடத்திற்கு இடம் கொடுக்கும் ஆகாசம் போல அவித்தை அல்லது அந்தக் கரணத்தின் அதிஷ்டான சேதனம் கூடஸ்தனும்,

4 மகாகாசம் போல் எங்கும் நிறைந்திருக்கும் சேதன பிரம்மாம் சித்தொன்றே உபாதிபேதத்தால் நான்குவிதமாக விளங்குவதை இங்கு ஆராய்ந் துணர்தற்குரியதாம்.

## ஆனந்தாஷ்டகம்

| | |
|---|---|
| ஆனந்தம், விடயம் ஒரு பிரம்மம் வாசனை — | விடயானந்தம் பிரம்மானந்தம் வாசனானந்தம் முக்கியானந்தம் பின்னர் கூறும் நிசானந்தம் |
| ஆன்மா ஒடு அத்து விதம் வித்தை எனும் இவற்றின் பெயரால் எண் வகைப்படும் — | ஆத்மானந்தத்துடன் அத்து விதானந்தம் வித்தியானந்தம் என்று கூறும் இவ்வானந்தங் களின் பெயரால் எட்டுவிதமாகும் |

31 மாதுமுதல் விடயஊதியங்கள் தமில் தோன்றி
வரல் விடயானந்தம் கண்படையில் தோன்றல்,
ஓது பிரம்மானந்தம் துயிலொழிவிற்றோற்றம்
உடையது தான் வாசநா நந்தங்கேடின்பம்,
ஆதலிலா நொதுமன்மதி தோன்றுதன் முக்கியமாம்
ஆனந்தம நோலய யோகத்தினில் வந்துதித்தல்
ஏதமறு நிசானந்தம் பிரியவிடயத்துள்
இயான் பிரியன் .எனத்தோன்றுதலான்மானந்தம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| மாது முதல் விடய ஊதியங்கள் தமில் தோன்றி வரல் விடயானந்தம் | — | மங்கையர் முதலிய விஷயப் பிரயோசனத்தால் உண்டாய் வரும் ஆனந்தம் விஷயானந்தமாம் |
| கண்படையில் தோன்றல் ஓது பிரம்மானந்தம் | — | சுழுத்தி வடிவ நித்திரையின் கண் விளங்கும் ஆனந்தம் (சுருதியுக்திய நுபவத்தால் ஞானிகளால் சிறப்பித்துக்) கூறும் பிரம்மானந்தம் |
| துயில் ஒழிவு இல் தோற்றம் உடையது வாசநானந்தம் | — | சுழுத்தியும் சாக்கிரமும் இன்றி நித்திரை தெளிந்தும் தெளியாத விடத்து விளங்கு மானந்தம் வாசநானந்தம் |
| கேடு இன்பம் ஆதல் இலா நொதுமல் மதி தோன்றுதல் முக்கியானந்தம் | — | வெறுப்பு விருப்பு உண்டாகாத உபேட்சா விருத்தியின் கண் விளங்கும் ஆனந்தம் முக்கியானந்தமாம் |
| மநோலய யோகத்தில் வந்து உதித்தல் ஏதம் அறும் நிசானந்தம் | — | யோகாப்பியாசத்தினால் மனம் ஒடுங்குமிடத்து விளங்கித் தோன்றும் ஆனந்தம் குற்றமற்ற முக்கிய நிசானந்தமாம் |
| பிரியவிடத்துள் யான் பிரியன் என்னத் தோன்றும் ஆன்மானந்தம் | — | பொன் மனவிமக்கள் தேகம் இந்திரியம் பிராணன் எனுமிப் பிரிய விஷயங்களில் யானே எனக்கு மிகப் பிரியமானவன் என்று விளங்கும் ஆனந்தம் ஆன்மானந்தம் |

வி — எட்டுவித ஆனந்தங்களில் பிரம்மானந்தமும் முக்கிய நிசானந்தமும்)அத்வைதானந்தமும் ஆத்மானந்தமும் விடய சம்பந்தமில்லாமல் கேவலம் ஆனந்தமாக



விளங்குவதால் இந்த நான்கு நிருபாதிகானந்தமெனவும் முக்கியானந்தமும், வாசநானந்தமும், பிரம்மானந்த யோகானந்த வாசனையால், வாசனானந்தம் எனவும், விடயானந்தமெனவும் மூவிதமாக கூறினர், மனோ விருத்தி பேதத்தால் பலவிதமாக காணப்படினும் தனக்கு இதம் விரும்பிய அதிகாரிகள் பிரம்மானந்தத் திற்கு வேறாக இல்லையென்றும் அந்த பிரம்மானந்தமே தனது சொருபமென்றும் இடைவிடாமல் பாவனை செய்து இகத்தில் இன்பமும் பரத்தில் மோட்சமும் அடைவார் களென்பது அறியவும்.

## 32 அத்வைதானந்தம்

விரியுமுலகனைத்தும் பொய் மெய்மை தானென்னும்-
விவேகத்தில் தோன்றுவதே யத்துவிதானந்தம்,
அரியமறை முடிவாகும் வாக்கியஞா னத்தால்-
ஆதலது வித்தியானந்தமென வறிக,
உரியன முன்னின்மையொடு பின்னின்மையன்றி
யொன்றொன்றா காமையென்றும், இன்மையென நான்காய்
திரியுமபா வங்க்ளிவை நித்தியத்துள் புகாத
திறத்தனவாம் பூரணத்தும் உறாதன மூன்றுருகும்

(இ-ள்)

| | | |
|---|---|---|
| விரியும் உலகு அனைத்தும் பொய் தான் மெய் யென்றும் | — | மாயையின் காரியமாயுள்ள, விரிந்த பிரபஞ்சமெல்லாம் மித்தையாம் ஆன்மாவே சத்தியமாகு மென்னும் |
| விவேகத்தில் தோன்றுவது அத்து விதானந்தம் | — | விவேக, ஞான முண்டா மிடத்து விளங்குமானந்தம் அத்துவிதானந்தம். |
| அரிய மறை முடிவு ஆகும் வாக்கியம் | — | (ஈசன் குருவேதம் மனமென்றும் இந்நான்கின் கிருபையில்லா தவர்கள் அறிதற்கு, அரிய |

| | |
|---|---|
| | உபநிஷத்களிலுள்ள தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களாலுண்டாகும். |
| ஞானத்தால் ஆதல் அது வித்தி ஆனந்தம் என அறிக — | சீவப் பிரம்ம அயிக்கிய அபரோட்ச ஞானத்தால் தோன்றி விளங்குமானந்தம் வித்தியானந்தமாம் என்று ஆனந்த பேதங்களை அறிவாயாக. |
| அபாவங்கள் உரியன — | இல்லாததெனும் அபாவங்கள் (பிரதி யோகியெனும் எதிர் மறையின் உணர்ச்சியால்) அறிதற்கு) உரியனவாயுள்ள. |
| முன்னின்மை, பின்னின்மை அன்றி ஒன்று ஒன்று ஆகாமை என்றும் இன்மை என நான்கு ஆம் — | பிராகாபாவம், பிரத்துவம் சாபாவம் இதன்றியொரு பொருள் வேறொரு பொருள் ஆகாதென்னும் அந்நோந்ய பாவம் அத்தியந்தா பாவம் என்றும் நான்கு விதமாகும். |
| திரியும் இவை நித்தியத்துள் புகாத திரத்தனவாம் — | தோன்றி கெடும் இவ்வபாவங்கள் பிரம்ம நித்தியத்துள் சேராத தன்மையினவாம் |
| பூரணத்தும் உறாதன மூன்று ஆகும் — | பிரம்ம பூரணத்துள் பொருந் தாதனவாகிய பரிச்சேதங்கள் மூன்று விதமாயிருக் கின்றனவாம். |

வி — பிரகாபாவம் — உற்பத்தியின்றி நாசமுடையதாம். பிரத்தொம்சா பாவம் — உற்பத்தியாய் நாசமின்றியதாம், அந்நோந்யாபாபவம் உற்பத்தி நாசமின்றிய அபாவ மாம். அத்தியந்தாபாவம் உற்பத்தி நாசமின்றியதாம் என்று தர்க்க நூலார் உடைய கொள்கையாம். கடம் தனதுற்பத்திக்கு முன் இல்லாமை அதன் பிரகாபாவ



மாம், அந்த கடம் தன் நாசத்திற்குப் பின் இல்லாமை அதன் பிரத்தொம்சா பாவமாம். கடம் படமன்று என்புழிப் படத்தின் பேதம் கடத்தின்கண் இருத்தலின் அப்பேதம் அந்நோந்யா பாவமாம். நீரில் புழுதி என்றுமில்லை தீயில் குளிர்ச்சி என்றுமில்லை என்பது அத்தியந்தா பாவமாம்.

பிரகாபாவம் கடத்தின் முன்னின்மை பிரதியோகியாகிய கடம் உண்டாகிய காலத்துக் கெடுதலின் நித்திய மன்றாம். பிரத்தொம்சா பாவம் கடத்தின் பின்னின்மை (தனது எதிர் மறையாய கடத்தின்) சமவாயி முதற் காரணத்திலிருத்தலாலும் அச்சமவாய காரணம் நாச மடைந்தபோது தானும் நாசமாய் விடுதலாலும் அதுவும் நித்திய மன்றாம். கடம் படமன்று என்புழி கடத் திலிருக்கும் படத்தின் பேதமென்னும் அந்நோந்யா பாவமும் தீயில் குளிர்ச்சியென்றுமின்லை என் புழி தீ யி லு ள் ள குளிர்ச்சியின் அத்தியந்தா பாவமும் கடமும் தீயும் நாசமான போது தாமும் நாசமாய் விடுதலின் அவையும் நித்தியமன்றாம் இவ்வாறு மாயை பரியந்தம் அபாவங்களை விசாரித்து நோக்கினும் அவை அநித்தியாம் பிரம்மத்தின் பின்னமான அனைத்தும் அநித்திய மேயாம். பிரம்ம ஞானத்தால் நிவர்த்தி யாவனவாம், என்னும் உண்மையுணர்ச் சியில்லாதார். பிரிதிவி முதலிய பாவ பதார்த்தம் நித்தியமாகாவிடினும், பிராகபாவ முதலிய அபாவபதார்த்தங்களாவது நித்திய மாகவோ என்று செய்யும் சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டுப் பிராகபாவ முதலிய அபாவங்கள், நித்தியத் திற் சேராதன வாமென்று கூறியதென்க.

33 உரைத்தனை வதாமியாவையெனில் ஒரு
காலத்துண்டின்
றொரு காலத் தெனுங்காலப் பரிச்சேதமுடனே
தெரித்தவொரு தேயத்துண்டொரு
தேயத்திலையென்

தேயப் பரிச் சேதமுமொன்றாமாகா தென்றும்
கருத்தில் வரு வத்துபரிச் சேதமுமா மென்ன
கருதிடுக இனிச்சித்தின் விரிவாகும் எனமுன்
விரித்திடும் அச்சீவாதிகட்கு நாமாதி
விவகார கற்பனை யீண்டெடுத்து மொழிகுதுமால்.

(இ—ள்)

| | |
|---|---|
| உரைத்த அவைதாம் யாவை எனில் — | கூறிய பரிச்சேதங்கள் எவை என்னின் (அவை) |
| ஒரு காலத்து உண்டு ஒரு காலத்து இன்று எனும் காலப் பரிச் சேதமும் — | ஒன்று ஒருகாலத்திருப்பதாம் பிறிதோர் காலத்திலில்லாததாம் என்று கூறப் படுகின்ற காலப் பரிச் சேதமும். |
| தெரித்த ஒரு தேயம் உண்டு ஒரு தேயத்து இலை என் தேயப் பரிச் சேதமும் — | ஆராய்ந்து, கூறும் (ஒன்று) ஒரு தேசத்திருப்பதாம் பிறிதொரு தேசத்திலில்லாத தாமென்று கூறும் தேசப் பரிச்சேதமும். |
| ஒன்று ஆம், ஆகாது என்னும் கருத்தில் வரு வத்து பரிச் சேதமாம் என்ன கருதிடுக — | இஃது ஒரு பொருளாம் பிறிதொரு பொருள் ஆவதன்று எனக் கூறபப்டும் ஆராட்சியால் உண்டாம். வஸ்து பரிச்சேதமும் இவ்வித மாகும் என்று அம்மூன்றையும் நீ ஆராய்ந்த றிவாயாக. |
| இனிமுன் விரித்திடும் சித்தின் விரிவு ஆகும் — | இனிமேல் முன்விரித்துக் கூறிய சேதனத்தின் பேதமா மென்று |
| அச்சீவாதிகட்கு — | அந்தச் சீவேசாதிகளுக்குள்ள |
| நாமாதி விவகார கற்பனை ஈண்டு எடுத்து மொழிகுதும் — | நாமருப விவகார கற்பனைகளை இவ்விடத்தில் விளக்கமாக எடுத்தியம்புவாம். |



வி—காலத்தால் அந்தமுடையது காலப்பரிச்சேதமெனப் படும். தேசத்தால் அந்தமுடையது தேசப்பரிச்சேத மெனப்படும். வஸ்துவாலந்தமுடையது, வஸ்து பரிச் சேதமேனப்படும், பிரம்மம் உற்பத்தி நாசமின்றியதால் காலப் பரிச்சேதம் இல்லாததாம் எங்கும் நிறைந்திருப் பதால் தேசப்பரிச் சேதமில்லாததாம் மாயாப் பிரபஞ்ச மனைத்தும் பிரம்மவடிவமாயிருத்தலால் வஸ்து பரிச்சேத மில்லாததாம்

## 34 சீவ நாமாதி விவகார கற்பனை

சாற்றறிய சீவபேதங்கண் முறை விசுவன்
தைசதன்பின் பிராஞ்சனெனப் பகர்ந்திடுவர் அவருள்
வேற்றுமைசெய் தூலவுடல் வியட்டிய பிமானி-
வியாவகாரிகன் புத்தி கதுவுறுசைதன்யன்
மாற்றரிய சிதாபாசன் விட்சேப ரூபன்-
வருபிரமாத் துருநுவல் கத்திருவொடு போத்திருவே
தோற்றியிடும் விஞ்ஞான மயன் குடும்பிசரீரி
துவம்பதமுக் கியன் முதலாயின விசுவன் நாமம்

(இ—ள்)

| | |
|---|---|
| சாற்றறிய சீவ பேதங்கள் முறை — | வேதாந்த சாஸ்திர விசார மில்லாதவர்கள் கூறற்கரிய சீவ பேதங்களை (சாக்கிராதி) கிரமமாக |
| விசுவன்தைசதன் பின் பிராஞ்சன் — | விசுவனும் தைசதனும் பின்னர், பிராஞ்ஞனும் என்று அறிஞர்கள் கூறுவார்கள் |
| அவருள் வேற்றுமை செய்தூல உடல் வியட்டி அபிமானி — | அம்மூவருள் (சீவ) பேதங்களைச் செய்கின்ற தூல சாரீர வியஷ்டியபிமானி |
| வியவகாரிகன் புத்தி கதுவுறு சைதன்யன் — | வியவகாரிக சீவன் புத்தியில் ப்ரதிபிம்ப சைதன்யன் |

| | | |
|---|---|---|
| மாற்றரிய சிதாபாசன் | — | அஞ்ஞான முள்ளவரை, மாறுதலின்றிய சிற்பிரதிபிம்பன் |
| விட்சேபருபன் வருபிரமாத்துரு | — | தேகாபிமானியாய சீவருபன் (நனவுமுதல் மோட்ச பரியந்தம் தொடர்ந்து) வரும் பிரமாத்துரு |
| நுவல் கருத்துரு | — | கரும செய்வானெனக் கூறும் கர்த்தாவாம் |
| போத்துரு தோற்றி யிடும் விஞ்ஞான மயன் | — | சுகதுக்காநுபவன் (யானென) விளங்கி வரும் விஞ்ஞான மயன் |
| குடும்பி சரீரதுவம் பத முக்கியன் | — | சம்சாரி சரீரமுடையவன் நீயெனும் பதத்தின் முக்கியார்த்தன் |
| முதலாயின விசுவன் நாமம் | — | சாக்கிரா வஸ்தையின் அபிமானியாய விசுவனது பரியாய நாமங்களாம் |

35 பெற்றவொரு சூக்கமமெய் வியட்டியபி மானி-
பிராதிபாசிக சீவன் சொப்பனகற் பிதனென்
மற்றவை தான் முதலாய தைசதன்றன் பெயராய்
விளங்குவர் காரணமெய் வியட்டியபி மானி,
உற்றுவரும் அவித்யோ பகிதன் காரியமாம்-
உபாதிகனென் பனமுதலாம் பிராஞ்ஞ நாமங்கள்
பற்றிவரு சீவான்மா அந்தரான் மாமேற்-
பரமான்மாவெனப் படுமான்ம விதம் மூன்றாம்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| பெற்ற ஒரு சூக்கும மெய்வியட்டி அபிமானி | — | சிருஷ்டியின் ஆரம்ப காலத்தில் பெற்ற ஒப்பற்ற சூக்ஷ்ம தேக வியட்டியபிமானி |
| பிராதிபாசிகன் சொப்பன கற்பிதன் | — | பிரம்ம ஞானமின்றி மித்தை யாகும், பிராதி பாதிகன், சொப்பனத்தில் கற்பிதன் |



| | | |
|---|---|---|
| என் மற்றவை முதலாய தைசதன் பெயர் ஆய் வழங்கும் | — | என்பதாக அப்பெயர் முதலியவற்றை (சொப்பனா வஸ்தையினபிமானியாய) தைசதனது பரியாய நாமங் களாய் (அறிஞர்) கூறுவர் |
| காரணமெய் வியட்டி அபிமானி | — | காரண சரீரத்தின் வியஷ்டி அபிமானி (அநாதியாய்) |
| உற்றுவரும் அவித்யோ உபகிதன் | — | பொருந்தி வரும் அவித்தையை உபாதியாகவுடையவன் |
| என்பன முதல் ஆம் பிராஞ்ஞன் நாமங்கள் | — | என்று சொல்வன முதலாக வுள்ள பெயரனைத்தும் சுழுத்தியவஸ்தையினது அபிமானியாய பிராஞ்ஞனது (பரியாய) நாமங்களாம் |
| பற்றி வரும் சீவான்மா அந்த ரான்மா மேல் பரமான்மா எனப் படும் ஆன்மாவிதம் மூன்று ஆகும் | — | உபாதிகளைப். பொருந்திவரும் சீவான்மா. அந்தரான்மா இவ்விரண்டிற்கு மேலான பரமாத்மா என்று கூறப் படுகின்ற ஆத்மாவின் வேறுபாடு மூவிதமாம் |

## 36 ஆத்மத்திரயம்

காய்ந்துள விரும்பு போலுடம் பாதி
கலந்துறு குடும்பமென் வழக்கிற்,
சார்ந்துளன் சீவான் ம ாவெனப் படுவான்
தாமரையிலையினீர் போலத்
தோய்ந்துள குடும்பப் பெருவிவகாரந்
தோய்விலன் அந்தரான் மாவாம்,
போந்துல கிற்குப் பரிதி போற் சான்றாய்ப்
பொருந்தினோன் றான் பரமான்மா.
(இ—ள்)

| | | |
|---|---|---|
| காய்ந்து உள இரும்பு போல் | — | அவ்வாத்மத்திரயத்துள், சுட்ட இரும்பு போல் தேகம் |

| | | |
|---|---|---|
| உடம்பு ஆதிகலந்து உறுகுடும்பம் என் வழக்கில் | | (இந்திரியம் முதலிவற்றுள் கருமவசத்தால்) சேர்ந்து வரும் சம்சாரமென்னும் விவகாரத்தில் |
| சார்ந்து உளன் சீவ ஆன்மா எனப்படுவன் | — | கூடியிருப்பவன் சீவாத்மா வென்று சொல்லப்படுவான் |
| தாமரை இலை நீர் போல தோய்ந்து | — | தாமரை இலைமேல் பற்றாத தண்ணீர் போல (பற்றாமல்) |
| உள குடும்பபெரு விவகாரம் | — | பற்றியிருக்கின்ற சம்சாரமாகிய பெரிய விவகாரத்தில் |
| தோய்விலன் | | பற்றாதிருப்பவன் |
| அந்தரான்மாவாம் | | அந்தரான்மா என்று சொல்லப்படுபவன் ஆவன். |
| போந்து உலகிற்கு பரிதி போல் சான்று ஆய் | — | இராகத்துவேஷமின்றியுதய மாய் உலக விவகாரமனைத் திற்கும் சூரியன் (சாட்சியா யிருப்பது) போல (சீவாத்மா அந்தராத்மாக்களின் விவகாரத்திற்கு) சாட்சியாய் |
| பொருந்தினோன் | — | அமைந்திருப்பவன் பரமாத்மா என்று சொல்லப் படுவான். |

பரமாத்மா

## 37 சம்சார கற்பனை

நீர் விழுந் தொருவன் கதிர்தடு மாறி
நின்றதென் றுரைப்பது போலும்
கார்விரைந் தோட ஓடு கின் றதுதண்
கலைமதி யென்பது போலும்
ஓர்வரும் திரிவிற் போதவான் மாவிற்கு
உடல் முதலாகிய உபாதிப்
பேர் வரு சீவ பாவனை யுலகப்
பெரு விவகாரமென் றறியே,



(இ—ள்)

| | | |
|---|---|---|
| ஒரு வெம்கதிர் நீர் விழுந்து | — | ஒப்பற்ற வெம்மை வடிவ சூரியன் (அலையுடைய) நீரின் கண் (தவறி) விழுந்து |
| தடுமாறி நின்றது என்று உரைப்பது போலும் | — | தடுமாற்றமடைந்து (தத்தளித்துக்) கொண்டிருக் கின்றான் என்று கூறுவது போன்றதாம் |
| கார்விரைந்து ஓட | | மேகங்கள் ஓடிக்கொண்டிருக்க |
| தண்கலை மதி ஓடுகின்றது என்பது போலும் | — | குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் (அம்மேகங்களில் புகுந்து) ஓடுகின்றானென்பது போலும் |
| ஓர்வு அரும் திரிவு இல்போத ஆன்மா விற்கு உடல் முதல் ஆகிய உபாதி | — | (குரு கிருபையின்றி சுருதியுக்தி களால்) அறிதற்கரிய என்று, மாறுந்தன்மை யில்லாதுஞான வடிவாமாயுள்ள ஆத்மாவிற்கு தூல சூட்சும காரண தேகங் களாகிய உபாதிகளால் |
| பேர் வரும் சீவ பாவனை | — | விசுவன் தைசதன் பிராஞ்ஞன் என்கின்ற, பெயர் வருவதான சீவாஸ்தையானது |
| உலகப் பெரு விவகாரம் என்று அறி | — | உலகில் பெரிய (சம்சார) வியவகாரமாமென்பதாக ஆத்மாவின் சம்சார கற்பனை அறியத்தக்கதாம் 37 |

## 38 ஈசுவர நாமபேதம்

அருவிராட் புருடன் இரணிய கருப்பன்-
அந்தரியாமி யென் றீசன்,
திரிவிதம் அவருள் தூலவா கத்துச்
சமட்டியா கியவபி மானி

விரிவுறும் வைசுவா நரனெனன் முதலா
விராட் புருடன் பெயராகும்,
மருவுறும் இலிங்கம் எனுமுடற்சமட்டி
மானிமாப் பிராணனே யன்றி

(இ—ள்)

| | | |
|---|---|---|
| ஈசன் அருவிராட் புருடன் | — | பரமேஸ்வரன் (அபரோட்சமாய்) அறிதற்கு, அரியவிராட் புருஷனும் |
| இரணிய கருப்பன் அந்தரியாமி என்று திரிவிதம் ஆம் | — | இரணிய கருப்பனும் அந்தரியாமியும் என்று மூன்றுவிதமாக விளங்குவன் |
| அவருள் தூல ஆகத்து சமட்டியாகிய அபிமானி விரிஉறும் வைசுவானரன் | — | அம்மூவருள் தூல சரீரசமஷ்டியபிமானி(எங்கும்) வியாபித்துள்ள வைஸ்வானரன் |
| எனல் முதலா விராட் புருடன் பெயர் ஆகும் | — | என்று கூறுதல் முதலியன விராட் புருஷனது நாமங்களாம். |
| மரு உறும் லிங்கம் எனும் உடல் சமட்டி அபிமானி | | தூல சரீரத்துள் பொருந்தியிருக்கின்ற லிங்க சரீர சமஷ்டியபிமானி |
| மாபிராணன் அன்றி | — | மகாப் பிராணன் இவ்விரண்டும் அல்லாமலும் (இது குளகம்) 38 |

39 சூத்திராத் மிகனென் பெயர் முதலாகச்
சொற்றனர் இரணிய கருப்பன்,
ஏத்து காரணமாம் உவப்புறு சமட்டி
யெனுமபிமானியவ் வியத்தன்
வாய்த்தகா ரணமாம் உபாதிகன் அனந்த
மயன் பர தேவதை பரமன்
ஆத்ததற் பதமுக் கியார்த்தன் என் பெயர் முன்
அந்தரியாமி பெற்றிடுமே.



(இ—ள்)

| | | |
|---|---|---|
| சூத்திராத்மிகன் என் பெயர் முதலாக இரணிய கருப்பற்கு சொற்றனர் | — | சூத்திராத்மா என்று சொல்லப்படுகின்ற பெயர் முதலாகவுள்ளவற்றைப் பரியாய நாமங்களாக இரணிய கருப்பர்க்கு பண்டிதர்கள் பகர்வர். |
| ஏத்து காரணமாம் உடம்பு உறுசமட்டி எனும் அபிமானி அவ்வியத்தின் | — | புலவர்கள் புகழ்ந்து போற்றுகின்ற காரண சரீர சமஷ்டி அபிமானி, அவ்வியத்தின் |
| வாய்த்த காரணமாம் +உபாதிகன் | — | காரியங்கள் அனைத்தும் தன்னிடத்துப் பொருந்திய காரணோபாதிகன். |
| அனந்தமயன் பரதேவதை பரமன் ஆத்ததத் பத முக்கியார்த்தன் | — | ஆனந்தமயன் மேலான தேவதை பரம் பொருள் தத்துவமசி மகா வாக்கியத்துள் பொருந்திய தத் பத வாச்சியார்த்தன். |
| என்பெயர்முன் அந்தரியாமி பெற்றிடும் | — | என்பததாகக் கூறுகின்ற பெயர்களை பரியாய நாமங்களாக, சிருஷ்டிக்கு முதன்மையாயுள்ள அந்தரியாமி பெற்றிடுவர் |

+உபாதி—தனது தன்மையை பிறிதொன்றில் தோற்றிவிப்பது செம்பூவின் சென்னிறம் படிகமணியில் தோற்றுவது போலாம். ஒரு பொருளை பலபொருள்கள் போல தோற்றுவிப்பதும் உபாதியாம். 39

## 40. ஈசுவரதேகம் சித்திர திருஷ்டாந்தம்

சித்திர படமோர் பொருளொடுங் கூடாத்
திகழ்வினிற் றௌதமே யெனவும்,

நெய்த்த கூழ் வருடக் கடிதமே யெனவும்-
நீனிறத் திலாஞ்சித மெனவும்,
பத்தியோ வியஞ்சேர்ந்திரஞ்சிதமெனவும்
படுதல் போற், பிரம்மமும் மாயை,
வைத்த காரியங்கள் கடந்துறு நிலையில்
வயங்குசித் தெனும் பெயர் புனைந்து.

(இ—ள்)

| | |
|---|---|
| சித்திர படம் ஓர் பொருளொடும் கூடாத் திகழ்வினிற் றௌதுமே எனவும் — | ஓர் சித்திரவஸ்திரமானது ஒரு வர்ணத்தோடும் சேராது, தனித்து விளங்குமிடத்து வெள்ளை வஸ்திரமெனவும். |
| நெய்த்தகூழ் வருட கடிதமே எனவும் — | நெகிழ்ச்சியையுடைய பசைக் கஞ்சி (தன்மீது) பூச அதனுல் கடித வஸ்திர மென்றும் (பின்) |
| நீனிறத்து இலாஞ்சிதம் எனவும் — | நீல நிறத்தால் அச்சுக் கட்டினுல் சித்திரத்தின் அடையாள வஸ்திரம் எனவும் |
| பத்தி ஓவியம் சேர்ந்து இரஞ்சிதம் எனவும்படுதல் போல் — | பின் வரிசையாகச் சித்திர வுருவம் (எழுதிய மைத்தவுடன்) இன்பமான தென்று கூறுப்படுவது போல் |
| பிரம்மம் மாயை வைத்த காரியங்கள் — | பிரம்மமும் மாயையும் சேர்ந்து செய்த காரியப் பிரபஞ்சங் களுக்கு |
| கடந்துறு நிலையில் சித்தெனும் பெயர் புனைந்து வயங்கும் — | அதீத (இல்லாத) நிலையிலிருக்கும் சமயத்தில் ஞானசொருப மென்னும் திருநாமத்தைப் பொருந்தி விளங்கும். |

40

41 அகிலகா ரணமா மாயையை மருவி—
அந்தரி யாமியாமி மாயை,
சகல கா ரியமாஞ் சூக்கும வுடம்பு-
சார்ந்து பொன் கர்ப்பனென்றாகி,



விகலமில் தூல வுடம்பினை மேவி-
விராட்டென நிற்குமென் றறிவாய்,
திகழுறு பிரமஞ் சித்திர படமேற்-
சித்திர மியாதென வினவில்.

(இ—ள்)

| | |
|---|---|
| அகில காரணமாம் மாயையை மருவி அந்தரியா மியாம் — | பிரபஞ்சமனைத்திற்கு (பரிணாமி உபாதான) காரண மாயுள்ள மாயையை (உபாதி யாக) பொருந்திய போது அந்தர் யாமியென விளங்குவதாம் |
| மாயை காரியமாம் — | மாயையின் காரியமான, |
| சகல சூக்கும உடம்பு சார்ந்து பொன்கருப்பன் என்று ஆகி — | சூக்கும பூதங்களின் காரிய மாயிருக்கின்ற சர்வ சூக்கும சரீரங்களை (உபாதியாகப்) பொருந்துமிடத்து இரணிய கர்ப்பனாக விளங்குவதாம் |
| விகலம் இல் தூல உடம்பினை மேவி விராட்டு என நிற்கும் என்று அறிவாய் — | குறைவின்றி (சர்வ) தூல சரீரங்களையும் (உபாதியாகப்) பொருந்தியிருக்குமிடத்து விராட் புருஷன் என்பதாக விளங்கி நிற்பதாம் என்று ஈசுவர வடிவத்தை அறிவாய் |
| திகழுறும் பிரமம் சித்திர பட மேல் சித்திரம் யாதென வினவில் — | என்றும் ஒரே படியாய் விள்ங்கும் பிரமம் சித்திர வஸ்திரம் போன்றிருந்தால் (அதன் கண்) சித்திரம் போன்றிருப்பது யாதென வினவில் (குளகம்) |

41

42 விரிஞ்சனே முதலாஞ் சேதன மோடு-
வெற்பெழு வாயசே தனமாய்ப்
பரந்துள வுலகம் சித்திர மென்பர்-
பரம்பொரு ளாமொரு பிரமத்,
திருஞ்சடர் சடமாம் உலகது தோற்றம்
எவ்வண மெனிற் படந் தன்னில்,
வரைந்தபல் நிறமாய்க் குளிர் முதல் மாற்ற
வல்லன வலதுகிற் போலி.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பரம் பொருளாம் ஒரு பிரம்மத்து | — | மாயாப் பிரபஞ்சமான கற்பிதங்களுக்கு அதிஷ்டானப் பொருளாயுள்ள ஒப்பற்ற பிரம்மத்தின் கண். |
| விரிஞ்சனே முதலாம் சேதனம் ஒடு வெற்பு | — | பிரம்மன் முதலாகவுள்ள அறிவுடைப் பொருள்களுடன் மேருமலை. |
| ஏழுவாய் அசேதனமாய் பரந்து உள உலகம் சித்திரம் என்பர் | — | முதலிய சடப் பிரபஞ்சமாகவிரிந்திருக்கின்ற உலகத்தை சித்திரமாமென்று (பண்டிதர்கள்) கூறுவர் |
| இரும் சட அசடமாம் உலகது தோற்றம் எவ்வணம் எனில் | — | அந்த பிரம்மத்தின் கண் கற்பிதமாய் இருக்கின்ற சடசித்து வடிவமாயுள்ள (அப்) பிரபஞ்சத்தினது தோற்றமானது எவ்வாறாமென வினவில். |
| படம் தன்னில் பல் நிறமாய் வரைந்த துகில் போலி | — | ஒரு சித்திரவஸ்திரத்தில் பல நிற மாயெழுதப் பெற்றுள்ள வஸ்திரா பாசங்கள். |
| குளிர் முதல் மாற்ற வல்லன அல | — | குளிர் வெப்பாதிகளை மாற்றுதற்கு வல்லமையுடையன அல்லவாம். |





43 ஓர் வடி வாகிக் குளிர்முதல் மாற்றும்-
உண்மையாம் சித்திர படம் போன்று
ஆர்வுற வெழுதும் கிரிமுத லாய-
வதனொடொப் புறுகிலா வாபோல்
தேர் வரும் பிரமத் தெழுந்துபற் பலவாஞ்
சீவர்கள் சித்தொடொப் பாகாப்
பார்முத லொவ்வாச் சடங்களா தலினாற்-
பரத்திலாந் சடாசட வுலகம்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| குளிர் முதல் மாற்றும் உண்மையாம் சித்திர படமும் ஓர் வடிவு ஆகிபோன்று | — | அவ்வஸ்பதிரா பாசங்களும், குளிர் முதலியவற்றை மாற்றத் தக்கதும் சித்திரத்திற்கு ஆதாரமாயிருக்கும் வாஸ்தவ வஸ்திரமும் ஒரு வடிவமாய் ஒத்திருந்தும். |
| ஆர்வுற எழுதும் கிரி முதலாய் அதனொடு ஒப்பு உறுகிலாவாறு போல் தேர்வு அரும் பிரமத்து எழுந்து பல் பல ஆம் சீவர்கள் சித்து ஒடுஒப்பு ஆகா | — | பார்ப்பவர்களுக்கு விருப்பமுண்டாகும்படி எழுதிய மலை முதலிய சித்திரங்கள் அப் போலிவஸ்திரத்தோடு சமானமாகாத் தன்மை போல் ஆராய்ந்தறிதற்கு அரிய சித்ரூப பிரம்மத்தின் கண் கற்பனையாய் உதித்துப் பல விதமாகத் தோற்றுகின்ற சிதாபாசசை தன்னியராகிய சீவர்கள். அந்த பிரம்ம வடிவ சித்தோடு சமானமாக மாட்டாது. |
| பார் முதல் சட அசட உலகம் ஒவ்வா | — | பிருதிவி முதலான சடமாயும் சித்தாயுமிருக்கின்ற பிரபஞ்சம் சமானமாகாது (ஆயினும்) |
| சடங்கள் ஆதலின் | — | சடப் பொருள்கள் (பொய்) |

பரத்தில் ஆம் — ஆதலின் சீத்ருப பிரம்மத்தின் கண் கற்பிதமாக தோன்றுவதாகும் 43

44 ஈசுவரனது முக்கிய குணங்கள்

இத்திரத் தீசன் முக்கிய குணங்கள்
எலாமறி தன் முத லனவாம்,
கத்திருத் துவமோ டகத்திருத் துவம்பின்—
அந்நிதா கத்திருத் துவமே,
அத்தன்மெய்ப் பிரபுத் துவலியாக்கல்—
அளித்தல் போக் குதனிய மந்தான்
ஏய்த்திடல் அகற்றும் அநுப் பிரவேசம்—
என்பன வீசனைந் தொழிலே

இத்திரத்து ஈசன் முக்கிய குணங்கள் எலாம் அறிதல் முதலன ஆம் — இத்த கமையுடைய பரமேஸ்வரனது சிறந்த குணங்களாவன யாவும் அறியும் தன்மை எல்லாவற்றையும் ஆளுந்தன்மை எல்லாவற்றையும் நியமிக்கும் தன்மை. எல்லாவற்றையும் உள்ளிருந்தசைக்குந் தன்மை, எல்லாவற்றையும் செய்யும் தன்மை, எல்லா வல்லமையும் உள்ளதன்மையும் ஆம்

அத்தன் மெய் பிரபுத்வ வலிகத் துருந்துவமொடு அகத்துருத் துவமும் பின் அந்நியதாகத் துருத்துவம் — பரமேஸ்வரனது, உண்மையான பிரவுத்வ சாமர்த்தியம், ஒன்றைச் செய்யும் கர்த்தாத் தன்மையும் (அன்பர்களுக் காக ஒன்றை) செய்யாத் தன்மையும் அதனை பின் வேறு விதமாக செய்யும் தன்மையும் ஆம்

ஈசன் ஐந்தொழில் — பரமேஸ்வரனது பஞ்சக் ருத்தியங்கள்



ஆக்கல் அளித்தல் போக்குதல் நியமனம் எய்த்திடல் அகற்றும் அனுப் பிரவேசம் என்பன — சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்று கூறப்படுவதாம் 44

**45 ஈசுவரன் பஞ்ச கிருத்திய திருஷ்டாந்தம்**

நீங்கிய விகாரப் பிரமமாம் ஈசன்
நிகழ்த்துமோ தொழில் பல வென்னில்
பூங்கதிர் இச்சை யின்றியே வாரி-
பொழி மழைக் கதிரினால் பொழியா-
ஆங்கதின் நிழலாய்ப் பொருந்தியந் நிழலை-
யலர்முகி லான் மறைத் தளித்தே,
தூங்கிம கரத்தால் வெங்கதி ரானீர்-
தொலைத்ததை தன்னொடாக் குதல் போல்

இ—ள்

நீங்கிய விகாரம் பிரம்ம ஆம் ஈசன் தொழில் பல நிகத்துமோ என்னில் பூங்கதிர் இச்சை இன்றியே வாரி பொழிய — விகாரமில்லாது நிர்விகார அத்வைதமாயுள்ள பரமேஸ்வரன் (சிருஷ்டி முதலிய) பல கிருத்தியங்களை செய்யுமோவென நீ வினவுவாயாயின் அழகிய கிரணங் களையுடைய சூரியன் இச்சை யில்லமாலே (மழைக்கிரணத் தால்) சலத்தைப் பெய்து (பின்)

அதில் நிழலாய் பொருந்தி -- அந்த சலத்தின் கண் பிரதி பிம்பவடிவமாகப் பொருந்தி

அந்நிழலை அலர் முகிலால் மறைத்து — அந்தப் பிரதிபிம்பத்தை பரவிய மேக கிரணத்தால் மறையச் செய்து

தூங்கு இமகரத்தால்— அளித்து — தங்கும் பனிக் கிரணத்தால் இரட்சித்தும்

வெங்கதிரால் நீர் தொலைத்து — உஷ்ண கிரணத்தால் அந்த சலத்தை அழித்து

அதை தன்னொடு ஆக்குதல் போல் — அப்பிரதி பிம்பத்தை தன்னுடன் சேர்த்துக் கொள்ளுதல் போலும் (இது குளிகம்) 45

## 46 ஈசுவர பஞ்ச கிருத்திய தாஷ்டாந்தம்

போற்றிறை மாயா சத்தியோ டொன்றி
பொலிந்த சிற் பிரதான மதனால்,
சாற்றரும் நிமித்த காரணன் ஆகி
தகும் சடப் பிரதான மதனால்
ஆற்றுபா தான காரணன் என நின்
றாக்கிய புத்தியா திகளிற்,
தோற்றுபு சீவ ரூபமாய் வினையாற் -
சொற்ற போத் திருவென நின்று,

(இ - ள்)

போற்றுஇறைமாயா சக்தி யோடு ஒன்றி — அன்பர்கள் மனமுருகத் துதிக்கும் பரமேஸ்வரன் (தனது) மாயா சக்தியுடன்கூடி

பொலிந்த சித் பிரதானம் அதனால் — (அனிர் வசனீய மாக) விளங்குகின்ற ஞானப் பிரதானத்தினால்

சாற்றரும் நிமித்த காரணன் ஆகிதகும் சடப் பிரதான மதனால் ஆற்று உப தான காரணன் என நின்று — கல்யாண குணங்களை அளவிட்டு கூறற்கரிய நிமித்த காரணன் ஆய்மித்தையென்னத்) தகுந்த சடப் பிரதானத்தினால் தன் காரியத் தோடு அமோகமாகச் செய்கின்ற காரணனென நிலை நின்று

ஆக்கிய புத்தியாதி களில் சீவ ரூபமாய் தோற்றுபு — சிருஷ்டித்த புத்தி முதலிய காரியங்களில் சீவ வடிவமாய் பிரவேசித்து ஆவரண



சத்தியால் மறைத்தவன் போலிருந்து

வினையால் சொற்ற போத்துரு என நின்று (இது குளகம்) — கருமங்களால் (சுக துக்கவசப் பட்டவனெனக்) கூறும் போகமனுபவிப்பவன் போன்றிருந்து

47 நியமசத் தியினால் போகபோத் திருவை
நியமஞ் செய் துருத்திர வடிவான்
மயமுறு மாயா, காரியம் சிதைத்து
வந்தருள் ஆரிய வடிவால்,
அயர்வுறு சீவன் தன்னையே தன்னோ
டகிக்கிய மாக்குவன் அறிக
உயர்வுறு சமட்டி வியட்டியென் பனவால்
உயரிறை கட்குறு பேதம்.

(இ-ள்)

நியமசத்தியினால் போக போத்துருவை நியமனம் செய்து — நியமிக்கும் வல்லமையினால் (போக்கியத்தோடு) போகத்தையநுபவிக்கும் போகத்தாவையும் நியமனம் செய்து

உருத்திர வடிவால் மாயாமயம் உறும் காரியம் சிதைத்து — ருத்திர வடிவத்தால் மித்தியா ரூபமாயுள்ள அந்தக் காரியங்களை அழித்து, மானுட தேகம் தரித்து

வந்து அருள் ஆரிய உருவால் அயர்உறு சீவன் தன்னை — எழுந்தருளி (தத்துவ ஞானோபதேசத்தை) அருளும் சற்குரு வடிவத்தால் (முத்தாபத்தால்) துன்பமுற்றிருக்கும் சீவனை

தன்னொடு ஐக்கியம் ஆக்குவன் என அறிக — தன்னுடன் (சுபாவசித்தமான) ஐக்கியத்தை செய்து கொள்வனென்னும் ஈசனைந் தொழிலையும் அறிவாய்.

உயர்வுறு சமட்டி வியட்டி என்பனவால் — அனந்த கல்யாண குணங் களால் மேன்மை பொருந் திய ஈசனுக்குப் பல சரீரமா கவும், சீவனுக்கு ஒரு சரீர மென்பதால்,

இறைஉயிர்கட்கு பேதம் உறும் — ஈசுவரனுக்கும் சிவர்களுக்கும் வேறுபாடுற்றதாம்.

(வி—பரமேஸ்வரன் சுட்சம பூதத்தின் உற்பத்தியிலும் இரணிய கருப்பரது தூல சரீரவுற்பத்தியிலும் நேரே கர்த்தா ஏனைய பிரபஞ்சனுற்பத்தியில் இரணிய கருப்பர் வாயிலாக கர்த்தா இரணிய கருப்பர் மும்மூர்த்திகளினும் வேறானவர் சிருஷ்டினாரம்பத்தில் உண்டான சீவர் என்று வேதாந்த பரிபாஷை கூறுவதும் இரணிய கருப் பரோ மகாபூதங்களைக் குறித்துக் காரணமாயிராமை யால் பிரம்மாவின்று ஆயினும் அவர் தூலபூதங்களை சிருஷ்டிப்பதால் சிலவிடத்து பிரம்மரவென்று உபசார மாக கூறப்படுகின்றார் என்று சிந்தாந்தமிந்து கூறுவது இங்கறியத்தக்கதாம்.

காரணம் இரு வகைத்து (1) உபாதான காரணம் எது காரியத்தின் சொருபத்தில் பிரவேசிக்கின்றதோ, எதனை விட்டு காரியம் சித்திக்கிறதில்லையோ அஃது உபாதான காரணமெனப்படும். கடஸ்வருபத்தில் மண்பிரவேசிக் கிறது. மண்ணின்றி கடம் நிலைத்திருக்கிறதில்லையாம்.

(2) எதுஸ்வருபத்தில் பிரவேசிக்கிறதில்லையோ ஆனால் காரியத்திற்கு வேறாயிருக்கின்றதோ அது நியமித்த காரணம் எனப்படும். கடத்திற்கு, குயவன் தண்டம், சக்கரம் முதலியன நிமித்த காரணங்கள் கடஸ்வ ரூபத்தில், அவை பிரவேசிக்கிறதில்லை. கடத்திற்கு வேறாயிருந்து கொண்டு, கடத்தையுற்பத்தி செய் கின்றன. பின்குயவன் முதலியவற்றின் நாசத்தால் கட நாசமடைகிறதில்லை இவ் வி த த் தா ல் காரணம்,



உபாதானம், நிமித்தம் என இருவகைத்தாம் ஈசுவரன் அபின்ன நிமித்த உபாதான காரணன் ஆவன். செகத் திற்கு எட்டுக்கால் பூச்சி போல் 47

## 48 சமட்டி வியட்டி ரூபத்துவம்

மிகுமரப் பன்மை தண்டலை யெனல் போல்-
மிகுமுயிர் எலாமு நான் எனுமோர்,
தகு மபிமானம் இறைசமட்டியதாம்-
தனித்தனி மரம் பெயர் கொளல் போல்,
பகுமுடல் தோறும் வேறுவே றாக
படுமபி மானமோர்ந் துரைப்பிற்
றொகுமுயிர் வியட்டி யுருவமென் குவர் மேற் 48
றொம்பத விலக்கிய முரைப்பாம்

(இ—ள்)

மிகுமரப்பன்மை கண்டலை எனல் போல் நான் எனும் ஓர்தகும் அபிமானம் இறை சமட்டியதாம் — மிகுந்த சீவரனை வரையும் நானெனக்கருதுகின்றஒப்பற்ற (தனக்கே) தகுதியாயுள்ள அபிமனம் பரமேஸ்வரனது சமட்டி வடிவு ஆம்

தனித் தனி மரம் பெயர் கொளல் போல் — அக் காட்டில் வேறு வேறாக மரங்களின் பெயர்களை பிரித்தறிந்து கொள்வது போல்

பகும் உடல் தோரும் வேறு வேறாகவரும் அபிமானம் — வெவ்வேறாய், பகுத்திருக்கும் தேகங்கள் தோறும் வெவ் வேறாயிருக்கும் அபிமானம்

ஓர்ந்து உரைப்பின் தொகும் உயிர் வியட்டி உருவம் என் குவர் — ஆராய்ந்து கூறுமிடத்து தொகுதியாயுள்ள சீவனது வியட்டி வடிவமா மென்று பண்டிதர் கூறா நிற்பர்.

இனி துவம்பத இலக்கியம் உரைப்பாம். — இனிமேல் துவம்பத லட்சியா ர்த்தத்தைக் கூறுவேமாக. 48

## 49 கூடஸ்த பரியாய நாமங்கள்

சீவனொ ன்றிடு மூவகைய தீட்டானன்-
சேதனன் அந்தரி யாமி.
ஆவலில் அநு சந்தாத் திருச் சுயஞ்சத்
தார்த்தனோ டவச் சின்ன சீவன்
தாவரும் பார மார்த்திகன் துரியன்
சான்றினன் பிரத்திகான் மாவாம்
ஏவமிற் றொம்ப தத்திலக்கி யார்த்தன்
என்பகூ டத்த நா மங்கள்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| சீவன் மூவகை ஒன்றிடும் அதிட்டானன் சேதனன் அந்தரியாமி | — | விசுவன் தைசதன் பிராஞ்ஞன் எனும்) மூவித சீவர்க்கு பொருந்திய அதிஷ்டான சை தந்நியன். உள்ளிருந்த சைப்பவன் |
| ஆவல் இல் அநு சந்தாத்துரு | | ஆசையில்லாதவன் அநு சந்தாத்துரு |
| சுயம் சத்தார்த்தன் | — | தனது சத்தையினால் விளங்குபவன் |
| அவச் சின்ன சிவன் | | அந்தக் கரணத்தை யுபாதியா யுள்ள சீவன் |
| தாவரும். பாரமார்த் திகன், துரியன் | — | கேடில்லாத பாரமர்க்திக சீவன் நான் காமவஸ்தையன் |
| சான்றினன், பிரத்திகஆன்மா | — | சாட்சி ரூபன் எல்லா வற்றினுள்ளிருப்பவன் |
| ஏவம் இல் தொம்பதத்து இலக்கியார்த்தன் என்ப கூடஸ்த நாமங்கள் | — | குற்றமற்ற நீயெனும் தத்பதத் தின் இலட்சியார்த்தன் என்று கூறுவர் கூடஸ்த பரியாய நாமங்கள் 49 |

50 ஈசனென் றிடுமு வகைய திட்டானன்-
இயம்பரும் ஒரு பரப் பிரமம்,



பாச மில் பரதத் துவம்பர மான்மாப்-
படியிலா விசுத்த சித் தன்றிப்
பேசுதற் பதலக் கியார்த்த னென்பனமுற்-
பெறு பரியாய நாமங்கள்
தேசுறு பிரமம் தனக்கென வுரைப்பர்-
திருந்து நூல் தெரிதரும் புலவர்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| மூவகை ஈசன் ஒன்றிடு அதிட்டானன் | — | வைசுவானரன், சூத்திராத்மா அந்தரியாமி யென்றும்) ஈசுவரத்திரயத் த்திற்கும் அதிஷ்டான சைன்னியன் |
| இயம் பரும் ஒரு பரப்பிரம்மம் | — | சொல்லுதற்கரிய ஒப்பற்ற பரப்பிரம்மம் |
| பாசம் இல் பரதத்துவம் | — | அஞ்ஞானமாகி, பாசமற்ற மேலானவுண்மை தத்துவமாம் |
| பரமான் மாபடி இலா விசுத்த சித்து | — | பரமாத்மா, சத்துவாதி குணங் களோடு கூடாத பரிசுத்த ஞானசொருபமாம் |
| அன்றி பேசு தத்பதலக் கியார்த்தன் என்பன | — | இவையன்றி சிறப்பாகக் கூறு கின்ற தத்பத லட்சியார்த்தன் என்று கூறப்படுவன |
| முற்பெறு பரியாய நாமங்கள் என | — | முதன்மையாயமைந்த பரியாய நாமங்களென்று |
| திருந்து நூல் தெரிதரும் புலவர் உரைப்பர் | — | (மாறுபாடின்றி) திருத்தமா யுள்ள வேதாந்த சாஸ்திரங் களை ஆராய்ந்தறிந்துள்ள பண்டிதர்கள் கூறுவர் 50 |

## 51 திருக்கு விவேக சாரம்

வடிவொடு பெயரால் குட முதலாக
மண்பல வகைப்படும் அதுபோல்,
சுடுபசும் பொன்னே செய்கையாற் பலவாம்
சுடரிழை வுருவுகொள் வதுபோற்,

படியறு சித்தேமுன் சொல்சீ வாதி—
பலவுமா மென முதலாக,
விடலரும் அறிஞர் நூல் பலதிருக்கு
விவேக மென்றியம்புறு மன்றே
(இ—ள்)

| | | |
|---|---|---|
| மண் வடிவொடு பெயரால் குட முதல் ஆக பல வகைப் படுவது போல் | — | மண் ஒன்றே உருவத்துடன் நாமத்தால் குட முதலியவாக பலவிதமாய் காணப்படுவதும் போலும். |
| சுடு பசும் பொன்னே செய்கையால் பல வாம் | — | புடமிட்டு உருக்கிய பசுமை யான தங்கம் ஒன்றே (செயலான்) செயலால் பல் விதமாகிப் |
| சுடர் இழை உருவு கொள்வது போல் | — | பிரகாசியா நின்ற ஆபரணங் களின் வடிவத்தையடைவது போல |
| படி அறுசித்தே முன் சொல் சீவாதி பலவும் ஆம் | — | பேத மற்றுள்ள சித்தொன்றே (உபாதிபேத கற்பனையால்) முன் கூறிய சீவர் முதலிய பல பேத விவகாரங்கள் யாவும் கற்பித மாயிருக்கின்றன. |
| என முதல் ஆக விடல் அறும் அறிஞர் நூல் பல திருக்கு விவேகம் என்று இயம்புறும் | — | என்று இவ்விதமாய் விசாரித்து உணர்வதை, சுபாநுபவம் (நீங்காத அறிவுடையார் இயற்றிய) வேதாந்த சாஸ் திரங்கள் பல திருக்கு விவேக மென்று கூறும். 51 |

## 52 திரிசிய விவேகம்

இந்து வினை யனாதிய டைந்ததை முழுதும்-
மறையாமல் இந்து தன்னால்
அந்திரனை யொளிர் வித்துக் கொள்களங்கம்-
எனவெனை யானறியே னென்றும்,



முந்துலக விவகாரந் தனி லுயிரை,
யடைந்த தனை! மூடா தென்று
அந்தவுயி ராலறியப் பட்டுமனல்-
தம்பிக்கும் மந்தி ரம்போல்.
இ—ள்

| | | |
|---|---|---|
| இந்துவினை அனாதி அடைந்து அதை முழுதும் மறையா மல் | — | சந்திரனை அனாதியாகப் பொருந்தி அச் சந்திரனை மூற்றும் மறைக்காமல் (சிறிது மறைத்து) |
| அம் திறனை ஒளிர் வித்து கொள் களங் கம் என எனையான் அறியேன் என்னும் முந்துலக விவகாரம் தன்னில | — | அவ்விதமாக மறைத்தலாகிய தனது தன்மையை விளங்கும் படி செய்கின்ற களங்கம் போல் என்னையானே அறியே னென்று கூறப்படுகின்ற பழமையான உலக விவகாரத் தில் |
| உயிரை அடைந்து அதனை மூடாது | — | ஆத்மாவை அநாதியாகப் பொருந்தி அவ்வாத்மாவை (முற்றும்) மறைக்காது (விசேடசத்தை மறைத்து) |
| என்றும் அந்த உயி ரால் அறியப்பட்டும் | — | எப்பொழுதும் அந்த ஆத் மாவினால் அறியப்படு வதாயும் |
| மந்திரம் தம்பிக்கும் அனல்போல் | — | மந்திரத்தால் கட்டுப்பட்ட அக்கினியின் சுடும் தன்மை அக்கினியின் வடிவமும் ஆகா மலும். வேறாகத் தோன்றா மலும் இருத்தல் போல் இது குளகம். 52 |

53 விளங்குறு மாந் மாவுருவம் அல்லாமல்-
ஆன்மாவின் வேறாய்த் தோன்றா (து)
உளங் கொள்வியதாதிகாரியங் கடமைத்-
தோன்றாமல் ஒடுக்கி நின்றும்-

துளங்கலக டித கடனை யெனும் சமர்த்தை-
யாகியுமே தோன்றா நின்ற
வளங் கடரு காரணமா யது வாகுந்
திரிசியமா மாயா சத்தி. 53

இ—ள்

| | |
|---|---|
| விளங்குறும் ஆன்ம உருவம் அல்லாமல் ஆன்மாவின் வேறாய் தோன்றாது — | மாறு பாடின்றி ஞான சொருபமா கவிளங்குகின்ற பிரத்யக் ஆன்ம சொருபமும் ஆகாமலும் (அந்த) ஆன்மா வினும் வேறாகத் தோன்றாததும், |
| உளங் கொள்விய தாதி காரியங்கள் தமை தோன்றாத வாறு ஒடுக்கி நின்றும் — | ஆராய்ச்சியால் (அறிந்து) கொள்ளத்தக்க ஆகாய முதலிய காரியப் பொருள்களை (தோன்றச் செய்து மீண்டும் அவை) தோன்றாத விதம், (அவற்றை தன்னுள்) மறைத்து நிற்கும் (அதனால் அறியத் தக்கதாம்) |
| துளங்கல் அகடித கடனை யெனும் சமர்த்தையாகியும் — | மாறுதலுடையதும் நிகழாததை நிகழச் செய்யும் வல்லமையுடையதாயும் |
| தோன்றா நின்ற வளங்கள் தரு காரணமாயது திருசி யமாம் மாயா சத்தியாகும் — | தோன்றா நிற்கும் சர்வ பிரபஞ்சமாகிய வளங்களைக் கொடுக்கும் காரணமாயிருப் பது திருசயமாயுள்ள மாயா சத்தியாகும் |

53



## 54 [மாயா லெட்சண பஞ்சகம்]

அனைய தொறு மாயா யிலக் கணமசத்துச்-
சடந்துக்கம் அநித்தம் கண்டம்,
எனுமிவையுண் முயற்கோடு முதல சத்ச்
சடவுறுக்கல் லெழுவாய் புத்தி,
தனையடையுரு கோரமொடு மூட விருத்
தி கடுக்கம் தவு மெய் யாதி
முனமுரை செய் அநித்தங் கண்டிதங்காலப்
பரிச் சேத முதல வாகும்

இ—ள்

| | |
|---|---|
| அனையது ஒரு மாயை இலக்கணம் அசத்து சடம் துக்கம் அளித்தம் கண்டம் — | அத்தன்மைய தாய மாயை யினது ஒப்பற்ற இலக்கண மாவன ஐந்து விதமாம் |
| எனும் அவற்றுள் — | என்று கூறப்படுமவற்றில் |
| முயல் கோடு முதலியன அசத்து — | என்றுமில்லாத, முயற்கொம்பு வான் மலர், மலடி மகன், முதலியன அசத்து ரூபமாம் |
| கல் எழுவாய் — | கல் கட்டை முதலியன சடவுருவமாம் |
| புத்திதனை அடையும் கோரமொடு மூட விருத்திகள் துக்கம் — | முக்குண மயமான புத்தியைப் பொருந்தியிருக்கின்ற கோர மூட விருத்திகள் துக்க மயமாம். |
| தபு மெய்யாதி — | தோன்றிக் கெடுகின்ற தேக |
| முனம் உரைசெய் அநித்தம் கண்டிதம் — | முதலியன முன்பு கூறிய அநித்திய ரூபமாம் |
| காலப் பரிச் சேதம் முதலன கண்டம் ஆகும் — | காலத்தால் அந்தம், தேசத் தால் அந்தம், வஸ்துவால் அந்தம் என்பன கண்டமெனச் சொல்லப்படும். |

54

## 55 [மாய அதிர்வச நீய நவப் பிரகாரம்]

பிந்ந மொடு அசத்துச்சா வயமு மெதிர்—
மறையுமவை பிரிந்து தம்மின்
மன்னியவும் மொழிந்த நிர் வாச்சியமாகும்
நவவிதமாம் மாயை யெய்தும்
உன்னவரு சுருதிசம் பந்த முத்தி
சம்பந்தம் உலகசம் பந்தம்,
என்னவரு ஞானங்கள் முறையேயம்—
மாயைபடு மியல்பு கூறில்

| | |
|---|---|
| அம்மாயை பின்னம் அசத்து சாவயவம் — | அந்த மாயை யானது பின்னமும் அசத்தும் சாவயவமும் |
| எதிர் மறையும் — | அவற்றின் எதிர் மறையாயுள்ள அப்பின்னமும் சத்தும் நிரவயவமும் |
| அவை பிரிந்து தம்மில் மன்னியவும் — | அம்மூன்றும் எதிர் மறையாகப் பிரிந்து தம்முடன் பொருந்தின வான பின்னா பின்னமும் சதசத்தும் சாவயவநிரவயவமும் என |
| நவவிதம் மொழிந்து எய்தும் — | ஒன்பது விதத்தாலும் கூறுதற்கு முடியாத தன்மையை அடைந்து இருப்பதால் (இப்படிப்பட்டதென்று |
| மாயை அதிர்வாச்சியம் ஆகும் — | கூற முடியாதிருக்கிற) மாயையானது அநிர்வச நியமென்பதாம். |
| உன்னல் அரும் சுருதி சம்பம உக்தி சம்பந்தம் உலக சம்பந்தம் — | அனதிகாரிகளால்) நினைத்தற்கரிய சுருதி சம்பந்த ஞானம் யுத்தி சம்பந்த ஞானம் உலக சம்பந்த ஞானம் |
| என்னவரும் ஞானங்கள் முறையே அம் மானய படும் இயல்பு கூறின் — | என்று சொல்லி வரும் ஞானத் திரயங்களால் முறையாய் அம் மாயைக் குண்டாகும் சுபாவத்தை கூறுமிடத்து. |



[வி-மாயை யானது தான் பிரம்மமென்று தன்னை யுணரும் போது தத்துவ ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கப்படுவதால் சத்தன்றாம் (2) உலக காரணமாயிருத்தலானும் நான் அஞ்ஞானியென்னும் அனுபவமிருத்தலானும் அசத்தன்றாம் (3) சத்தும் அசத்தும் தம்முள் விரோத முடையன வாதலின் சதசத்துமன்றாம் (4) திரவியமாயின் சாவயவமாம் அல்லாமையின் சாவயவ மன்றாம் (5) செகத் காரணமாய் பரிணமித்தலின் நிரவயவமு மன்றாம் (6) சாவயவ நிரவயவமும் தம்முள் விரோதமுடையன வாகலின் அதுவு மன்றாம். (7) பிரம்மத்திற்கு அன்னியமாயில்லாமையால் பின்ன மன்றாம் (8) சித்தாகிய பிரம்மத்திற்கும் சடமாகிய மாயைக்கும் அபேதம் கூடாமையின் அபின்ன மன்றாம் (9) பின்னமும் அபின்னமும் தம்முள் விரோதமுடையன வாகலின் பின்னா பின்னமு மன்றாம் என்பதரியத்தக்கது.

சத்தசத்திற்கு வேறாயது அநிர்வசநீயம் என்பர், அதனை மித்தையென்றுங் கூறுவர் முக்காலத்திலும் பாதிக்கப்படாததை சத்தென்பர். சொருபமின்றியதனை அசத்தென்பர் பாதயோக்கிய (பொய்) யென்று நிச்சயிக்கத்தக்க) சொருபமுடையதனை சத்விலட்சண மென்பர் என்று பால போதம் கூறும் 55

## 56 (மாயா திருஷ்டித் திரயம்)

விண்ணின் மலர் எனத்துச்ச மேயெனவும்
இப்பிவரு வெள்ளி போல
எண்ணுமநிர் வாச்சியமா மெனவுமுயிர் -
போனித்தம் எனவும் நிற்கும்
உண்ணிலவு தம மாயை மோகமுடன்
அவித்தை பொய் யுருவியென்றே
நண்ணுமிவை மாயா பஞ் சகமாகும்
எனவறிஞர் நவில்வர் அன்றே

இ—ள்

விண்ணின் மலர் என துச்சமே எனவும் — அம் மாயையானது "ஈண்டு நாநாவென்பது சிறிதுமில்லை" யென்னும் சுருதி சம்பந்த ஞானமுடைய ஞானிகளுக்கு ஆகாயத் தாமரை போல்

இப்பிவரு வெள்ளி போல் என்னும் அநிர்வாச்சியம் என்றும் — அசத்தெனவும் (மாயை சத்தா யிருக்குமேல் மாறுபடா திருக்கும் அங்கனமின்றி மாறிப் போதலின் அசத்தன்று மித்தையாம் என்றும் யுத்தி சப்பந்த ஞானமுடைய அப்பியாசிகளுக்கு) கிளிஞ்சி லில் வெள்ளி தோன்றல் போல் ஆராய்ந்தறியத் தக்க அநிர்வசநீய மென்றும்

உயிர் போல் நித்தம் எனவும் நிற்கும் — சுருதியுத்தி ஞானங்களின்றிய வுலக சம்பந்த ஞானமுடைய அஞ்ஞானிகளுக்கு ஆத்மாவைப் போல நித்தியமாகவும் (சொல்லப்பட்டு) இருப்பதாம்,

உள் நிலவு தமம் மாயை மோகம் உடன் அவித்தை — சித்தத்துள் விளங்குகின்ற தமமும் மாயையும் மோகமும் அவித்தையும்

பொய்மை உருவி என்றும் நண்ணும் இவை மாயா பஞ்சகம் ஆகும் என அறிஞர் நவில்வர் — மித்தியா சொருபியென்றும் அசத்தெனவும் பொருந்தா நின்ற இவற்றை மாலையினு டைய ஐந்து பெயர்களா மென்று பண்டிதர் பகர்வர் 56

57 சீவ சேதன மறைத்துத் தமமயலா-
கியவ்வுலகத் திறத்திற் கெல்லாம்,
மேவு காரணமாகி மாயை விப-
ரீத ஞான விளைத்து மோகம்



ஒவ வுணர் வழிந்த வித்தை சத்தின் வே
றாகிப் பொய் யுருவியாகும்
வீவிலா மாயையதற் கிருதருமஞ்-
சங் கோச விகாச மென்றாம்.

(இ—ள்)

சீவ சேதனம் மறைத்து தமம் — அந்த மாயை யினது) சிதா பாச னென்னும்) சீவ சேதனத்தை (உள்ள படி விளங் காமல் மறைத்த லால் தமமென்று

அயல் ஆகி அவ்வுலகத்திற்கு எல்லாம் — தனக்கு வேறாக தோன்று கின்ற பல விதங்களான வுலகங்களுக் கெல்லாம்

மேவு காரணம் ஆகி மாயை — பொருந்திய பரிணாமியு பாதான காரணமாயிருத்தலால் மாயையென்று சொல்லப் படுவதாம்

விபரீத ஞானம் விளைவித்து மோகம் — (சீவர்க்கு செகத் சத்தியம் தேகமே ஆத்மா போகமே மோட்சம் என்பன முதலிய) விபரீத ஞானத்தையுண்டாக்கு தலால் மோகமென்று சொல்லப்படும்

உணர்வு ஒவ அழித்து அவித்தை — நான் பிரம்மாயிருக்கின்றேன் என்ற தத்துவ ஞானத்தால் ஆத்மாவினின்றும்) நீங்கியழிவதால் அவித்தை யெனப்படும்

சத்தில் வேறாகி பொய் உருவி ஆகும் — சத்ரூப பிரம்மத்திற்கு வேறாயிருத்தலால் மித்யா சொரூபமென்று சொல்லப் படும்

வீவு இல்லாத மாயை அதற்கு சங்கோச விகாசம் என்று இரு தருமம் ஆம் — தத்துவஞானமுண்டாகுமளவும் நாசமில்லாத அம்மாயைக்கு ஒடுங்குதல் விரிதல் என் கின்ற இரண்டு தருமங்களுண்டு 57
(இது குளகம்)

## 58 (மாயையின் ஒடுங்கி விரியும் இரு குணங்கள்)

விரிந்த படம் ஓவியங்கள் பல திகழ்த்திக்
குவித்தொடுக்கும் விதமே போல
அரந்தை தரு மாயையுந்தன் விகாச தரு
மத்தினால் அகிலம் காட்டி,
பரந்தவைகள் சங்கோச தருமத்தால்
அடக்கு மெனப்ப கர்வர் மாயைக்
கிருந்த குணம் இரண்டுளவில் சுதந்திரமும்
சுதந்திரமும் என்ன வன்றே

இ—ள்

| | | |
|---|---|---|
| படம் விரிந்த ஓவியங்கள் பல திகழ்த்தி குவித்து ஒடுக்கும் விதமே போல | — | சித்திர படமானது (தான்) விரிதாலால் சித்திரங்கள் பலவற்றை விளங்கக் காட்டி, சுருங்குதலால் அச்சித்திரங்களை (தன்னுள்) மறைத்துக் கொள்கின்ற வகையினை போல் |
| அரந்தை தருமாயையும் தன் விகாச தருமத்தினால் அகிலம் காட்டி | — | சீவர்க்கு துன்பந் தருகின்ற மாயையும் தனது விரிதலாகிய தருமத்தால் பிரபஞ்சமனைத்தையும் விளங்க காட்டி |
| சங்கோச தருமத்தால் | — | தனது சுருங்குதலாகிய தருமத்தால் |
| பரந்தவைகள் அடக்கும் எனப் பகர்வர் | — | நாம ரூப வடிவமாக விரிந்துள்ள அப் பிரபஞ்ச மனைத்தையும் (தனக்குள்) மறைத்துக் கொள்ளுமென பண்டிதர்களாகிய ஞானிகள் பகர்வர் |
| மாயைக்கு இருந்த குணம் | — | இன்னும் அம்மாயையினிடத்துப் பொருந்திய குணங்கள் |



| | | |
|---|---|---|
| இல் சுதந்திரமும் சுரந்திரமும் என்ன இரண்டு உள | — | சுதந்திரமில்லாத் தன்மையும் சுதந்திரத் தன்மையுமென்று இருவித குணங்களிருக்கின்றன 58 |

## 59 [சுதந்தர மின்மை சுதந்தரம்]

பொய்யாகிச் சத்துருவப் பொருளின் வே-
றாகியொரு பொருளாய் தோன்றல்,
செய்யாமையா னுளதில் சுதந்தரஞ்சான்-
லாய வொரு சேதனன் பால்,
உய்யாத சீவாதி யாக்குதலாற் சுதந்தரமும்
உளது மாயை,
மெய்யான தலதென்றல் விசம்பலர் போல்
இல்லை யென விளம்பல் அன்றே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பொய் ஆகி சத்துருவப் பொருளின் வேறாகி | — | மாயையானது, + மித்தியா வடிவமாய் சத்ருப பிரம்மத்தின் வேறாக |
| ஒரு பொருளாய் தோன்றல் செய்யாமையால் இல் சுதந் திரம் உளது | — | தான் ஒரு வஸ்துவாகத் தோன்றாமையால் சுதந்திர மின்மை யுடையதாம் |
| சான்று ஆய ஒரு சேதனன் பால் உய்யாத சீவாதி ஆக்குதலால் சுதந் திரம் உளது | — | சர்வ சாட்சியாயிருக்கின்ற ஒப்பற்ற பிரம்மத்தினிடத்தில் விசாரத்தில் பிழைத்தலில்லாத சீவேசுர செகத்தையுண்டாக்கு தலால் சுதந்திரம் உடையதாம் |
| மாயை மெய்யானது அலது என்றல் விசும்பு அலர் போல இல்லை என விளம்பல் அன்று | — | இம்மாயையை உண்மையலது என்று கூறுவது ஆகாயத் தாமரை போல் பொய்யெனக் கூறற்க (பின்னை) சதசத் விலட்சணமெனக் கூறுக 59 |

மித்தை - உள்ளவாறு விசாரணை செய்யும் போது தனக்கென வடிவ மின்றியதாய் தானில்லாத விடத்து தோன்றுவது மித்தையாம் ஆன்ம ஞானத்தால் அன்றிப் பிறி தொன்றால் அழியா திருப்பதுமித்தையாம் காலத் திரயத்தினும் பொய்யென்று நிச்சயத்திற்குரிய தும் மித்தையாம் சத்தியத்திற்கு வேறாயிருப்பதும் மித்தையாம்.

இம்மாயை—சத்பதார்த்தத்தினும் அசத்பதார்தத்தினும் விலட்சணமாவது யாதோ அஃது அஞ்ஞான மெனப் படும் அதாவது சத்தியமாகவும் அசத்தியமாகவும் நிருபிக்க முடியாதது அம்மாயை, மாயையை சத்திய மெனக் கொண்டால் சத்தியமாகிய பிரம்மத்தைப் போல மாயையும் நாசமாகாமலிருத்தல் வேண்டும் ஆனால் பிரம்மா ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாய் விடு கின்றன ஆகையால் அவ்வஞ்ஞான சத்தியமாக நிருபித்தல் முடியாது அம் மாயையை அசத்திய மெனக் கொண்டால் அசத்தியமான மலடி மகன் போல அம் மாயையும் வெளிப்படுதல் கூடாது ஆனல் அஞ் ஞானமோ நான் பிரமத்தையறியேன் என்று வெளிப் படுகின்றது ஆகையால் அவ்வஞ்ஞானத்தை அசத்திய மாகவும் நிருபிக்க முடியாது. இக் காரணத்தால் அவ் வஞ் ஞானத்தை அநிர்வசனீயம் என்று கூறுவர். 59

## 60 (மாயா விருத்தித்திரயம்)

புலமில்கந விடைக் கரிபோற் றோன்றி விசா
ரந் தோன்றப் பொன்றும் பொய்யாம்
நிலவுதல் செய் சுத்த சத்துவ வடிவ-
மாயை யொடு நிகழ்த்து கின்ற
மலினசத்துவ வடிவ அவித்தை தமப்-
பிரதான வடிவ மாகும்,
நல மில்பிர கிருதி யென விருத்தி மூன்-
றுடைத்து முன் நவின்ற மாயை,



| | | இ—ள் |
|---|---|---|
| புலம் இல்க நவு இடை கரி போல் | — | நநவுணர் விலில்லாத சொப்பனா வஸ்தையின் கண் யானை முதலியன (தோன்றுதல்) போல, |
| தோன்றி விசாரத் தில் பொன்றும் | — | தோற்றமாய் மாயையென்பது எத் தன்மைத் தென சற்குரு சத்சாஸ்த்திரத்தினால் ஆராட்சி செய்யுமிடத்து இல்லா தொழியும். |
| பொய்யா நிலவுதல் செய் முனம் நவின்ற மாயை சுத்தசத்துவ வடிவ மாயையொடு | — | பொய்யாக விளங்குதல் செய் முன்பு கூறிய மாயையானது சுத்த சத்துவ குணரூப மாயையும் |
| நிகழ்த்துகின்ற மலின சத்துவ வடிவ அவித்தை | — | அதன்பின் கூறப்படுகின்ற மலின சத்துவ குணரூப அவித்தையும் |
| நலம் இல் தமப் பிரதான வடிவம் ஆகும் பிரகிருதி | — | நன்மை தருதலில்லாத தாமத குணப் பிரதானரூபப் பிரகிருதியும் |
| என விருத்தி மூன்று உடையதாம் | — | என்பதாக மூவித விருத்திகள் உடையதாம் (இது குளகம்) 60 |

## 61 (ஈசுவர விளக்கம்)

மாயை வரு சுழுத்திலயங் களினத்தி
யாசயிக்க மாயிற் றுண்மை
ஆய பிரமத்தின னவொடு படைப்பின்
இது பேத அவத்தை யெய்தும்
மேயவதிற் பிரமசை தந்யம்பிம்
பித்திதுவே விளங்கு ஞானத்
தூயசைதந் நிய வீசன் நற்பதியென்
றிட நிற்குந் துணிவு தன்னால்

(இ—ள்)

| | |
|---|---|
| மாயை வரு சுழுத்தி லயங்களில் உண்மை யாய பிரம்மத்தின் அத்தியாச அயிக்கம் ஆயிற்று — | மாயையானது (மாறி மாறி) வருகின்ற சுழுத்திய வஸ்தை யிலும் மகா பிரளயத்திலும் கற்பித ஐக்கியமாயிருப்பதாம் (பின்னர்) |
| இது நனவு படைப்பில் பேதா வஸ்தை அடையும் மேய அதில் — | இம் மாயை சாக்கிராவஸ்தை யிலும் சிருஷ்டியிலும் சிறிது பேதாவஸ்தை அடையும் அப்பேதாவஸ்தையாகிய சத்வ குண பிரதானத்தைப் பொருந்திய அம்மாயையின் கண் |
| பிரம்ம சை தந்யம் பிம்பித்து — | நிர்மல சலப் பிரதி பிம்பம் போல அந்த பிரம்ம சை தந்யம் (ஈசுவர ரூபமாக) பிரதி பிம்பித்து விளங்கும் |
| இதுவே விளங்கு ஞான தூயசை தந்ய ஈசன் — | இந்தப் பிரதி பிம்ப சேதனமே (மாறாது) விளங்கும் சர்வஞ்ஞத் வாதி கல்யாண குணங்களை யுடைய, பரிசுத்தமான சைதந்ய ரூப பரமேஸ்வரன் |
| பதி, இறை, என்றிட துணிவு தன்னால் நிற்கும் — | பதியென்றும் இறைவ னென்றும் தத்பதர்த்த மென்றும் அந்தரியாமி யென்றும் பண்டிதர்கள் பகருமாறு நிச்சயமாக இருப்பதாம் |

61

## 62 [சீவ விளக்கம்]

அப்பரற்கு பாதியாகி அமோக காரணியாமாயை
பொய்ப்புறு அவித்தை யெண்ணில் போத்துரு பசுவென் றோதும்



ஒப்பரும் சீவர்க்கெல்லாம் உபாதியாய் மோகம் செய்யும்
எய்ப்புறு பகுதி பாசம் எனக் குணச் சமமாய் நிற்கும்

(இ...ள்)

| | |
|---|---|
| மாயை அப்பரற்கு உபாதியாகி அமோக காரணியாம் — | இந்த மாயையானது அப் பரமேஸ்வரற்கு உபாதியாகப் பொருந்தி மோகம்அடையாம லிருத்தற்கு காரணமாம் (விசாரிக்க) |
| பொய்ப்பு உறும் அவித்தை — | பொய்யாய தன்மை யடையும் அவித்தையானது (இரசோ குணப் பிரதானத்தால் ஏற்ற தாழ்வாயுள்ள தன்னிடத்தில் மலினசலப் பிரதி பிம்பம் போல் பிரம்ம சை தந்நியம் சீவ ரூபமாகப் பிரதி பிம்பித்து (அதனால்) |
| எண்ணில் போத் துருபசுவு என்று ஓதும் — | அளவற்றுள்ள போக் தாக்களென்றும் பசுக் களென்றும் சொல்கின்ற |
| ஒப்பு அரும் சீவர்க்கு எல்லாம் உபாதியாய் மோகம் செய்யும் — | இழிந்த குணத்தில் தமக்கு யாரும் ஒப்பற்ற சீவர்க்கு பாதியாய்ப் பொருந்தி (தானல்லாததை தானென்றும் நித்திய மல்லாததை நித்திய மென்றும் சுகமல்லாததை சுகமென்றும் சுத்தமல்லாததை சுத்த மென்றும் விபரீதமாகிய) மோகத்தை செய்வதாம் (தத்துவ ஞானத்தால்) |

எய்ப்பு உறும் பகுதி பாசம் என — கெடுதலை பொருந்திய பிரகிருதியானது போக்கியத் தன்மையால் பாசபதார்த்தமென்று கூறப்படும்

குண சமம் ஆய் நின்று — முக் குணங்களின் சமத் தன்மையாயிருந்து (இது குளகம்) 62

## 63 (பிரபஞ்ச விளக்கம்)

அவித்தையிற் பிம்பித்துள்ள ஆருயிர் நுகர்ச்சிக்காகத்
துவக்குறு காரியங்கள் தோன்றிட வெதிர் குறித்த
வுவப்புறும் ஈசனோக்க மாத்திரத் துற்றலர்ந்து
பவப்படு காலமாகியது கொடு பரிண மித்து.

இ—ள்

அவித்தையின் பிம்பித்துள்ள அர் உயிர் நுகர்ச்சிக்கு ஆக — அவித்தையின் கண் பிரதி பிம்பித்துள்ள (தேக முற்றும்) நிறைந்துள்ள சீவரது போகாநுபவத்தின் பொருட்டு

துவக்கு உறு காரியங்கள் தோற்றிட — பரஸ்பரம் சம்பந்த பொருந்திய தேகாதிப் பிரபஞ்ச காரியங்கள் உண்டாதற் பொருட்டு

எதிர் குறித்த உவப்பு உறு ஈசன் — 'ஏகமாகிய யான் அநேகமாவேன்' என்று நேரே சங்கற்பித்து (யாம் சத்திய ஞானானந்த வடிவமாயிருக்கின்றோம் என்னும் இயற்கை ஞானமாகிய) ஆனந்தத்தை பொருந்தியுள்ள பரமேஸ்வரனது



நோக்க மாத்திரத்து உற்று அலர்ந்து — (பார்த்தலாகிய) ஈட்சண மாத்திரத்தில் பரமேஸ்வரனது திருஷ்டி) பொருந்தி பிரகிருதியானது சாமியாய வஸ்தை நீங்கி விரிந்து

பவப்படு காலம் ஆகி அது கொடு பரிணமித்து — முதலில் மகதத்துவ முதலிய காரியங்கள் உற்பத்தியாதற்கு ஏதுவாகிய காலதத்ததுவமாய் அக்கால தத்துவத்தினால் வேறு தன்மையை அடைந்து 63

## 64 (மக தத்துவ உற்பத்தி)

இரு மக தத்துவந்தான் என நிற்கு மதுதான் நீர்பெய்
தரும்விதை முளையாமன் முன் போலிரா தமர்தல் போலக்
கருவெனும் பகுதியோடாங் காரமுமாகா மற்பொய்
உரமுறு நிருவி கற்ப வுருநடு அவத்தை யாகும்.

இ—ள்

இரு மக தத்துவம் தான் என நிற்கும் — பரமேஸ்வரன் பார்த்த மாத்திரத்தில் பிரகிருதி விரிந்து கால தத்துவமாய் பரிணமித்து பெரிய மக தத்துவமென்று கூறும்படி காரிய மாவதாம்

அதுதான் நீர் பெய்து அருவிதை முளையாமல் — அம் மகதத்துவமானது பாத்தியில் விதைத்தது தண்ணீர் வார்க்க (ஊரிய) சூட்சும ரூப விதையானது முளைக்காமலும்

முன் போல் இராமல் — முன் போல் காய்ந்த தாயிராமனும்

| | | |
|---|---|---|
| ஆதல் போல | — | முளைத்தற் கேதுவாய் உப்பியிருத்தல் போல |
| கருவு எனும் பகுதி ஒடு ஆங்காரமும் ஆகாது | — | பரிணாமியுபாதான காரண மென்னும் பிரகிருதியும் காரிய மென்னும் அகங்காரமும் ஆகாமல் |
| பொய் உரம் உறு நிருவி கற்ப உரு நடு அவத்தை ஆகும் | — | மித்தியா ஞானமுற்ற நிருவி கற்ப வடிவத்தால் (முளைக்கா மலும் முன்போலிராமலும் நீரில் ஊரிய விதைபோல் மகதத்துவமும் தன் காரண மான பிரகிருதி யாகமலும் தன் காரியமாகிய அகங்காரமும் ஆகாமல் மத்தியா வஸ்தை யுடையதாம் |

+ மித்தியா ஞானம் : இம்மகதத்துவம் சாமானி அகங்காரமென்று கூறுவதாய் ஒவ்வொருவர்க்கும் சுமுத்திய வஸ்தையினின்றும் எழுந்து சாக்கி ராவஸ்தையையடை வதற்கு முன் நானென்றுள்ள சாமானிய அகங்காரமே, திருவிகற்ப மித்தியா ஞானமாம். இதுவே நநவில் நான் அந்தனன் அரசன் எனும் விசேஷ அகங்காரமாக அறியத்தக்கதாம். 64

## 65 [அகங்கார உற்பத்தி]

கொன் மகத்துவந்தான் குணபேத முறப் பொய் ஞான மன்சவி கற்பமாக வருமுதல் அத்தியாசம், என்முத லாங்கார ந்தோன்றிடுங்குண சத்துவந்தான் பின்வரு மிராசதஞ்சொற் பெருந்தமோ குணமென்றாகும்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| கொல் மகதத்துவத் தின் குணபேதம் உற | — | பெருமை பொருந்திய மகதத் துவத்தினின்றும் (சத்துவம், இராசதம், தாமதம் என) முக்குண பேதமுற்று |



| | | |
|---|---|---|
| பொய் ஞானமன் சவி கற்பம் ஆக | — | நான் அந்தணன் அரசன் என்னும் விசேட அகங்கார மாகிய மித்தி ஞானமுற்ற சவி கற்பத் தோடு கூடி யதாக |
| வருமுதல் அத்தியாசம் என் முதல் அகங்காரம் தோன்றிடும் | — | வருகின்ற பிரதமாத்தியாச மென்று கூறபப்டுகின்ற மூலாங்காரம் உற்பத்தியாம் |
| குணம் சத்துவம் தான் | — | மூலாங்காரத்தின் குணம் சத்துவமும் |
| பின் வரும் ராசதம் | | அதன்பின் வருகின்ற ராசதகுணமும் |
| சொல் பெரும் தமோ குணம் என்று ஆகும் | — | அதன்பின் கூறப்படுகின்ற பெரிதாகியதமோ குணமும் என மூன்றாகும் 65 |

66 உரைப்பரும் சத்துவாதி வுருவங்கள் பிரகா சம்பின் புரைப்பிர விருத்தி மோகம் என்குவர் புகல் குணங்கள் நிரைப் பெயர்தான் வைகாரி நிகழுந்தை சதம்பூ தாதி, விரிப்பரும் குணங்கள் மூன்றும் தருவ மேல் விளம்பலுற்றாம்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| உரைப்பரும் சத்துவ ஆதி உருவங்கள் | — | சுட்டியறியும் படி கூற முடியாத சத்துவ ரசோ தமோ குணங்களின் வடிவங்களை |
| பிரகாசம்பின் புரை பிரவிருத்தி மோகம் என்குவர் | — | பிரகாசமும் அதன்பின் களங்க முற்ற பிரவிருத்தியும், மோக மெனவும்பண்டிதர்கள் கூறுவர் |
| புகல் குணங்கள் நிரைப்பெயர் தான் | — | இவ்வாறு கூறிய, சத்துவாதி குணங்களுக்கு வரிசையாயுள்ள பரியாய நாமங்களாய் |

| | |
|---|---|
| நிகழும் தை சதம் வைகாரி, பூதாதி — | விளங்கா நின்றவை சத்துவகுணம், தைசதமெனவும், இராசதகுணம் வைகாரியெனவும் தாமத குணம் பூதாதியெனவும் பரியாய நாமங்களாம் |
| விரிப்ப அரும் குணங்கள் மூன்றும் தருவமேல் வினம்பல் உற்றாம் — | கூறற்கரிய சத்துவாதி குணங்கள் மூன்றும் தருவன வற்றை இனிமேல் கூறுகின்றோம் 66 |

### 67 [அந்தக்கரண முதலியவற்றின் சிருஷ்டி]

சத்துவ குணத்திற் றோன்றுந் தயங்குமுட் கரண
நான்கும்.
புத்தியிந் தியங்களைந்தும் போந்துதித்திடுமி ராச
தத்தில் வாக்காதியைந்தும் தகும் பிராணாதி யைந்தும்.
அத்தமோ குணத்திற் றோன்று மகல்விசும் பாதிபூதம்.

(இ—ள்)

| | |
|---|---|
| சத்துவ குணத்தில் தயங்கு உள்கரணம் நான்கும் — | சத்துவ குண அகங்காரத்தினின்றும் விளங்கும், மனம் புத்தி சித்தம் அகங்கார மெனும் அந்தக்கரணம் நான்கும் |
| புத்தி இந்தியங்கள் ஐந்தும் தோன்றும் — | சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை ஆக்கிராணமெனும் ஐந்தும் உற்பத்தியாம் |
| ராசதத்தில் வக்காதி ஐந்தும் — | இராசத குண அகங்காரத்தினின்றும் வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் எனும் கர்மேந்திரியங்களைந்தும் |



| | |
|---|---|
| தகும் பிராணாதி ஐந்தும் — | சீவர்கள் பிழைத்ததற்கு, தகுதியான வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன் எனும் வாயுக்களைந்தும் |
| போந்து உதித்திடும் — | வந்து உற்பத்தியாகும் |
| அத்தமோ குணத்தில் — | அந்தத்தமோ குணத்தினின்றும் |
| அகல் விசும்பு ஆதி பூதம் தோன்றும் — | வியாபகமான ஆகாயம், காற்று, அக்கினி, அப்பு, பிருதிவியென ஐந்து பூதங்கள் உற்பத்தியாகும் 67 |

### 68 (பஞ்சீகரண விபரம்)

அப்பெரும் பூதம் பஞ்சீகரித்துலகாகி நிற்கும்.
செப்பிய கரண நான்கின் செயல்களா நினைத்தலந்த,
பொய்ப்பொருள் துணிதல் மானம் புரிதல் சிந்தித்
தறிங்கள்
திப்பிய நான்முகன்கேத்திரிபுராந் தகன்றே வன்றே.

(இ—ள்)

| | |
|---|---|
| அப்பெரும் பூதம் பஞ்சீகரித்து உலகு ஆகி நிற்கும் — | பின்னர் அந்தப் பெரிய பஞ்ச பூதங்கள், பஞ்சீகரண கலப்பால், பிரமாண்ட புவன சரீர கடாதி விஷய வடிவ உலகமாயிருப்பதாம் |
| செப்பிய கரணம் நான்கின் செயல்கள் — | முற்கூறியமன முதலிய அந்தக் கரணத்தின் வியாபாரங்கள் |
| அந்தப் பொய்ப் பொருள் நினைத்தல் துணிதல் மானம் புரிதல் — | முறையே பிரமாண்ட முதலிய அந்த மித்தியா வஸ்துக்களை ஒன்றை நினைப்பதும் நிச்சயிப்பதும் அபிமானிப்பதும் சிந்திப்பதுமாம். (அவ்வந்தக் கரணத்திற்கு முறையே) |

திங்கள் திப்பிய நான்முகன் கேத்திரி புரந்தகன் தேவு — சந்திரனும் சிறந்த பிரம்ம தேவரும் சேத்திர க்ஞனாகிய விஷ்ணுவும் புராந்தகராகிய அரனும் அதி தெய்வங் களாகும்.

(விரை : ஆகாச முதலிய ஐந்து சூட்சும பூதங்களை இரு பகுதியாக்கியதில் ஒரு பகுதியை ஒவ்வொன்றையும் நாலு கூறாக்கி மறு பகுதியாய ஐந்து பூதங்களுடன் சேர்க்காமல் அந்நிய பூதங்களுக்கு அரைக்கால் அரைக்கால் பாகம் கொடுத்தால் தன்பாகம் பூரண மாவதுடன் தூல பூதங்களாகின்ற இது பஞ்சீகரண மெனப்படும்.

**தமோகுண சூட்சம பஞ்சபூதங்களின் கலப்பு விபரம்**

| ஆகாயம் | | | | வாயு | | | | அக்னி | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வா | அக் | அப் | பூ | ஆ | அக் | அப் | பூ | ஆ | வா | அப் | பூ |

| அப்பு | | | | பூமி | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஆ | வா | அக் | பூ | ஆ | வா | அக் | அப் |

69 இக் கரணங்கள் தானம் இதயஞா நேந்தியக்கட்
குய்க்குறுந்தொழிலாங்கேட்டல் உறல் காண்டல்
உண்டல் மோத்தல்
திக்குமா ருதமே நன்மித் திரனுயர் வருணனோடு
தக்கசு வினியாம் தெய்வ தானங்கா தாதியாமே.



(இ—ள்)

இக் கரணங்கள் தானம் இதயம் — இந்த மனம் புத்தி சித்தம் அகங்காரமான நான்கிற்கும் இடம் முறையே கண்டம் இதயம் நாபி சர்வாங்க மென்றும் (சொல்லப்படும்)

ஞானேந்திரியங் கட்கு — சுரோத்திரம், துவக்கு, சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரி யங்களுக்கு

உய்க்கு உறும் தொழில் — தம்மையுடையவரை விடயங்களில் சேர்க்கும் வியாபாரங்கள்

கேட்டல் உறல் காண்டல் உண்டல் மோத்தல் ஆம் — கேட்டலும் பரிசித்தலும் பார்த்தலும் சட் ரசங்களை உருசித்தலும் வாசனையறிதலு மாம். (அந்த ஞானேந்திரியட்கு)

திக்கு மாருதம் — திக்குப் பாலகர்களும் வாயு பகவானும்

நன்மித்திரன் உயர் வருணன் தக்க அசுவினிதெய்வம் ஆம் — உலகிற்கு சர்வ நலங்களு முடைய, சூரிய பகவானும் மேன்மை பொருந்திய வருண பகவானும் (தேவ வைத்தியத்தில்) தகவுற்ற அசுவினி குமாரர்களும் அதி தேவதைகளாம்

தானம் காது ஆதி ஆம் — அவ்விந்திரியங்களுக்கு முறையே இடம் செவி, தோல், விழி, நாக்கு நுனி, மூக்குநுனி ஆகும்.

**70 [சுரோத்ராதியிந்திரியங்கள் உள்விஷயங்களையும் அறியும்]**

புத்தியிந் திரியங் கடாமுணரும் விடயம்
புறமெனவே உள்ளு முணர்ந்திடுஞ்செவிகள் புதைப்பின்,
உய்த்த பிராணுதி யொலி கேட்கையந்நாதிகளை
யுண்ணும் போதழல் குளிர்ச்சியறிதல் விழிமூடின்
மெத்து மகவிருளறிதல் உத்காராதிகளின்
விளங்கு சுவை கந்தமறிந்திடன் முறையே யாகும்,
வைத்தகரு மேந்திரியத் தொழிலுரைத்த னடத்தல்
வழங்கல் விடல் ஆனந்தித் திடுதலென வறியே

இ—ள்

| | | |
|---|---|---|
| புத்தி இந்திரியங்கள் | — | அந்த ஞானேந்திரியங்களைந்தும் |
| தாம் உணரும் புறவிடயம் எனவே உள்ளும் உணர்ந்திடும் | — | தாம் அறிகின்ற பாகிய சப்தாதி விடயங்களைப் போல் தேகத் துள்ளும் சப்தாதி விஷயங்களை அறிவனவாம் |
| செவிகள் புதைப்பின் | — | செவிகளை விரல்களால் மூடிய விடத்து |
| உய்த்த பிராணாதி ஒலி கேட்கை | — | சுரோத்தி ரேந்திரியத்தால் தேகம் இந்திரிய முதலிய வற்றை செலுத்துகின்ற பிராணவாயு சாட ராக்கினிகளால் உண்டாகும் சத்தத்தைக் கேட்டலும் |
| அந்நாதிகளை உண்ணும் போது அழல் குளிர்ச்சி அறிதல் | — | அந்நம் முதலியவற்றை புசிக்கின்ற காலத்து துவக்கிந்திரியத்தால் உஷ்ணம் சீதம் முதலிய பரிசங்களை அறிதலும் |
| விழிமூடின் மெத்தும் அக இருள் அறிதல் | — | கண்களை மூடியவிடத்து நேத்தி ரேந்திரியத்தால் நெருங்கிய உள்ளிருளை அறிதல் |
| உட்காராதிகளில் விளங்கு சுவை கந்தம் அறிதல் முறையே ஆகும் | — | ஏப்பமிடுதல் வாந்தி பண்ணுதலில் உள்ளே விளங்குகின்ற சுவையினையும் வாசனையையும் முறையே சிங்குவேந்திரியமும்கிராணேத்திரியமும் அறிவதாகும் |
| வைத்தகர் மேந்திரியத் தொழில் | — | கர்ம சாதனமாக வைத்த வாக்கு பாணி, பாதம் பாயுறு, உபஸ்தமெனும் கர்மேந்திரியங்களின் வியாபாரங்கள் முறையே |
| உரைத்தல், நடத்தல். வழங்கல், விடல் ஆனந்தித்தல் என அறி | — | வசனித்தல் கமநாகமனம் ஏற்றலிடுதல் மலசலங் கழித்தல் ஆனந்தமடைதல் என்று நீ அறியக் கடவாய் |

71 அங்கிமக பதியிரவியுடன்மிருத்யு பிரசா
பதி தெய்வம்வாய் முதலா கோளகைக டானம்
இங்கிவையுள் உட்கரணம் இரு வகையிந்திரிய
மென்ன வரும் பதிநான்கும் அத்தியான் மிகமாம்
தங்குமி வற்றுறு விடயம் ஆதிபௌ திகமாம்
தகுமதிதே வதையாதி தெய்வீக மாமிப்
புங்கவரே யிந்திரியம் விராட் புருடற் கதுமெய்
பொன் கர்ப்பர்க் கதுமறைப்பாம் அந்தரியாமிக்கே:

(இ—ள்)

| | | |
|---|---|---|
| அங்கி மகபதி இரவி உடன் மிருத்யு பிரசாபதி தெய்வம் | — | வாக்கிற்கு அக்கினியும் பாணிக் கிந்திரனும் பாதத்திற்கு சூரிய பகவானும், பாயுறுவிற்கு எமனும் உபஸ்தத்திற்கு பிரசாபதியும் தெய்வங்களாம் |

| | | |
|---|---|---|
| வாய் முதலாம் கோளகைகள் தானம் | — | அக்கர்மேந்திரியங்களுக்கு வாக்கிற்கு வாயும், பாதத்திற்கு காலும், பாணிக்கு கையும், பாயுருவிற்கு குதமும் உபஸ்தத்திற்கு குய்யமும் ஸ்தனங்களாம். |
| இங்கு இவையுள் உள்கரணம் இரு வகை இந்திரியம் | — | துலதேகமாகிய இவ்விடத்திருக்கும் அந்தக்கரண முதலிய இவற்றுள் அந்தக்கரணம் நான்கும் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களாகிய இருவகை புறக்கரணங்கள் பத்தும் |
| என்னவரும் பதி *நான்கும் அத்தியான் மிகமாம் | — | என்று கூறப்படுகின்ற இப்பதிநான்கும் அத்தியான் மிகமாம் |
| தங்கும் இவற் றுறு விடயம் *ஆதி பௌதிகமாம் | — | உடம்பினுள் தங்கியுள்ள இவ்விந்திரியங்களுக்குள்ள சப்த முதலிய விடயங்கள் ஆதி பௌதிகமாம் |
| தகும் அதி தேவதை *ஆதி தெய்வீகம் ஆம் | — | தகவுற்ற அதி தேவதைகள் ஆதி தெய்வீகமாம் |
| இப்புங்கவரே விராட் புருடற்கு இந்தியம் | — | இவ்வதி தேவதைகளே விராட் புருஷனுக்கு இந்திரியங்களாவர் |
| அது பொன் கர்ப்பர்க்கு மெய் | — | அவ்விந்திரியங்களே இரணிய கருப்பருக்கு சரீரமாம் |
| அது அந்தரியா மிக்கு மறைப்பாம் | — | அச்சரீரம் அந்தர்யாமிக்கு சமஷ்டியஞ்ஞானமாம். |

1 ஆத்மாவை ஆசிரயித்துள்ள தூல சூட்சும சரீரங்கள் அத்தியான்மீகமாம்.

2 ஆத்மாவினது சரீர சங்கா தங்களுக்கு வேறாய் சட்சு வாதி இந்திரியங்களுக்கு விஷயமாவது அதி பூதமாகும்,



3 ஆத்மாவினது சரீராதி சங்காதங்களுக்கு வேறாய் சட்சு முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாம லிருப்பது அதி தெய்வமாம். 71

72 நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு வாசாம்
நிசுவாசம் இயற்றுமபா னன்குதத்தின் உற்றுச்
சென்றொழிய மலசலங்கள் ஒழித்தலுறுஞ் சமானன்
சேர்ந்துந்தியந் நரசம் உறுப்பனைத்தும் பகுக்கும்.
என்று முதா னன்களமுற்றுத் காரம் புரியும்,
இருந்தங்க மெங்கும் வியா னன்பரிக்கு முடம்பைக்
குன்றுதலினாகன் சோம்பாவித்தல் விளக்கும்,
கூர்மனால் விக்கலொடு தேக்குளவாம் அன்றே.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பிராணன் இதயம் தனை அடைந்து நின்று | — | பிராணாதி ஐந்தினுள் பிராண வாயுவானது. இருதயஸ்தானத்தைச் சேர்ந்து நின்று துவக்கிந்திரியத் தாலறியாமல் |
| உசுவாசம் நிசுவாசம் இயற்றும் | — | தூல வாயுக்கலையுள்ளில் இழுப்பதும் வெளியில் தள்ளுவதுமான உசுவாச நிசுவாசத்தைச் செய்யும் |
| அபானன் குதத்தில் உற்று மலசலங்கள் சென்று ஒழிய ஒழித்தல் உறும் | — | அபான வாயுவானது குதஸ்தானத்தில் இருந்து மலமூத்திரங்களை வெளியே செல்லும்படியாக அவற்றை ஒழிக்கும் |
| சமானன் உந்தி சேர்ந்து அந்நரசம் உறுப்பு அனைத்தும் பகுக்கும் என்று | — | சாமான வாயுவானது நாபிஸ்தானத்திலிருந்து கை, கால் முதலிய அவயங்களைத் திற்கும் உண்ட அந்நரசத்தை எப்போதும் பகுத்துக் கொடுப்பதாம் |

உதானன் களம் உற்று, உட்காரம் புரியும் — உதான வாயுவானது கண்டஸ்தானத்தைப் பொருந்தியிருந்து வாந்தி செய்விக்கும்

வியானன் அங்கம் எங்கும் இருந்து உடம்பை பரிக்கும் — வியான வாயுவானது தேகமுற்றிலுமிருந்து தேகத்தைத் தாங்கி நிலைபெறச் செய்யும்

குன்றுதல் இல் நாகன் சோம்பு ஆவித்தல் விளைக்கும் — நாகன் முதலிய உபவாயுக்களுள் குன்றுதலில்லாத நாக வாயு சோம்பலையும் கொட்டாவி விடுதலையும் உண்டாக்கும்

கூர்மனால் விக்கலொடு தேக்கு வரும் — கூர்ம வாயுவால் விக்கலும் ஏப்பம் விடுதலும் உண்டாகும்

73 தும்மலுடன் இருமல் வருங் கிரி கரனால் நகுதல்
சொல்லுதலாந் தேவதத்தனாற் சோக ராகம்,
இம்மை தருந்தன ஞ்சய னத்தனஞ்சயனாம் வாயு.
இறந்த ஐந்து நாள்காறுமிருந்து நனிவீங்கி,
மெய்ம்முழுதும் வெடிந்திடத் செய் தகலுநா காதி
விளம்பு புற வாயுக் கடாங் கருமேந்தியங்கள்
தம்மை மிக இயக்கலுறும் பிராணாதி வாயுத்
தாமியக்கும் விடாமான் ஞானேந்திரியங்களையே.

(இ—ள்)

கிரிகரனால் தும்மல் உடன் இருமல் வரும் — கிரிகரவாயுவால் தும்மலும் இருமலும் வருவதாம்

தேவதத்தனால் நகுதல் சொல்லுதல் ஆம் — தேவதத்த வாயுவால் சிரித்தலும் பேசுதலும் உண்டாவதாம்



தனம் சயன் இம்மை சோக ராகம் தரும் — தனம் சய வாயு இப்பிறப்பின் கண் பிறப்பிற்கேது வாய சோகத்தையும் இராகத்தையும் தருவதாம்,

தனம் சயனாம் வாயு இறந்த ஐந்து நாள் காறும் இருந்து மெய் — அத்தனஞ சயவாயுவானது பிராணவாயு நீங்கிய பின்னும் ஐந்துநாள் வரைக்கும் உடம்பிலிருந்து உடம்பு

முழுதும் நனிவீங்கி வெடித்திடச் செய்து அகலும் — முழுவதும் மிகவும் வீங்கப் பண்ணி தலையை வெடிக்கச் செய்து நீங்குவதாம்.

புறவாயுக்கள் விளம்பு நாகாதி கர்மேந்திரியங்கள் தம்மை மிக இயக்கல் உறும் — பாகிய வாயுக்களென்று சொல்லப்படுகின்ற நாகன் முதலிய வாயுக்கள், வாக்காதி கர்மேந்திரியங்களை மிகுதியாக இயங்கும்படி செய்வனவாம்.

பிராணாதி வாயு ஞானேந்திரியங்களை விடாமல் இயக்கும் — ஆந்தரமாயுள்ள பிராணன் முதலிய வாயுக்கள், சுரோத்திராதி ஞானேந்திரியங்களை தவிராமல் இயங்கும்படி செய்யும் 73

74 சாற்றின்வை ரம்பன்முக் கியன் பிரபஞ்சனந்
தரியாமி யொடு மகாப் பிராணனெனும் பெயர்
கொள்-
காற்றிவைகள் சீவசம் பந்தமா யேயுட்
கரணங்கள் இயக்கியிடு மண் முதலைந்திற்கும்
பாற்றிகழும் வியாபாரம் பொறைபிண்டீ கரணம்
பாகமொடு விரகமிடம் கொடையாகும் தருமம்
ஆற்றலுறு திண்மை நெகிழ் வழற்சிபரி
வெளியாம்
அயனொடரி அரனீசன் சதாசிவன்றே வதைகள்,

(இ—ள்)

| | | |
|---|---|---|
| சாற்றின் வைரம் பன் முக்கியன் பிரபஞ்சனன் அந்தரி யாமி ஒடு மகா பிராணன் | — | இன்னும் வாயுக்களின் வகையைக் கூறின் வையிரம்பனும் முக்கியனும் பிரபஞ்சனனும் அந்தர்யாமியும் மகா பிராணனும் |
| எனும் பெயர்கொள் | — | என்னும் பெயர் கொண்டுள்ள |
| காற்று இவைகள் | — | வாயுக்களாகிய இவ்வைந்தும் |
| சீவசம்பந்தமாய | — | சீவனுடன் சம்பந்தமாயிருந்து |
| உள் கரணங்கள் இயக்கியிடும் | — | மனமுதலிய அந்தக் கரணங்களை இயங்கும்படி செய்வனவாம் |
| மண் முதல் ஐந்திற்கும் பால் திகழும் | — | பிருதிவி அப்பு அக்கினி வாயு ஆகாயம் என்னும் பூதங்களைந்திற்கும் அவற்றினிடருந்து விளங்குகின்ற |
| வியாபாரங்கள் | — | வியாபாரங்களாவது முறையே |
| பொறை | | பிருதிவிக்குத் தாங்குதலும் |
| பிண்டீகரணம் | — | அப்புவிற்குத் தூளியைத் திரட்டுதலும் |
| பாகம் | — | அக்கினிக்குப் பாகம் செய்தலுமாம் |
| விரகம் | — | வாயுவிற்கு உலர்த்தலாம். |
| இடம் கொடையாகும் | — | ஆகாயத்திற்கு இடங் கொடுத்தலாம் |
| தருமம் | — | அப்பஞ்ச பூதங்களின் தர்மம் முறையே |
| ஆற்றல் உறு திண்ணம் | — | நிலைபெற்ற கடினமே பூமியின் தர்மமாம் |
| நெகிழ்வு | — | நெகழ்ச்சியானது அப்புவின் தர்மமாம் |
| அழற்சி | — | வெம்மை அக்கினியின் தர்மமாம் |



| | | |
|---|---|---|
| பரிசம் | — | (தொடுவதையறிதலான) பரிசம் வாயு தர்மமாம். |
| வெளி | — | வெளியாயிருப்பது ஆகாயத்தின் தருமம் |
| அயன் அரி அரன் ஈசன் சதாசிவன் தேவதைகள் | — | பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் மகேஸ்வரன் சதாசிவன் அதிதேவதைகளாகும் 74 |

75 கந்த முதலாயினவே குணங்களவை தம்முட்
ககனத்திற் கொலியொன்றே வளிக்கிரண்டூ
றுடனோ
அந்தழலுக் கொலியொடு மூன்றறற்கிரதமொடு
நான்கைந்து மணமொடு புவிக் கென்றறி
கதிரிபுடிதான் முந்துஞா திருஞானம் ஞேயமாம்
அவற்றுள்
மூலவகங் காரஞ்சேர் சீவசை தன்னியம்
நந்துஞா திருமனத்திற் கதுவறிவு ஞானம்
நவின்ற பௌதிக விடய ஞேய மென்றறியே

இ—ள்

| | | |
|---|---|---|
| கந்த முதல் ஆயினவே குணங்கள் | — | கந்தம் ரசம் ரூபம் பரிசம் சத்தம் என்பனவே முறையே அப்பிருதி வியாதி பஞ்ச பூதங்களின் குணங்களாம். |
| அவை தம் முள் ககனத்திற்கு ஒலி ஒன்றே | — | அக்குணங்களுக்குள் ஆகாயத்திற்கு (பிரதிதொனி ரூபமான) சத்தகுணமொன்று மாத்திரமுளது |
| வளிக்கு ஊறுடனே இரண்டு | — | வாயுவிற்கு விஸ்ஸென்னும் சத்தமும் உஷ்ண சீதமின்றிய பரிசத்துடனே இரண்டாம் |

அம் அழலுக்கு ஒலி ஒடு மூன்று — அழகிய அக்கினிக்கு புகு புகு என்னும் சத்தமும் உஷ்ண பரிசமும் வெண்மை ரூபத்தோடு மூன்று குணங்களாகும்.

அறற்கு இரசம் ஒடு நான்கு — அப்புவிற்கு (புளு புளு வென்னும் சத்தமும் சீதபரிசமும் விளக்கமின்றிய வெண்மை ரூபமும்) மதுர ரசத்தோடு நான்கு குணங்களாகும்

புவிக்கு மணம் ஒடு ஐந்து — பிருதிவிக்கு (நற்கந்தம் துற்கந்தம்மென்னும் இருவகை கந்தத்தோடு (கடகட வென்னும் சத்தமும் நீலாதி ரூபமும் கடினபரிசமும்மதுராதி நாநாரசமுமாகிய ஐந்துகுணங்களாகும்

என்று அறிக — (பஞ்சீகரண பண்ணின ஐந்து பூதங்களில் தன் தன் காரணமான பூதங்கள் வியாபகமும் தன்தன் காரியமான பூதங்கள் வியாப்பியமும் ஆனதால் காரண பூதங்களின் குணங்கள் காரிய பூதங்களில் தோற்றும் காரிய பூதங்களின் குணங்கள் தன் தன் காரண பூதங்களில் தோற்றாது என்று அறிவாயாக என்பதாம்.

## (திரிபுடி)

திரிபுடிதான் முந்து ஞாதுரு ஞானம் ஞேயம் ஆம் — திரிபுடி என்பது முதன்மை வாய்ந்த, காண்பான் காட்சி காணப்படும் பொருள்களாம்.

அவற்றுள் மூல அகங்காரம் சேர் சீவ சைதந் நயம் நந்து ஞாதுரு — அம்மூன்றனுள் மூல அகங்காரத்தில் பிரதிபலித்துள்ள சீவசைதந்நியமே (தத்துவ ஞானத்தால் நாசமாதற்குரிய காண்பானாகிய ஞாதுருவாம்)



மனதில் கதுவு அறிவு ஞானம் — மனத்தில் பிரதி விம்பத்துள்ள சைதந்நியமே, ஞானமாம்

நவின்ற பௌதிக விடயம் ஞேயம் என அறிக — முன்னர் கூறிய பூத பௌதிகம் விஷயங்களாம். அப் பூத பௌதிக விஷயாவச் சின்ன சைதந்நியமே ஞேயமாமென்று (நீ) திரிபுடியை அறிவாயாக

## 76 (தத்துவங்களைக் கூறல்)

ஈங்குமனம் இருபத்து நான்காவ தாகும்.
இருபதைத்தந் தாவதுதான் மூலவகங் காரம்
ஆங்கதனை யடைதலுறும் சிதபாச சீவன்
அறையுமிரு பத்தாறா மவன்மாயை மருவும்
ஓங் கொளியாம் ஈசனிருபத் தேழாமவன்
வுயிர்முதலாந் துரியனிரு பத்தெட்டா மவனாம்.
நீங்கலரும் ஈசனதிட்டாத் திருவாம் பிரமம்.
நிகழ்த்திலிரு பத்தொன்ப தாவதுவாம் அன்றே.

(இ—ள்)

ஈங்குமனம் இருபத்து நான்காவது ஆகும் — பூதங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5 வாயுக்கள் 5 அந்தக் கரணம் 4 என்று கூறியுள்ளதில் மனம் இருபத்து நான்காவதாகும்

மூல அகங்காரம் இருபத்து ஐந்தாவது — மூல அகங்காரம் இருபத்தைந் தாவது தத்துவமாகும்

அதனை அடைதல் உறும் சிதாபாச சீவன் அறையும் இருபத்து ஆறாம் அவன் — அம் மூல அகங்காரத்தைப் பிரதிவிம்ப வடிவமாய் அடைந்துள்ள சீவசிதாபாசன் சித்துப் போலியென்று சொல்லப்படுகின்ற இருபத்தாறாம் தத்துவமாவன்

| | |
|---|---|
| மாயை மருவும் ஓங்கு ஒளியாம் ஈசன் இருபத்து ஏழாம் அவன் — | மாயாவுபாதினாய வுயர்ந்ததிற் பிரகாச ஈசுவரன் இருபத் தேழாவது தத்துவமாவன் |
| அவ்வுயிர் முதல் ஆம் துரியன் இருபத்து எட்டாம் அவன் ஆம் — | அந்தச்சிதாபாசனுக்கு, அதிஷ் டானமான கூடஸ்தன், இருபத்தெட்டாவது, தத்துவம் ஆவன் |
| நீங்கல் அரும் ஈசன் — அதிட்டத் துருவாம் பிரமம் நிகழ்த்தில் இருபத்து ஒன்பது ஆவது ஆம் | கல்யாண குணங்களை நீங்கு தலில்லாத ஈசுவரனுக்கு அதிஷ்டானமான பிரம்மம் இருபத்தொன்பதாவது தத்துவமாம் |

## (77 கிரம சிருஷ்டி)

தெரித்தகா ரியத்தோற்றம் இருவகையாம் கிரம
சிஷ்டியுக பத்சிருட்டி யெனமூலப் பகுதி,
விரித்தமக தத்துவமக முந்தன்மாத் திரையாம்.
விளங்குசத்தப் பிரகிருதியாற் பஞ்ச பூதம்.
உரைத்தவற்றாற் பிரமாண்ட பிண்ட முதலாய
வுலகுதயந் தான்கிரம சிருட்டி நிறைகடலான்
மருத்துவசத் தலையாதி போற்சித்தின் மாயா
மயநாம வுருவநிகழ்வா முகபத் சிருட்டி.

(இ-ள்)

| | |
|---|---|
| தெரித்த காரியத் தோற்றம் — | முன்பு கூறிய காரியோபற் பத்தியானது. |
| கிரம சிருட்டி — உகபத் சிருட்டி என இரு வகையாம் | கிரம சிருஷ்டி யென்றும் உகபத் சிருஷ்டியென்றும் இரு பிரகாரமாம் (அவற்றுள்) |
| மூலப் பகுதி விரித்த — மகதத்துவம் அகமும் | மூலப் பிரகிருதியின்நின்றும் தோன்றிய மகதத்துவமும் அதினின்றும் தோன்றிய மூல அகங்காரமும். |
| தன் மாத்திரையாம், — விளங்கு சத்தப்பிர கிருதியால் பஞ்ச பூதம் | அவ்வகங்காரத்தினின்றும் பஞ்ச தன் மாத்திரை களுண்டாம். மகதத்துவம், மூல அகங்காரம் பஞ்ச தன் மாத்திரைகள் என விளங்கா நின்ற இவ்வேழ் பிரகிருதியுள்) பஞ்ச தன் மாத்திரை யினின்றும் தூல பஞ்ச பூதங்களுண்டாம். |
| உரைத்த அவற்றால் — | கூறிய அப்பஞ்ச பூதங்களினின்றும் |
| பிரமாண்டபிண்டம் — முதல் ஆய் உலகு உதயம் தான் கிரம சிருட்டி | பிரமாண்டம் சரீரம் முதலா யுள்ள வுலகங்கள் உற்பத்தி ஆதலே கிரம சிருஷ்டியாம் |



## (உகபற் சிருஷ்டி)

| | |
|---|---|
| நிறை கடலின் — மருத்துவ சத்து அலையாதி போல் | அலையில்லாது நீர் நிறைந் துள்ள கடலின்கண் ஏக காலத்தில் வாயுவின் வசத்தால் அலைதிவலை நுரையாதிகள் தோன்றுவன போல். |
| சிவத்தில் மாயாமய — நாம உருவம் நிகழ்வு உகபத் சிருட்டியாம் | சச்சிதானந்த பிரமத்தின் கண் (ஏக காலத்தில் மாயை யின் வசத்தால்) மாயாமயமா யுள்ள நாமரூப, வடிவ உலக முற்பத்தியாதலே உகபத் சிருஷ்டியாம். 77 |

## 78 (சிருஷ்டி திருஷ்டாந்தம்)

சுருதிசித்தம் ஆதலினால் இவையுடம் பாடாகும்-
தூயபரம் பிரம்மாம் விகாரமிலா விறையால்

தருதலெங்கன் காரியங்கள் சடப்பகுதி யென்னில்.
தாளிலாக் கதிர்ச்சிலையில் இச்சையிலா தெழுந்த
பகுதியினால் அழல்வரல்போற் பரசிவனால் மூலப்
பகுதியிடை மகதாதி காரியங்கள் வரற்குக்,
கருதின் முரண்ணிலையாகும் எனப்புகல்வர் அறிஞர்
காரியங்கள் தோற்றுதனால் வகையவை
யீண்டுரைப்பாம்

(இ—ள்)

| | |
|---|---|
| இவை சுருதி சித்தம் ஆதலினால் உண்டாகும் — | (கிரம சிருஷ்டி உகபத் சிருஷ்டியெனும்) இரண்டும் வேத சம்மதமாக கூறப் பட்டனவாம். ஆனதால் அங்கீகரிக்கத் தக்கதேயாம் |
| தூய பரப்பிரம்ம மாம் விகாரம் இலா இறையால் — | (சாமானியத்தால் மறை படாத) பரிசுத்த பரப்பிரும்ம சொரூபமான யாதொரு விகாரமின்றிய பரமேஸ்வரனால் |
| சடப்பகுதி காரியங்கள் தருதல் எங்ஙன் என்னில் — | சடரூபப் பிரகிருதியினின்றும் மகதத்துவ முதலான காரியங் கள் உண்டானது எவ்வித மென்று வினவுவாயாயின் |
| இச்சையிலாது எழுந்த பரிதி யினால், தாளிலா ததிர் சிலையில் அழல் வரல் போல் — | இக்காரியம் செய்வோ மென்னும் இச்சாப் பிரயத்தன மில்லாமல் எழுந்தருளிய சூரிய பகவானால், இவ்வாறு ஆதல் வேண்டும் என்னும் முயற்சி முதலியன இல்லாத சூரிய காந்த கல்லினின்றும் அக்கினி உண்டாதல் போல |



## [தாஷ்டாந்தம்]

| | |
|---|---|
| பரசிவனால் மூலப் பகுதி இடை மகதாதி காரியங்கள் வரற்கு — | பரமேஸ்வரனால் மூலப் பிரகிருதியினின்றும் மகதத்துவ முதலான காரியங்கள் உண்டாவதற்கு (இப்படி) |
| கருதின் முரண் இலையாகும் என அறிஞர் புகல்வர் — | ஆராய்ந்து அறியுமிடத்து விரோதமில்லையாமென்றும் (மகதத்துவ முதலாயின காரியங்கள் உண்டாகும் வகையினை பண்டிதர் பகர்வர் |
| காரியங்கள், தோற்றுதல் நால்வகை — | காரியங்கள் உண்டாவன நான்கு விதமாம் |
| அவை ஈண்டு உரைப்பாம் — | அந்நான்கு விதங்களையும் இங்கெடுத்துரைப்பாம் 78 |

## 79 [காரியோதய சதுஷ்டயம்]

விருத்திபரி ணாமமாரம் பம்விவர்த் தமதாம்
விரிந்தபடம் குடில்பாவம் பாறயிரா காரம்
உரைத்தலுறு தந்துபட நியாயம்வன் பழுதை
வுரகவுரு முறையவற்றின் திட்டாந்த மாகும்
வருத்து கயிற்ற ரவங்கந் தருவநகர் குற்றி
மகன் கநவிந் திரசாலஞ் சுத்திகா ரசதம்
தெரித்தவிவை முதலனவாம் திரிதலின் மெய்ப்
பொருளிற்
றிருந்திடு பொய்ப் பொருளது கற்பித மாதற்குவமை

| | |
|---|---|
| விருத்தி பரிணாமம் ஆரம்பம் விவர்த்தம் ஆம் அவற்றில் — | அவை விருத்தியும், பரிணா மமும், ஆரம்பமும், விவர்த்த மும் ஆம் அந்நால்வகைத் தோற்றங்களுக்கும் |
| விரிந்த படம் குடில் பாவம் — | விரிந்த வஸ்திரம் சிறுவீடு உருவம் ஆவதும் |

| | |
|---|---|
| பால்தயிர் ஆகாரம் — | பால் தயிர் வடிவமாவதுவும் |
| உரைத்தல் உறு — | அவயவமென்று கூறப்படும் |
| தந்து நியாயம் படம் | நூல் முறையாக வஸ்திர மாவதுவும் |
| வன்பழுதை உரக உருமுறை திருட் டாந்தம் ஆகும் திரிதல் இல்மெய்ப் பொருளில் — | வலிய கயிற்றினின்றும் பாம்பின் வடிவம் தோற்றும் கிரமாகக் கூறும் திருஷ்டாந் தங்களாம் (எக்காலத்தும் உண்மையாக) வேற்று வடிவம் ஆவதில்லாத சத்ரூப பிரமத்தின் கண் |
| திரிந்திடு பொய்ப் பொருளது — | வேறுவடிவ மடைகின்ற மித்தியா வஸ்துக்கள் |
| கற்பிதம் ஆதற்கு உவமை வருத்து கயிற்று அரவம் கந்தருவ நகர் குற்றி மகன் — | பொய்யாகத் தோற்றுவதற்கு வுவமை என்னும் திருஷ்டாந் தங்கள் (ஆவன. பாம்பெனத் தன்னைக் கண்டவரை வருத்தும் கயிற்றரவும் கந்தருவ பட்டி ணமும் ஸ்தாணுபுருஷனும் |
| கநவு இந்திரசாலம் சுத்தி காரசதம் ஆக தெரித்த இவை முதலியன ஆம் — | சொப்பனவுலகும் இந்திரசால பட்டிணமும், இப்பியில் தோன்றும் வெள்ளியும், இவ்விதம் ஆராய்ந்து கூறு கின்ற இவைகள் முதலனவாம் |

79

## 80 [காரணத்வ தோஷ பரிகாரம்]

பொய்ப் பொருள்கற் பிதமாயிற் றவிகாரி யாகப்
பொருந்து முயிரிடத் தேன்முன் பிராந்தியார்க் கென்னில்
ஒப்பில் சதி பதிரதிமா லுருவச் சொப் பநந்தான்
ஒரு முனிவன் பாலு திப்பினதனாலங் கவனுக்
கெப்பழுதும் இலாததுபோற் சான்றாமான் மாவில்
இலங்குகுணா வுருவமாம் பகுதியினால் மருளும்



மெய்ப்பரிய ஞாதிருவும் பிராந்தி ஞானமும் பொய்
விடய ஞேய மும்வரினும் அவற்கிடையூ றிலேயே.

(இ—ள்)

| | |
|---|---|
| அவிகாரியாக — | நிர்விகார சொரூபமாகவும் |
| பொருந்தும் உயிர் இடத்து | சர்வாதிஷ்டானமாகவும் பொருந்தியுள்ள ஆத்மாவின் கண், |
| பொய்ப்பொருள் ஏன் — கற்பிதம் ஆயிற்று | மித்தியா வஸ்து பொய்யாகத் தோற்றிற்றென்று கூறினால் |
| முன் பிராந்தி — யார்க்கு என்னில் | ஏன் கற்பிதத் தோற்றம் தோன்றிற்று முதலில்யார்க்குத் தோன்றிற்று என வினவினால் |
| ஒரு முனிவன் பால் — ஒப்பு இல் சதிபதி | ஓர் முனிவனிடத்து (நித்ரா தோஷத்தால், உவமையற்ற காதலியும் காதலனும். |
| ரதிமால் உருவ — சொப்பனம் உதிப்பின் | அவனுக்கு அவனோடு கூடல் வடிவ அனுபவ ரூப பெரிய இன்பமும் ஆகிய திரிபுடி வடிவ செப்பனமானது கற்பிதமாகத் தோன்றுமாயின். |
| அதனால் — அவனுக்கு எப்பழுதும் இலாது அதுபோல் | அக்கநவினால் அம் முனிவனுக்கு எவ்விததீங்கும் உண்டாகாதது போல். |
| சான்று ஆம் — ஆன்மாவில் | சர்வசாட்சியாயுள்ள ஆத்மாவின் கண் |
| இலங்கு குண — உருவு ஆம் பகுதியினால் மெய்ப்பு அரிய | சதசத் விலட்சணமாய் விளங்கும் முக்குன ரூப மூலப் பிரகிருதியால் பொய்யான |
| மருளும் ஞாதுருவும் — | மனமயங்கிய காண்பானும் |
| பிராந்தி ஞானமும் — | மித்தியா ஞானமும், |

| | | |
|---|---|---|
| விடயப் பொய்ஞே யமும் வரினும் அவர்கு இடையூறு இல்லை | — | மித்தியா விஷயமாகிய ஞேயமும் (ஆகிய திரிபுடி வடிவ பிரபஞ்சமானது கற்பிதமாய்த்தோற்றுமாயினும் அப்பிர பஞ்சத்தால் அவ் வாத்மாவிற்கு (யாதொரு) தீங்கு மில்லையென்பது நிச்சயம் 80 |

## 81 (ஈசுவர சிருஷ்டி சீவ சிருஷ்டி)

இறைவனாற் றோன்றிய மாயாமயமாம் உலகம்
இருந்தபடியிருக்குந்தன் வடிவினால் அதனுண்
மறைவிலா சீவபுத்தி விருத்திகற்பிதமா—
மற்றொரு போக்கிய வடிவ மேவிருப்பு விடயம்,
வெறுவிதாம் வெறுப்புவிட யத்தினொடு நொதுமல்
விடயமென பலவிதமாம் அவையாவை யென்னில்
முறையின் வநிதாதிபுலி யெழுவாய் வீழ்துரும்பு
முதலனவாம் என மொழிவர் முற்று
முணர்ந்துடையோர்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| இறைவனால் தோன்றிய மாயா மயம் ஆம் உலகம் | — | பரமேஸ்வரனால் சிருஷ்டி யானமாயா வடிவமான (தேகாதி பிரபஞ்சம்). |
| தன்வடிவினால் இருந்தபடி இருக்கும் அதனுள் | — | தனது சொருபத்தோடு (ஒரே வடிவமாய்) இருக்கின்ற விதமே இருப்பதாம் அப் பிரபஞ்சத்துள் |
| மறைவு இல்லாத சீவபுத்திவிருத்தி கற்பிதம் ஆம் | — | (நானென்னும் சாமானியஅம் சத்தில்) ஆவரணமில்லாத சீவனது புத்தி விருத்தியினால் கற்பிதமான |



| | | |
|---|---|---|
| ஒரு போக்கிய வடிவமே விருப்பு விடயம் வெறுப்பு விடயத்தின் ஒடு | — | ஓர் போக்கிய ரூபப் பொருளே பிரீதிக்கு விஷயமும் துவேஷத்திற்கு விஷயத் துடனும் (இராகத்து வேஷமாம்) பயனில்லாத |
| வெறுவிதாம் நொதுமல் விடயம் எனத் திரிவிதம் | — | உபேட்ச விருத்திக்குல் விடயமும் என மூவிதமாயிருப்பதாம். |
| அவையாவை என்னில் | — | அவைகள் எவை யென்றால் |
| முறையின் வனிதாதி, புலி எழுவாய், வீழ் துரும்பு முதலியன ஆம் என | — | கிரமமாக (பிரீதிக்கு) ஸ்திரி புத்திரன், பொருள் முதலியனவும் (துவேஷத்திற்கு) புலி பாம்பு திருடன் முதலியனவும் உபேட்ஷைக்கு வீதியில் வீழ்ந்து கிடக்கும் துரும்பு முதலியன விஷயங்களாகுமென்று |
| முற்றும் உணர்ந்து உடையோர் மொழிவர் | — | வேதாந்த சாஸ்திரப் பொருளனைத்தும் உள்ளவாறு உணர்ந்துள்ள பெரியோர்கள் இவ்வாறு விஷயங்களை மூவிதமாகக் கூறுவார்கள் 81 |

82 ஈசனிருதமான வேகா கா ரமும்பின்-
எய்துமுயிர்க் கற்பிதமாம் பலவாகா ரமுமோர்
தேசவிடயத்து றுதற் கெவ்வாறிங் கென்னிற்
றிட்டாந்தம் ஈசனிரு மிதமணியாதிகடாம்
பேசிலொரு தகையாப் போத் துருப்புத்தி தன்கற்
பித நாநா விதத்தினால் அவைதமை பெற்றோனுக்
காசை விடய மதாகிப் பெறாற்கு வெறுப்பாகி
அரிய துறவிக்குபேட் சாவிடயமாமே,

இ—ள்

| | | |
|---|---|---|
| ஓர் தேச விடயத்து | — | ஓரிடத்துள்ள (அந்த ஒரு விடயத்தின் கண் |
| ஈசன் நிருமிதம் மான ஏக ஆகாரமும் | — | பரமேஸ்வரனுடைய சிருஷ்டியானது ஒரு வடிவமும் |
| பின் எய்தும் உயிர் கற்பிதம் ஆம் பல ஆகா ரமும் உறுதற்கு | — | அவ்வொரு வடிவத்தின் பின்னர் உண்டாகும் சீவனது கற்பிதமான அநேக வடிவமும் பொருந்துதற்கு |
| திட்டாந்தம் இங்கு எவ்வாறு என்னில் | — | திருஷ்டாந்தம் இவ்விடத்தில், எவ்விதமென்றால் |
| ஈசன் நிருமிதம் மணியாதிகள் | — | ஈசுவர சிருஷ்டியாயுள்ள இரத்தின முதலிய பொருள்கள் |
| பேசில் ஒரு தகையாய் | — | ஆராய்ந்து கூறுமிடத்து ஒரு தன்மையன வாயிருந்தும் |
| போத்துரு புத்தி கற்பித நா நா விதத்தினால் | — | போக் தாக்களாகிய சீவர் களது புத்தி விருத்திகள் கற்பிதம், பலவிதமாயிருத் தலால் |
| அவை பெற்றோனுக்கு ஆசைவிடயமது ஆகி | — | அந்த மணிமுதலிய பொருள் களைப் பெற்றவனுக்குப் பிரீதிக்கு விடயமாதாகியும் |
| பெறார்க்கு வெறுப்பு ஆகி அரிய துறவிக்கு உபேட்சா விடயம் ஆம் | — | அவ்விடயங்களை பெறாத வனுக்கு துவேஷத்திற்கு வடிவமாகியும் (உலகின்கண் பெறுதற்கு) அரிய வீரக்த புருஷனுக்கு உபேட்சைக்கு விஷயமாயுமிருப்பனவாம். 82 |

83 அப்பொருடான் விளங்கி தோன்றுவதற் கின்னும்
அறைதுமொரு திருஷ்டாந்தந் தோன்றியவோர் மாது
மெய்ப்பரிசோர் திறமாக போத்திருக்கள் புத்தி



விருத்திகற் பிதத்தினால் தாதைக்கு மகளாய்த்
தப்பில் கொழுநற்குக் காதலியாகி மகற்குத்
தாயாகி மாதுலற்கு மருகியா யிருப்பள்,
இப்பரிசு விடயமெலாம் இறைவனிரு மிதமும்
இலங்குயிர் கற்பிதமாயிரு திறத்துற்றிடுமே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| அப்பொருள் தானே விளங்கி தோன்றுவதற்கு | — | (ஈசனிரு மிதமான) அந்த ஒரே வடிவமான பொருளே, பல சீவர்களின் புத்தி விருத்திக்குப் பல விஷய மாகுமென்பதை விளங்கித் தோன்றுதற்கு |
| இன்னும் ஒரு திட்டாந்தம் அறைதும் | — | இனிமேலும் ஓர் திருஷ்டாந்தம் கூறுவோமாக |
| தோன்றிய ஓர்மாது மெய்ப் பரிசு ஓர் திறம் ஆக | — | ஈசுவர சிருஷ்டியில் உண்டா யிருக்கின்ற ஒரு பெண்ணினது மாமிசமயமான தேகத்தன்மை ஒரு பிரகாரமாயிருக்க |
| போத்துருக்கள் புத்தி விருத்தி கற்பிதத்தினால் தாதைக்கு மகளாய் | — | போக்தாக்களது மனோ விருத்தி கற்பனையால் பிதா விற்குப் புத்திரியாகவும் |
| தப்பு இல் கொழுனற்கு காதலியாய் | — | தவறுதலின்றிய கணவனுக்கு- மனைவியாகவும் |
| மகற்கு தாய் ஆகி | — | மகனுக்கு மாதாவாகவும் |
| மாதுலற்கு மருகி ஆய் இருப்பாள் | — | மாமனாருக்கு மருமகளாகவும் மிருக்கின்றாள். |
| இப்பரிசு விடயம் எலாம் | — | இவ்விதமாக ஏகமாகவும் அநேகமாகவும் மாயா மயமான விஷயங்களனைத்தும் |

இறைவன் நிருமிதமும் இலங்கும் உயிர் கற்பிதம் என இரு திறத்து உற்றிடும் — ஈசுவர சிருஷ்டியும் நாநாவாய் விளங்கும் சீவ சிருஷ்டியும் என்று இருவிதமாக இருப்பனவாம் 83

## 84 [இவ்விரு வித சிருஷ்டியில் நீக்கத்தக்கது]

அண்ணனிரு மிதப்பிரபஞ்சத்தான்வா திப்ப-
தல்லாமையானு நூல் ஆசிரிய வடிவாய்,
நண்ணலரு முத்திசாத நமாயுந் தன்னால்
நழுவ வொண்ணா மையினாலும் அனையது தானிற்க
எண்ணரிய சீவகற்பிதமாய வதுதான்
இரு பிரபஞ்சங்கள் சாத்திரத் தோடசாத்திரமாங்
கண்ணும சாத்திர பிரபஞ் கொலிரு திறனாம்
கழறிற்றீ விரமந்தம் என வவையீண்டு ரைப்பாம்.

(இ—ள்)

அண்ணல் நிருமித பிரபஞ்சம் வாதிப்பது அல்லாமையானும் — ஈசுவர சிருஷ்டியாகவுள்ள மாயாப் பிரபஞ்சமானது (அதிகாரி புருஷனுக்கு) பாதகமில்லாதபடியினாலும்.

நூல் ஆசிரிய வடிவாய் நண்ணல் அருமுத்தி சாதனமாயும் தன்னால்நழுவ ஒண்ணாமையினாலும் — வேதாந்த சாஸ்திர சற்குரு வடிவமாயிருப்பதாலும் (தத்துவ ஞானத்தாலன்றி பிரிதொன்றால்அடைதற்கரிய) முத்தி சாதனமாக இருப்பதாலும் (அதிகாரி புருஷனாகிய தன்னால் மித்தை யென்று அறிவதேயன்றியதனை நீக்குதற்குக் கூடாமையினாலும்

அனையதுதான் நிற்க — அந்த ஈசுவர சிருஷ்டியாகிய பிரபஞ்சம் அப்படியே இருக்கட்டும்



எண்ணரிய சீவ கற்பிதம் ஆய அது — (இவ்வளவென்று அளவிட்டு) கணித்தற்கரிய சீவ சிருஷ்டியான பிரபஞ்சம்

சாத்திரத்தோடு அசாத்திரம் இரு பிரபஞ்சம் ஆம் — சாத்திரப் பிரபஞ்சமும், அசாஸ்திரப் பிரபஞ்சமும் என இரண்டு பிரபஞ்சங்களாம் (அவற்றுள்) ஆராய்ந்து

கழறில் கண்ணும் அசாத்திர பிரபஞ்சம் — கூறுமிடத்து (தன்னை யடைந்த வரை) வருத்தும் அசாஸ்திரப் பிரபஞ்சமானது.

தீவிரம் மந்தம் என இரு திறனாம் — தீவிரமென்றும் மந்தமென்றும் இரு வகையாயிருப்பதாம்,

அவை ஈண்டு உரைப்பாம் — அவ்விருவகையையும் இங்கெடுத்துக் கூறுவாம் 84

## 85 சாஸ்திர அசாஸ்திரப் பிரபஞ்சங்கள்

சீவபர விசாரணையே வுரைத்தலரி தாஞ்சாத்
திரப்பிரபஞ் சங்காமாதிகளேதீவிரமாங்
காவலுறுஞ் சாதி கருமாதிகமோ டேதன்-
கருது மனக் கற்பிதமே மந்தம சாத்திரத்தின்
மேவுறுமவ் விருதிறனும் ஆருயிர் மெய்க்காட்சி
விரோதிகளா தலின் ஞானம் பயிறற்கு முன்னம்
ஓவுவசாத்திரப் பிரபஞ்சந்தான் மெய்ஞா நம்
உதவியாயாந் மக் காட்சிப்பின் விடுவதுமாம்

இ—ள்

சீல பரவி சாரணையே உரைத்தல் அரிதாம் சாத்திரப் பிரபஞ்சம் — ஆத்மப் பிரம்ம விசாரமே (சாஸ்திராநுபவயுக்தியில்லார்) சொல்லுதற் கரிய சாஸ்திரப் பிரபஞ்சமாம்

காமாதிகளே தீவிரம் ஆம் — (அசாஸ்திர ப்பிரபஞ்சத்தினுள்) காமக்குரோத முதலியனவே தீவிரப் பிரபஞ்சமாம்.

| | |
|---|---|
| காவல் உறும் சாதி கருமாதிகம் ஒடு — | பந்தப்படுத்துகின்ற தன் வருணாச் சிரமத்திற்குரிய கருமங்களுடனே, |
| கருதுமனக் கற்பிதம் மந்தம் — | நினைக்கின்ற மனத்தின் சங்கற்பமே மந்தப் பிர பஞ்சமாம், |
| அசாத்திரத்தில் மேவுறும் இவ் விருதிறனாம் — | அசாஸ்திரப் பிரபஞ்சமாயுள்ள (தீவிரம் மந்தமென்னும்) இவ்விருவகைப் பிரபஞ்சங் களும் |
| ஆர் உயிர்மெய்க் காட்சி விரோதிகள் ஆதலின் — | கடத்தில் மண்போல் எங்கும் நிறைந்துள்ள, ஆத்மாவினது, உண்மையான, தரிசனத்திற்கு, விரோதிகளாயிருத்தலின், |
| ஞானம் பயிறற்கு மூன்னம் ஒவுவ -- | தத்துவ ஞானம் அப்பியா சத்திற்கு முன்னமே விடத் தக்கதாம். |
| சாத்திரப் பிரபஞ்சம் — மெய்ஞ் ஞானம் உதவியாய் | சாஸ்திரப் பிரபஞ்சமானது தத்துவஞானத்தையடை வதற்கு சாதனமாயிருத்தலால் |
| ஆன்மக் காட்சி பின் — விடுவது ஆம் | ஆத்ம சாட்சாத்காரத்திற்குப் பின்னர் விடத்தக்கதாம் 85 |

## 86 ஞானியும் அசாஸ்திரப் பிரபஞ்சத்தை விடவும்

தீவிர மந்தங்களுயிர்க் காட்சியுற்ற பின்னும்
திகழ்முத்தி பெறற்பொருட்டு விடுவன வென்றறிக
பாவமுறு மவச்சின்னோ பாதிபதி விம்போ-
பாதியுடன் அத்தியா சோபாதி யெனவே
மேவுமுபா திகளொரு மூன்றுளவவற்றை முறையே-
விளம்பியிடிற் சுழுத்தியு ருவாமவித்தை தானே
ஆவரண வவச்சின்னோ பாதியாம் பிரத்திய
கான்மாவுக் கதனதுகா ரியமாம் புத்தி யினிற்,



(இ—ள்)

| | |
|---|---|
| தீவிர மந்தங்கள் — உயிர் காட்சி, உற்ற பின் | அசாஸ்திரப் பிரபஞ்சமான தீவிர மந்தங்கள் என்னும் காமாதிகளும் மனோ சங்கற் பமும் ஆத்ம ஞானமடைந்த பிறகும் |
| திகழ் முத்தி பெறல் — பொருட்டு விடுவன என்று அறிக | என்றும் ஆனந்தசா கரமாக விளங்குகின்ற மோட்ச மடைதற் பொருட்டும், விட்டு விடத்தக்கதே என்று அறிவாயாக |

## (உபாதித்திரயம்)

| | |
|---|---|
| மேவும் உபாதிகள் — பாவம் உறும், அவச் சின்னோ உபாதி | கற்பிதமாகப் பொருந்திய உபாதிகள் பாவனை வடிவ மாகப் பொருந்தியுள்ள அவச்சின்னோபதியும் |
| பதிவிம்போ — உபாதியுடன் அத்தியா சோபாதி என மூன்று உள | பிரதிபிம்போ பாதியுடன் அத்தியாசோபாதி என்றோர் மூவிதமாயிருக்கின்றன. |
| அவற்றை முறையே — விளம்பி இதன் பிரத்திய கான்மா விற்கு, சுழுத்தி உருவாம் அவித்தை தானே | அவ்வு பாதிகளை கிரமமாகக் கூறுமிடத்து பிரத்தியக் ஆன்மாவிற்கு சுழுத்திய வத்தை வடிவமாயுள்ள அஞ்ஞானமே |
| ஆவரண அவச் — சின்னோ உபாதியாம் | மறைப்பு வடிவமாயுள்ள அவச்சின்னோ பாதியாம் |
| அதனது காரியம் — ஆம் புத்தியினில் | அஞ்ஞானத்தின் காரியமான புத்தியின் கண் (இது குளகம்) |

87 பற்றிய வாந்மாப்பதிபிம் பித்திடுத றானே-
பதிபிம்போ பாதியாம் புத்திகத மாய,
முற்றுசுக துக்கங்கள் உயிர்நுகர்தல் போல-
முயலுதலே யத்தியா, சோபாதி யாகும்,
உற்றவத்தி யாசயிலக் கணமாம் வேறொன்றில்
ஒன்றினது புத்தியிப்பி வெள்ளியது போல,
மற்றதுநால் வகைப்படுமால் மித்தையுடன் இதர
மற்றிதரே தரஞ்சத்தியங் களினால் அன்றே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பற்றிய ஆன்மா பதிவிம்பித்திடுதன் பதிவிம்போ உபாதியாம் | — | சர்வ வியாகமாகப் பொருந்திய ஆத்மா, பிரதிபிம்பித்தலே பிரதிபிம்போபாதியாகும் |
| புத்திகதம் ஆய சுகதுக்கங்கள் முற்றும் | — | அந்தப் புத்தியின் தருமமாகி யிருக்கின்ற, சுகதுக்கங்கள் அனைத்தும் |
| உயிர் நுகர்தல் போல | — | ஆத்மா அநுபவித்தல் போல |
| முயலுதலே அத்தியாச உபாதியாகும் | — | முயற்சித்தலே அத்தயா சோபாதியாகும் |
| உற்ற அத்தியாச இலக்கணம் | — | இவ்விதமுற்ற அத்தி யாசத்தின் இலக்கணமாவது |
| ஒன்றில் வேறு ஒன்று உணர்தல் ஆம் | — | ஒரு பொருளில் மற்றோர் பொருளை அறிதலாம் |
| அது இப்பி வெள்ளி போல் ஆம் | — | அதற்கு காரணம் கிளிஞ்சலின் கண் வெள்ளியை அறிதல் போலாம் |



| | | |
|---|---|---|
| அதுமித்தை உடன் இதரம், இதரே இதரம் சத்தியங்கள் நால்வகைப்படும் | — | அவ்வத்தியாசங்கள், மித்தி யாத்தியாசம், இதரே அத்தியாசம் இதரே தர அத்தியாசம், சத்தியா அத்தியாசம் என நான்கு விதமாய் வழங்குவதாம் |

## 88 மித்தை முதலிய நான்கத்தியாசங்கள்

நெருப்பினொடு புணர்ச்சியாற்புனற் கழற்சிவரல் போல்
நித்தமுறுமான்ம சந்நிதியதனில் முறையே
சரிப்பினொடு காண்டனினை வுறலறிதல் வரலாற்
றகுந்தூல மெய்மித்தி யாத்தியா சந்தான்
இருப்பருமிந் தியங்களே யிதராத்தியாசம்
இதரேத ராத்தியா சங்கரணம் ஆகும்
தரிப்பரிய மூல வாங்காரமது தானே
சத்தியாத் தியாசமெனச் சாற்றுவர்தக் கவரே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| நெருப்பினொடு புணர்ச்சியால் புனற்கு அழற்சி வரல் போல் | — | அக்கினியினது சம்பந்தத்தால் தண்ணீர்க்கு உஷ்ண முண்டாதல் போல (ஓரபாமு மின்றிய) |
| நித்தம் உறும் ஆந்ம சந்நிதி அதனில் | — | சதோதயமாயிருக்கின்ற பிரத்யகாந்மாவினது சந்நிதானத்தினில் |
| முறையே சரிப்பின் ஒடு காண்டல் | — | கிரமமாகக் (காலால்) நடத்தலும் (கண்ணால்) பார்த்தலும் |
| நினைவு உறல் அறிதல் வரலால் | — | மனத்தால் நினைத்தலும் (புத்தியால்) நிச்சயித்தலும் உண்டாதலின் |

| | | |
|---|---|---|
| தகும் தூலமெய் மித்தியா அத்தியாசம் | — | போகாநுபவத்திற்கு தகுந்த நடத்தல் முதலிய சத்தியுள்ள தூலதேகமே மித்தியாத்தியாசமாம் |
| இருப்பு அரும் இந்திரியங்களே இதராத்தியாசம் | — | தத்துவ ஞானத்தில் நிலைத்தற் கரிய ஞானகர்மேந்திரியங் களே இதரேத்தியாசம் |
| கரணம் இதரே இதரே அத்தியாம் ஆகும் | — | அந்தக் கரணமே அந்யோந்நியாத் யாசமாகும் |
| தப்பரிய மூல அகங்காரம் அது தானே சத்திய அத்தியாசம் | — | விசாரத்தால் அழியும் மூல அகங்காரமே சத்தியாத்தி யாசம் |

## 89 நிருபாதிகாத்தியாசம்

ஆங்கார மாந்மாவிற் குநானெலாற் கயிற்றின்
அரவமென நிருபாதி காத்தியா சந்தான்
ஆங்கார வியலாந்மாவிற்கு நான் கருத்தா
வாமெனலாற் சிவப்புவலம் போற் சோபாதிகமாம்
ஈங்காகுங் கரண தர்மமா ந்மாவிற் கிச்சை
யினேன் னானென்றிருத் தலினால் அலைபுனலிற் புக்க
ஈர்ங் கதிரின் பிம்பமெனத் தத்தருமாத் தியாசம்-
எனவுரைப்பர் நான் குடும்ப வானென நிற்கையினால்.

இ—ள்

| | | |
|---|---|---|
| நான் எனலால் அகங்கார ஆந் மாவுக்கு | — | நான் நான் என்னும் விவகாரத்தில் அகங்காரத் தோடு பிரத்ய காந்மாவுக் குள்ள சம்பந்தம் |



| | | |
|---|---|---|
| கயிற்று அரவம் என நிருபாதிக அத்தியாசம் | — | இரட்சு சர்பமென்பது போல நிருபாதி காத்தியாசமாம் |

## சோபாதிகாத்தியாசம்

| | | |
|---|---|---|
| நான்கர்த்தா ஆம் எனலால் ஆங்கார இயல் ஆன்மாவிற்கு | — | நான் கர்த்தாவென்னும் விவகாரத்தில் அகங்கார தர்மத்தோடு பிரத்தியகாத்மா வுக்குள்ள சம்மந்தம் |
| சிவப்பு வலம் போல சோபாதிக மாம் | — | செந்நிறம் படிகமணியின் கண் தோன்றுதல் போல சோபாதிகமாம் |

## தத்தருமாத்தியாசம்

| | | |
|---|---|---|
| இச்சையினேன் நான் என்று இருத்த லினால் இங்கு ஆகும் கரணதர்மம் ஆந்மாவிற்கு | — | நான் இச்சையையுடையேன் என்று விவகாரமிருத்தலினால் இவ்வுடம்பின் கண் பொருந்தி இருக்கின்ற அந்தக் கரணத் தோடு பிரத்திய கான்மாவிற் குள்ள சம்பந்தம் |
| அலைபுனலில் புக்க ஈர்ங் கதிரின் பிம்பம் எனத்தத் தரும அத்தி யாசம் என உரைப்பர் | — | அலைகளையுடைய நீரின் கண் தோன்றிய குளிர்ந்த கிரணங் களையுடைய சந்திரனது பிரதி பிம்பம் போல தத்தருமாத்தி யசமென்று அவற்றினிலக் கணங்களை மேலோர் கூறுவர் |

## சம்பந்தாத்தியாசம்

| | | |
|---|---|---|
| நான் குடும்பவான் என நிற்கையினால் | — | நான் புத்திரதாராதி குடும் பத்தை யுடையவன் என்று கூறும் விவகாரத்தில் (குளகம்) |

90 மைந்தர் முதலாயினா ருடனாந் மாவிற்கு
மண்ணுலகிற்பஃ றியத்தர் விவகார மெனவே
அந்தமுறு சம்பந்த மாத்திராத் தியாசம்
ஆமென்ப ரிவ்வத்தியாசங்கள் தம்மால்,
நந்துநிரு விகாரியாந் மாவென்றல் பெற்றாம்
நவிறருமை ந்தவத்தையுள வவையாவை யென்னில்
றொந்த முறுநநவொடு சொப்பனஞ்சுழுத்திதுரியந்
துரியாதி தந்தானாம் அவற்றியல்பு மொழிவாம்

| | |
|---|---|
| மைந்தர் முதல்<br>ஆயினார் உடன்<br>ஆன்மாவிற்கு<br>மண்ணுலகில்<br>பஃறியத்தர்<br>விவகாரம் எனவே<br>அந்தம் உறு<br>சம்பந்தம் மாத்திரம்<br>அத்தியாசம் என்பர் | — புத்திரர் முதலாயினாரோடு<br>ஆன்மாவிற்குள்ள சம்பந்தம்<br>இப் பூலோகத்தின் கண்<br>ஓடத்திலிரிப்போரது<br>விவகாரத்தைப் போல்<br>முடிவுள்ள சம்பந்த மாத்திரம்<br>அத்தியாசம் என்று அதனை<br>கூறுவர் மேலோர் |
| இவ்வத்தியாசங்கள்<br>தம்மால் நந்து<br>ஆந்மாநிரு விகாரி<br>யென்றல் பெற்றாம் | — இவ்வத்தியாசங்கள்<br>எட்டுரைத்ததில்அதிஷ்டானத்<br>தன்மையால் (பிரபஞ்<br>சத்திற்கு) ஆக்கமும் ஆத்மா<br>விகாரமில்லாத பொரு<br>ளென்பது பெற்றாம் |

## ஐந்தவஸ்தை

| | |
|---|---|
| நவில் தரும் ஐந்து<br>அவஸ்தை உள | — சாஸ்திரங்களில் கூறுகின்ற<br>ஐந்தவஸ்தா காலங்களுண்டு |
| அவை யாவை<br>என்னில் | — அவ்வவஸ்தைகள் எவை<br>யென்றால் |
| தொந்தம் உறும்<br>நநவொடு<br>சொப்பனம் | — கர்மத்தால் தம் முள்<br>தொடர்புள்ள சாக்கிரமுடன்<br>சொப்பனமும் |



| | |
|---|---|
| சுழுத்தி துரியம்<br>துரியா தீதம் ஆம் | — சுழுத்தியும் துரியமும்<br>துரியாதீத மெனவும் ஆம் |
| அவற்றின் இயல்பு<br>மொழியாம் | — அதனதன் சுபாவம்<br>கூறுகின்றோம். 90 |

91 பெருந்தூல வைம் பூதம் ஈரைந்திந் திரியம்
பிராண பஞ்சக மொடு நாற் கரணமிவைவுருவாம்
அருந்தூல சரீரத்திற் சாத்து வித குணமோ-
டகரவெழுத் தரிதெய்வம் விழியிடமே யாக
விருந்தாக விதயமலர் அட்டதள கதியில்
விசு வசீவனும் விராட்டிறையு மொருங் கடைந்து
வருந்தாவில் விடயங்கள் கரணமனைத் தாநும்
மருவிநுகர்ந்திடுதல்சா கரணமாம் அன்றே

இ—ள்

| | |
|---|---|
| பெரும்தூல ஐம்பூதம்<br>ஈரைந்து<br>இந்திரியமும் | — பெரியஸ்தூலபஞ்சபூதங்களும்<br>ஞானேந்திரியங்கள் 5 கர்மேந்<br>திரியங்கள் 5 என்ற பத்திந்<br>திரியங்களும் |
| பிராண பஞ்சகம்<br>நான்கு கரணம்<br>இவை உருவு ஆம் | — பிராணாதி வாயுக்கள் 5<br>அந்தக்கரணம் நான்கென்னும்<br>அவ்விருபத்து நான்கு தத்துவ<br>வடிவங்களாயுள்ள |
| அருந்தூல சரீரத்<br>தில் சாத்துவித<br>குணம் ஓடு | — (பெறுதற்கரி பெரும் புண்ணி<br>யத்தால் அன்றிக், கிடைத்தற்<br>கரிய மனித சரீரத்தின் கண்<br>சத்துவ குணத்தோடு |
| அகர எழுத்து அரி<br>தெய்வம் விழி இட<br>மாக இருந்து ஆகம்<br>இதயமலர் அட்ட<br>தள கதியில் | — அகரவெழுத்தும் விஷ்ணு<br>அதிதெய்வமும் நேத்ரஸ்தான<br>மாக பொருந்தி யிருந்து-<br>தூல சரீரத்தின் கண் (உள்ள)<br>இதயகமலத்தினது எட்டி.<br>தள்களிடத்திற் (சேர்ந்து) |

விசுவ சீவனும் — விசுவனென்னும் சீவனும்
விராட்டு இறையும் — விராட்டென்னும் ஈசுவரனும்
ஒருங்கு அடைந்து — ஏகமமாகப் பொருந்திட
வருந்தா இல்விடயங்கள் கரணம் அனைத்தானும் — (தொடக்கத்தில்) இன்பமான ஸ்திரி முதலிய விஷயங்களை ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் அந்தக் கரணம் என்னும் பதிநான்கு கரணங்களாலும்
மருவி நுகர்த்திடுதல் — பொருந்தி சுகதுக்கங்களை
சாக்கரண ஆம் — அனுபவிக்கும் காலமே சாக்கிராவஸ்தையாம் 91

## 92 (சொப்பனாவஸ்தை)

பஞ்சபூ தமுஞ் சித்த புத்தியுநின் றொழிந்த
பதினேழின் மயமாஞ்சூக் குமதநு வினின்றும்
விஞ்சுரசோ குணமுகர மெழுத்ததிதெய் வந்தான்
விரிஞ்சனிடங் களமாக நல்லிதய மென்னும்
கஞ்சமலர்க் கன்னிகா கதியாற்றை சதனும்
கநக கர்ப் பனுமருவி நநவின்வா தனையை
நெஞ்சமெனும் கரணத்தால் அனுபவிக்கை தானே
நிகழ்த்திடுஞ் சொப்பன மென்று நிகழ்த்துவர்
முதறிஞர்

(இ—ள்)

பஞ்ச பூதமும் சித்த, புத்தியும் நின்று ஒழிந்த பதினேழின் மயம் ஆம் — முற்கூறிய இருபத்து நான்கு தத்துவங்களுள்) ஸ்தூல பஞ்ச பூதங்களும் சித்தமும் புத்தியுமாகிய இவற்றின் நின்றும் நீங்கிய பதினேழு தத்துவங்களின் வடிவமாயுள்ள
சூக்குமத நுவில் நின்று — சூட்சும சரீரத்திலிருந்து



விஞ்சுரசோ குணம் — மிகுந்த பிர விருத்திக் கேதுவாகிய இரசோ குணமும்
உகர எழுத்து விரிஞ்சன் அதி தெய்வம் — உகரம் அட்சரமும் பிரம்ம தேவன் அதி தெய்வமும்
இடம் களம் ஆக — ஸ்தானம் கண்டமாகவும்
நல் இதயம் என்னும் கஞ்ச மலர்க்கன்னி காகதியில் — (நன்கு முயல்பவர்களுக்குச் சர்வ நலன்களும் கொடுக்கும்) சிறந்த இருதயமென்றும் கூறும் தாமரை மலர்ப் பொகுட்டில்
தைசதனும் கநக கர்ப்பனும் மருவி — தைசதனென்னும் சீவனும் இரணிய கர்ப்பனென்னும் ஈசுவரனும் (ஏகமாக கூடி
நநவின் வாசனையை நெஞ்சம் எனும் கரணத்தால் — சாக்கி ராவஸ்தையின் வாசனையாலுண்டான விஷய போகத்தை மனமென்னும் கரணத்தினால்
அநுபவிக்கை — அநுபவிக்கின்ற சமயமே,
நிகழ்ந்திடும் — பிராதிபாசிகமாய் விளங்குகின்ற
சொப்பனமென்று முது அறிஞர் நிகழ்த்துவர் — சொப்பனாவஸ்தையாமென்று அதனைப் பேரறிஞர்கள் பேசுவார்கள் (பொகுட்டு—மலரிதழ் பற்றியிருக்குமிடம்) 92

## 93 [சுழுத்தியவஸ்தை]

மேய்ந்துதிரி பார்ப்படக்கியுறங்களகு போல-
விரிந்தகாரியங்களையும் கொண்டுவா தனையோ
டாய்ந்தவான் மாசிரயத் தவத்தையற விருக்கும்
அரும்பகுதி மயமாங்கா ரணவுடம் பிற்றமமே
யேய்ந்தகுண மகர வெழுத் தரன் தெய்வ மிதயம்

இடமாகக் கமலமலர் பொகுட்டு நடுக்கதியில்
ஓர்ந்த பிராஞ்ஞனும் பரனு மாய்ப் பிரமாநந்தம்
உறுமாயா விருத்தி யெனுநுண் காரணந் தன்னால்

இ—ள்

| | |
|---|---|
| மேய்ந்துதிரிபார்ப்பு அடக்கி — | வெளியிற்போய் மேய்ந்து திரிகின்ற குஞ்சுகளை (தனது) சிறகுகளில் அடக்கிக் கொண்டு |
| உறங்கும் அளகு போல — | நித்திரை செய்கின்ற பெட்டைக் கோழியைப் போல |
| விரிந்த காரியங்களை உள்கொண்டு — | நாமருபப் பிரபஞ்சமாக விரிந்திருக்கின்ற காரியங்களனைத்தையும் (தன்) உள்ளடக்கொண்டு |
| வாசனையோடு ஆய்ந்த ஆந்மா ஆசிரியத்து — | அக்காரியங்களின் சமஸ்காரத்துடன், கூடி (பிறப்புக்கு பயந்தவர்கள்) ஆராய்ந்தறிகின்ற ஆத்மாவை ஆசிரயத்துக் கொண்டு |
| அவத்தை அற இருக்கும் — | சாக்கிர சொப்பனமென்னும் அவஸ்தைகளின்றி இருக்கும் |
| அரும்பகுதிமயம் ஆம் காரண உடம்பில் — | சத்தென்றோ அசத்தென்றோ சொல்லுதற்கு அரிய பிரகிருதி வடிவமாயிருக்கின்ற காரண சரீரத்தில் |
| ஏய்ந்ததமோ குணம் மகர எழுத்து — | மயக்கம், பொருந்தியதமோ குணத்தோடு மகர அட்சரமும் |
| அரன் தெய்வம் — | ருத்திரன் தெய்வமாகவும் |
| இதயம் இடம் ஆக கமல மலர் பொகுட்டு நடுக்கதியில் — | இருதயம் இடமாயிருக்கின்ற அத்தாமரை மலர் பொகுட்டின், நடுவிடத்தில் |



| | |
|---|---|
| ஓர்ந்த பிராஞ்ஞனும் பரனும் ஆய் — | நநவு, கநவு என்ற இரு பிரபஞ்சங்களையும் உணர்ந் திருக்கின்ற பிராஞ்ஞனென்னும் சீவனும் அந்தர் யாமியென்னும் ஈசுவரனும் ஏகமாய் |
| பிரம்மானந்தம் உறும் — | பிரம்மானந்தமாகிய (விஷய போகத்தைப்) பொருந்தி |
| மாயா விருத்தி என்னும் நுண் கரணம் தன்னால் — | அவித்தியா விருத்தியென் கின்ற சூட்சும கரணத்தினால் (இது குளகம்) 93 |

94 அனுபவித்தல் சுழுத்தியாம் இந்நவாதி கண்மு
வவத்தையொடு முத்தாம முப்புரமுத் தானம்
பினுமுத்தே யங்களெனும் பரியாய நாமம்,
பெறுமுரைத்த சாக்கிரத்தே யகக்கமல மழிந்து
மனவழக்கம் தவிர்ந்து பரந்தனைச் சிந்தித்திடலே
வருந்துரியம் அப்பரமாந் மாவின்மந மடங்கன்
முனமுரைத்தல் செய்துரியா தீதமெனப் புகல்வர்
மொழிந்தவற்றுள் தாவரங்கள் பெறுதலிருட்சுழுத்தி

(இ—ள்)

| | |
|---|---|
| அனுபவித்தல் சுழுத்தியாம் — | அநுபவிக்கின்ற சமயமே சுழுத்தியவஸ்தையாகும் |

## (நநவாதியவஸ்தைகளின் பரியாய நாமங்கள்)

| | |
|---|---|
| இந்நநவாதிகள் — | இந்தச் சாக்கிராதிய வஸ்தைகள் |
| மூவவத்தை ஒடு முத்தாமம், முப்புரம் — | மூன்றவஸ்தைகளுடன், முத்தாமமும் முப்புரமும் |
| முத்தானம் பினும் — | மூன்று ஸ்தானங்களும் பின்னும் |

| | |
|---|---|
| முத்தேயங்கள் எனும் பரியாய நாமங்கள் பெறும் | — மூன்று தேசங்களென்று கூறுகின்ற பரியாயப் பெயர்கள் பெறுவனவாம் |

## துரியம்

| | |
|---|---|
| உரைத்த | — முற்கூறிய சாக்கிர வஸ்தையின் |
| சாக்கிரத்தே | — அவ்விருதய தாமரை மலர் |
| அகக்கமலம் அழிந்து | ஒழிந்து |
| மனவழக்கம் தவிர்ந்து | — மனோ வியாபாரமாகிய அநாத்மா கார விருத்தியின்றி |
| பரம்தனை சிந்தித்திடலே துரியம் | — பரமாத்மாவை (அகம்பிரம்மாஸ்மியென்னும்)ஆத்மாகாரமாக மனது நிலைத்திருத்தலே(வருந்தி பயில்வோர்க்கு வாரா நின்ற) துரியவஸ்தையாம் |

## துரியாதீதம்

| | |
|---|---|
| அப்பரமான்மாவில் மனம் அடங்கலே | — துரியாவஸ்தையில் அப்பரமான்மாவின் கண் மனம் (பதைப்பற்று) அடங்கியிருத்தலே |
| முளம் உரைத்தல் செய் துரியாதீதம் எனப் புகல்வர் | — முன்னர் கூறிய துரியாதீதமென்று (அதனை) மேலோர் கூறாநிற்பர் |

## ஐந்தவஸ்தைகளின் பேதம்

| | |
|---|---|
| மொழிந்த அவற்றுள் தாவரங்கள் பெறுதல் இருள் சுழுத்தி | — கூறிய ஐந்தவஸ்தைகளுள் மரங்கள் முதலான அசரப் பொருள்கள் அடைவது அந்தகாரமயமான சுழுத்திய வஸ்தையாகும் |

94



95 விலங்குமுத லனபெறுவ சுழுத்தியொடு கநவால்
விண்ணவர்க்கு நநவுநரர்க்கம் மூன்றும் ஆகும்
கலங்கலறு மருளர்க்குத்துரிய மகா யோகி
கட்குவரு வதுதுரியாதீத முதல் மூன்றும்
மலங்கலுரும் மநுடர்க்குத் தமிற்றாமே தோன்றி
வரும்பந்தமா மேனை யிரண்டுமி யோகத்தால்
இலங்குமுத்தி சாதனமாம் அவையொன்றிலே யொன்
றிலாமையாற் காலதேசங்கணிய மம்பொய்.

(இ—ள்)

| | |
|---|---|
| விலங்கு முதலன சுழுத்தி யொடு கநவு பெறுவன | — பசுபட்சி முதலிய பிராணிகள் சுழுயவஸ்தையுடன் சொப்பனமும் அடைவனவாம். |
| விண்ணவர்க்கு நநவு | — இந்திரன் முதலிய இமையவர்கட்கு சாக்கிராவஸ்தை மாத்திரம் உண்டாம் |
| நரர்க்கு அம் மூன்றும் ஆகும் | — மநுடர்க்கு அம் மூன்றவஸ்தைகளும் உண்டாவதாம். |
| கலங்கல் அறும் மருளர்க்கு துரியம் | — கலக்கமின்றிய (சுத்தமனம் ஆந்மா காரமாயிருக்கும்) அப்பியாசிகளுக்கு துரியவஸ்தை உண்டாவதாம் |
| மகாயோகி கட்கு வருவது துரியாதீதம் | — (உற்பத்திலயங்களிலும் அறிவறியாமைகளிலும் நநவாதியவஸ்தைகளிலும் அவைகட்கும் அதீதமாய் யாதொரு மாறுதலின்றி ஆத்மசொரூபமாக விளங்குகின்ற) மகாயோகிகளுக்கு வருவது துரியாதீதம் |
| முதல் மூன்றும் மலங்கல் உறும் மநுடர்க்குத் தோன்றி | — அவ்வைந்து அவஸ்தைகளுள் முதலில் கூறிய மூன்றவஸ்தைகள் சலனமுடைய மக்களுக்கு உண்டாம் |

தமில் தாமே வரும் பந்தம் ஆம் — தமக்கு தாமே வருகின்ற (சமுசார) பந்த சாதனமாம்

ஏனை இரண்டும் யோகத்தால் இலங்கு முத்தி சாதனம் ஆம் — மற்றைய யிரண்டவஸ்தைகளும் யோக சாதனத்தால் உண்டாய் என்றும் இலங்கு கின்ற மோட்ச சாதனமாக இருப்பதாம்

## (ஐந்தவஸ்தைகளின் விசாரம்)

அவை ஒன்றிலே ஒன்று இன்மையால் — அவ்வஸ்தைகள் ஒர வஸ்தையில் மற்றோர வஸ்தையில்லாமையாலும்

காலதேச நியமம் பொய் — காலதேச நியமங்கள் (தோன்றாமையாலும் தோற்றாதது இல்லாமை யாலும் அவ்வைந்து அவஸ் தைகளும்) மித்தையாம் 95

## 96 [ஆத்ம சித்தி]

சொற்றவவத் தைகளிலநு பூதனாய் அறியும்
துரியனே யுளனநவு கநவிலறி வின்மை
பெற்றமைச் சுழுத்தியினிற் பெறலுரைப்பின் எழுந்து
பிறிதொன்றும் அறியாது சுகத்துறங்கி னேனென்
றுற்றவிரு நினைவுமநு பவஞ்சுழுத்தி யதனில்
உறாதுவரா வெனும் மருத்தாபத்தியி னாற்பொருள்கள்
முற்றுமடக் கிருள்விழிகாண் குதலெனக்கா ரியங்கள்
முழுதையு முட்கொண்டபேர் அவித்தையிருளினையும்

(இ—ள்)

சொற்ற அவத்தைகளில் அநுபூதன் ஆய் — மித்தையெனக் கூறிய (சாக்கிர முதலிய) ஐந்தவஸ்தைகளிலும் நீங்காதவனாய் (முத்தினுள் நூல் போல) உள்ளீடாயிருந்து



அறியும் துரியனே உளன் — அவ்வவஸ்தைகளை அறியும் கூடஸ்தனேயிருக்கின்றான் (அதனால்)

நநவு, கநவில் அறிவுண்மை பெற்றனம் — சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் அறிவாய் சத்து ரூபமாமாயிருக்கின்றானென்பதைப் பெற்றாம்

அச்சுழுத்தியின் பெறல் உரைப்பின் — அந்தச் சுழுத்தியவஸ்தையில் (அறிவுண்டென ஏற்கப்,) பெறுதலைக் கூறுமிடத்து

எழுந்து பிறிது ஒன்றும் அறியாது — விழித்தெழுந்து வேறொன்றையும் அறியாமல் நான் சுகமாகத் தூங்கினேன் என்று பொருந்துகின்ற

இருநினைவும் சுழுத்தியதனில் அநுபவம் உறாது — இருவித நினைவுகளும் சுழுத்தியவஸ்தையில் அநுபவமானது பொருந்தாமல்

வாரா எனும் அருத்தாபத்தியினால் — உண்டாக மாட்டாதென்னும் அருத்தாபத்தி பிரமாணத்தினாலும்

பொருள்கள் முற்றும் அடக்கு இருள்விழி காண்குதல் என — கடபட முதலிய பொருள்கள் அனைத்தையும் (தன்னுள்) அடக்கிக் கொண்டிருக்கின்ற அந்தகாரத்தைக் கண்கள் பார்ப்பதுபோல

காரியங்கள் முழுதையும் உள் கொண்ட — தனது காரியங்களான நாமரூபப் பிரபஞ்ச மனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்ற

பேர் அவித்தை இருளினையும் — பெரிய அஞ்ஞானமாகிய அந்த காரத்தையும் (இது குளகம்) 96

97 அந்தவ வித்தையினதுசூக் குமவிருத்தி தன்னில்
அலையுமரத் திலையிடையின் வெண்ணிலாத்
துளிபோல்
வந்திலங்கியடங்குநிசா னந்தக்கூற் றினையும்,
வருகரணாந் தராபேட்சையின்றியே ஆந்மா
முந்துரைசெய் சுழுத்தியினில் அநுபவிக்கை யாலே
மொழிந்ததனில் அறிவுளதாம் ஏதுமறியாமல்
நந்துசுகத் துறங்கினேன் எனற்கேது விடய
ஞானமிலா மையுங்குடும்ப நிவர்த்தியும்
முறையே

இ—ள்

| | |
|---|---|
| அந்த அவித்தை யினது சூக்கம விருத்தி தன்னில் — | அவ்வவித்தையின் சூட்சும விருத்தியில் (காற்றால்) |
| அலையும் மரத்து இலை இடையில் — | அசைகின்ற மரத்தினது இலைகளின் நடுவில் (தோன்றி மறையும்) |
| வெண்ணிலாத் துளி போல்வந்து இலங்கி அடங்கும் — | வெண்மையான சந்திரனுடைய சிறு பிரகாசம் போன்று, தோன்றி விளங்கி மறையும் |
| நிசானந்தக் கூற்றினையும் — | நிசானந்தத்தினது அம்சங்களையும் |
| வருகரணாந்தர அபேட்சை இன்றி ஆத்மா முந்து உரை செய் சுழுத்தியில் அநுபவிக்கையால் — | நநவு கனவுகளில் தொடர்ந்து வருகின்ற வேறு அந்தக் கரணாதிகளின் சகாயமில்லாமல் ஆத்மாவினது சுகம் முன்னர் கூறப்படுகின்ற, சுழுத்திய வஸ்தையில் அநுபவித்துக் கொண்டிருக்கையால் |
| மொழிந்த அதனில் அறிவு உளது ஆம் — | கூறிய அச்சுழுத்திய வஸ்தையில் ஆத்மாவுளதாம் எனல் சத்தியமாம் |



| | |
|---|---|
| ஏதும் அறியாமல் நந்து சுகத்து உறங்கினேன் எனற்கு — | நான் எதனையும் அறியாமல் விளங்குகின்ற சுகமாகத் தூங்கினேன் என்று கூறுதற்கு |
| ஏது முறையே விடய ஞானம் இலாமையும் — | காரணம் கிரமமாக (கடமபடம் முதலிய) விஷய ஞானம் இல்லாமையும் |
| குடும்ப நிவர்த்தியும் ஆம் — | சாக்கிர, சொப்பனப் பிரபஞ்சமாகிய சம்சார (துக்க) நிவர்த்தியும் ஆகும். 97 |

98 மன்றசுழுத் தியிலதற்குக் கரியாமா னந்த
மயவுயிருண் டெனிலொருவ ராகிலுமா
ண்டறிந்தேன்,
என்றலில தேதுகா ரணமெனிலோர் பொருளை-
எடுப்பநீர் மூழ்கினோன் ஆண்டுள தென்பதுமேற்
சென்றலது புகலொணா ததுபோலக் கருமச்
செயலினால் எழுந்துதுணை யாங்கர ணங்கூடின்
அன்றியதில் அறிந்த பொருள் கூறொணாதாகும்
ஆதலினால் உயிர்சச்சி தானந்த வொளியாம்.

(இ—ள்)

| | |
|---|---|
| மன்ற சுழுத்தியில் அதற்கு கரி ஆம் ஆனந்த மய உயிர் உண்டு எனில் — | நிச்சயமாகச் சுழுத்திய வஸ்தையின்கண் அச் சுழுத்திய வஸ்தைக்குச் சாட்சியாகிய ஆனந்த வடிவ ஆத்மா இருக்கின்ற தெனின் |
| ஆண்டு ஒருவர் ஆகிலும் (நான்) — | அச்சுழுத்திய வஸ்தையில் (நம் மவருள்) ஒருவரும் (நான் |
| அறிந்தேன் என்றல் இலது காரணம் ஏது எனில் — | ஆத்மாவை) அறிந்தேனென்று கூறுதல் இல்லையாம் (இதற்கு) காரணம் யாதென்றால் |

| | |
|---|---|
| ஓர் பொருளை எடுப்ப நீர் மூழ்கினோன் | — (கிணற்றில் விழ்ந்த) ஓர் பொருளை யெடுப்பதற்கு அக் கிணற்றின் நீரில் முழ்கினவன் |
| ஆண்டு உளது என்பது மேல் சென்று அலது புகலொணாது | — அக்கிணற்று நீரில் அப் பொருள் இருக்கின்றது என்பதை (அந்நீரின் நின்றும்) மேல் வந்தல்லாமல் கூற முடியாதாம் |
| அதுபோல் கருமச் செயலினால் எழுந்து | — அது போலும் (சீவன்) கால கரும வசத்தால் சுழுத்திய வஸ்தையினின்றும் விழித்து எழுந்து |
| துணையாம் கரணம் கூடில் அன்றி | — தனக்கு சகாயமான கரணங் களோடு கூடினாலல்லாமல் |
| அதில் அறிந்த பொருள் கூறொனாது ஆகும் | — அச்சுழுத்தியில் (தான்) கண்ட நுபவித்த பொருளை சொல்ல முடியாததாகும் |
| ஆதலின் உயிர் சச்சிதானந்த ஒளியாம் | — ஆகையால் (சர்வாவஸ்தை களுக்கும் சாட்சியாயிருக்கின்ற) ஆத்மா சத்து சித்து ஆனந்த வடிவ சுயம் பிரகாசமாம் 98 |

## 99 பஞ்ச கோச விவேகம்

அந்நமொடு பிராணன்மநம் விஞ்ஞான மிக்க-
ஆனந்த மயமாமைங் கோசமுள வவைதாம்,
சொன்னமுறை சுக்கில சோணிதத்தாகி நின்ற-
தூலவுடம் பந்நமய கோசஞ்சூக் குமமெய்
மன்னலுறும் பிராணனும்வாக் காதியுமே பிராண
மயகோச மனமுஞா நேந்தியமும் புணரிற்
பன்னுமநோ மயகோசந் துரியன்சிற் சாயை
பதிதலொடு லோகாந்த குந்தமே போன்று



(இ—ள்)

| | |
|---|---|
| அந்நம் உடன் பிராணன், மநம் விஞ்ஞான மிக்க ஆனந்த மயம் | — அந்நமயகோசம். பிராணமய கோசம், மநோ மய கோசம். விஞ்ஞான மய கோசம் (பிரக்ஞை) மிகுந்த ஆனந்த மய கோசம் (என) |
| ஐங்கோசங்கள் உள அவை சொன்ன முறை | — பஞ்ச கோசங்களிருக்கின்றன அக் கோசங்களைக் கூறிய கிரமம் (அந்நமய கோசம்) |
| சுக்கில சுரோணிதத் தால் ஆகின்ற தூல உடம்பு அந்நமய கோசம் | — (மாதபிதாக்களது) சுக்கில சுரோணிதங்களால் உண்டா யிருக்கின்ற தூலசரீரம் அந் நமயகோசம் (இதுவே போகஸ்தான மாகும்) (பிராணமய கோசம்) |
| சூக்கும மெய்மன்னல் உறும் பிராணனும் வாக்கு ஆதியும் பிராணமய கோசம் (மநோமய கோசம்) | — சூட்சும சரீரத்திற் பொருந்தி யிருக்கின்ற, பிராணாதி (பஞ்ச) வாயுக்களும், வாக்காதி (ஐந்து) கர்மேந்திரியங்களும் கூடி பிராணமயகோசம் (இதுவே கிரியா சாதனம்) |
| மநமும் ஞானேந் திரியமும் புணரில் பன்னும் மநோமய கோசம் | — மனமும் ஞானேந்திரியங் களும் கூடி (பிராணமயனினும் வேறாயும் உள்ளாயுமிருப்பது எனச் சுருதியினால்) கூறப் படும் மநோமய கோசமாம் |

## (விஞ்ஞானமயகோசம்)

| | |
|---|---|
| துரியன் சிற்சாயை பதிதல் ஒடு லோகாந் தகுந்தமே போன்று | — பிரத்யக் ஆத்மாவின் சை தன்னியச் சாயை, பொருந்து தலுடன் (கூர்மையான) இரும்பை நுனியிலுடைய ஈட்டியைப் போலும் (குளகம்) 99 |

100 இருந்தவாங் காரமுஞா னேந்திரிய முங்கூடில்
இசைத்தலுறும் விஞ்ஞானமய கோசம் ஆகும்,
பொருந்து காரணதேக ரூபாவித் தையுந்தாம்
புகல்விடய தரிசனசா மிப்பியசை யோகந்
தரும்பிரியமோதமொடு பிரமோதமென்ன
தக்கவையும் ஆனந்த மயகோசம் நானென்
றரந்தைதரு விஞ்ஞான மயகோச வடிவாம்-
ஆங்காரம் தனையான்மா வென்பரறி விழந்தோர்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| இருந்த ஆங்காரமும் ஞானேந்தியமும் கூடி இசைத்தல் உறும் விஞ்ஞான மய கோசம் | — | இருக்கின்ற அகங்காரமும், ஞானேந்திரியமும் கூடினால் (மநோமயனினும் வேறாயும் உள்ளாயுமிருப்பது எனச் சுருதிகளில் கூறும் விஞ்ஞானமய கோசமாம் இதுவே கர்த்தா வடிவமாம் |

## (ஆனந்தமய கோசம்)

| | | |
|---|---|---|
| பொருந்துகாரண தேக ரூப அவித்தையும் | — | சதசத் விலட்சணமாகப் பொருந்தியிருக்கின்ற காரண சரீர வடிவ அவித்தையும் |
| புகல் விடய தரிசனம், சாமிப் பியம், சையோகம் தரும் பிரியம் மோதம் ஒடு பிர மோதம் | — | முவிதமாகக் கூறப்படுகின்ற வனிதாதி, விஷயங்களைக் காண்டல் அடைதல் அநுபவித்தல் (கிரமமா உண்டாகின்ற, பிரியவிருத்தி மோதவிருத்தி, பிரமோத விருத்திகளும் கூடி |
| என்னத்தக்க அவையும் ஆனந்த மயகோசம் | — | சுருதிகள் விஞ்ஞானமயனினும் வேறாயும் உள்ளாயுமிருக்கு மென்று கூறத்தகுந்த ஆனந்த மயகோசமாம் |



## அகங்கார ஆத்மத்வ கண்டனம்

| | | |
|---|---|---|
| நான் என்று அரந்தை தரும் விஞ்ஞான மய கோச வடிவு ஆம் | — | (தேகேந்திரிய முதலியவற்றுள் சீவனை நான்) நானென்று (கருதுமாறுசெய்து அதனால் அவனுக்குத்) துன்பந்தருகின்ற விஞ்ஞானமய வடிவமாயுள்ள |
| அகங்காரம் தனை அறிவு இழந்தோர் ஆன்மா என்பர் | — | அகங்காரத்தினை, ஆத்மா அநாத்மாவிவேகமில்லாதவர்கள் (நானென்னும் தமதநுபவத்தால்) ஆத்மா வென்று கூறா நிற்பர் 100 |

101 நீலகுண விசேடமொடுற் பலவிசேடியந்தான்
நிகழ்தர வேத்திய மாதல் போலினைத்தேன்
எனினான்.

றூலதநு வொடுகேட்ப னானெனிந் தியத்துஞ்-
சூழ்வனா னெனிற் கரணமுடனும் வேத்தியமாய்ச்
சாலவுயிர் துரியனிற் கையினாலகங் காரந்
தானாத்மா வன்றாகில் அசேதனவாங் காரஞ்,
சீலமுறு புறவிடய மறிவதே னெனிலூ-
சிக்கலின் முன் ஊசி சேட்டித்திடுதல் போலும்

இ—ள்

| | | |
|---|---|---|
| நீலகுணவிசேடம் ஒடு உற்பலவிசேடியம் நிகழ்தர வேத்தியம் ஆதல் போல | — | (ஒருவன் நீலோற்பல மென்னுமிடத்து அவனுக்கு) நீல குணமாகிய விசேஷணத்துடன், உற்பல மாகிய விசேஷிய (கருங்குவளை மலரும்) விளங்க அறியப் படுதல் போல |

## தாஷ்டாந்தம்

| | | |
|---|---|---|
| நான் இளைத்தேன் எனின் தூலதநு ஒடும் | — | யானிளைத் தேனென்னுமிடத்து தூலசரீரத்தோடும் |
| நான் கேட்பன் எனின் இந்திரியத்தும் | — | நான் கேட்டேனென்னுமிடத்து (சுரோத்திராதி) இந்திரியங்களோடும் |
| நான் சூழ்வன் எனின் கரணமுடனும் | — | யான் நினைப்பேனென்னுமிடத்து அந்தக் கரணத்தோடும் கூடி |
| சால உயர்துரியன் வேத்தியம் ஆய் நிற்கையினால் | — | மிகவும் உயர்ந்த ஆத்மாவினால் அறியப் படுவதாயிருத்தலினால் |
| அகங்காரம் ஆத்மா அன்று ஆகில் | — | அகங்காரமானது (எவ்விதத்தும்) ஆத்மா அன்றாம் அங்ஙனமாகில் |
| அசேதன ஆங்காரம் | — | சடவடிவ அகங்காரம் |
| சீலமொடு புறவிடயம் அறிவது என் எனில் | — | ஒழுங்காக வெளி விஷயங்களை அறியுந்தன்மை எப்படியெனில் |
| ஊசிகலின் முன் ஊசி சேட்டிப்பது போலும் | — | காந்தக் கல்லின் முன்னர் இரும்பின் ஊசி தானே அசைவது போலும் (குளகம்) |

நீலோற்பலம் — கருங்குவளைமலர், நீல குணம் — நீல நிறம், உற்பலமாகிய விசேடியத்திற்கு நீல குணம் விசேடமாயிருத்தல் போல, யானென்னும் அகங்காரமாகிய விசேடியத்திற்கு தூலதேகமும் இந்திரி யங்களும் அந்தக் கரணமும் விசேடணமாயிருக்கின்றன வென்பதுணரத் தக்கதாம் 101



102 வெயிலினிடைக் காட்டுபடி மக்கலமுண் மனையை
விளக்குதல் போலுந்துரியன் றன்திருஞ்சந் நிதியும்,
இயலுறுதற் சைதன்யப் பதிபிம்பந் தன்பால்
எய்தலும்பெற் றிடுதலினால் அச்சட வாங்காரம்
பயில்விடய வுணர்வினொடு நநவுகநவு மூன்று
பகர் சுழுத்தி தனிலடங்கும் அவ்வழக்கம் உரைப்பின்
செயிர்தரு மாங்காரமடங் குறுசுழுத்தி தன்னிற்
செறியவித்தை யுட்சுவரும் துயிற்கதவும் அன்றி
(இ—ள்)

| | | |
|---|---|---|
| வெயிலின் இடை காட்டும் படிமக்கலம், உள் மனையை, விளக்குதல் போலும் | — | சூரியப் பிரகாசத்தைப் (பிடித்துக்) காட்டுகின்ற, கண்ணாடி, உள்வீட்டினிருளை நீக்குதல் போலும் |
| துரியன் தன் திருச் சந்நிதியில் | — | பிரத்யக் ஆந்மாவினது அழகிய சந்நிதானத்தில் |
| இயல் உறுதத் சைதன்யம் பதி பிம்பம் | — | (தனது) இயல்பாய்ப் பொருந்தியுள்ள அந்த சேதனத்தின் பிரதிபிம்பம் |
| தன்பால் எய்தல் பெற்றிடுதலினால் | — | தன்னிடத்தில் அடைதலைப் பெற்றிருத்தலால் |
| அச்சட ஆங்காரம் | — | அந்த சடவடிவ அகங்காரம் |
| பயில் விடய உணர்வின் ஒடு | — | (வெளியில்) பொருந்தியிருக்கின்ற (கடாதி) விஷயங்களை அறிவதோடும் (கூடி) |
| நநவு கநவு உழன்று பகர் சுழுத்தி தனில் அடங்கும் | — | சாக்கிர சொப்பனங்களில் சஞ்சரித்து அறியாமையென்று கூறப்படுகின்ற அவித்தையில் அடங்குவதாம் |
| அவ்வழக்கம், உரைப்பில் செயிர்தரு ஆங்காரம் அடங்குறு | — | அவ்வாறு நிகழ்தலை, கூறுமிடத்து துன்பத்தை தரும் ஆங்கார மொடுங்குகின்ற |

சுழுத்திதனில் செறி அவித்தை உள் சுவரும் துயில் கதவும் அன்றி — சுழுத்தியவஸ்தையில் பொருந்தியிருக்கின்ற அவித்தையென்னும் உள் வீட்டுச் சுவரும், நித்திரை யென்னும் கதவும் ஆகிய அவ்விரண்டையுமல்லாமலும் (குளகம்) 102

103 நடுக்கமறுந் தீபமாந் தனைத்தானே விளக்கல்
நவில் பிரத்ய காந்மாவின் சோதியாம் பின்னர்த்
தொடங்கிவரு காலகரு மாதிசமீ ரணணால்
துயிற்கதவந் திறந்திட வ்வவித்தையது தன்னில்
அடுக்கு முதலவத்தை மகதத்துவ மாந்தெற்றி
அடுத்தி ருந்தாங்காரமெனும் வெண்பளிங்கு மணிதான்
படைத்தலருந் துரியச்சுடர்ப் பதிபிம்பம் பதியப்
பட்டுமுனம் போற்சீவன் என்னவே நின்று

இ—ள்

நடுக்கம் அறு தீபம் ஆம் தனை — அசையாத விளக்கு என நின்ற அசல வடிவமாகிய தன்னையும்

தானே விலக்கல் — தானே விளங்கச் செய்வது

நவில் பிரத்யகான்மசோதியாம் — சர்வாதாரமாக கூறப்படுகின்ற பிரத்யகான்மசோதியாம்.

பின்னர் தொடங்கி வரும் கால கருமாதி சமீரணனால் — பின்பு (சங்கிலி போல) தொடர்ந்து வருகின்ற, காலம் கருமம் முதலிய காரணமாக (உண்டாகும்) மகாப் பிராணவாயுவால் (பிரேரிக்க)

துயில் கதவு திறந்திட — (தாமதவடிவமான) நித்திரை யென்னும் கதவு திறக்க (பின்னர்)



அவ் அவித்தை அது தன்னில் அடுக்கும் முதல் அவத்தை — அந்த அஞ்ஞானத்தின் கண் பொருந்தும் முதலாவது அவத்தையாகிய

மகதத்துவம் ஆம் தெற்றி — மகதத்துவமென்ற வாசற்படியின் கண்

அடுத்து இருந்த ஆங்காரம் எனும் வெண்பளிங்குமணி — சேர்ந்திருக்கின்ற (சாத்வீக) அகங்காரமென்று கூறப் படுகின்ற வெண்மையான படிகமணியானது.

படைத்தல் அரும் துரியச் சுடர் பதி பிம்பம் — ஒருவர் உண்டாக்குதல் இல் லாத (அநாதியான) அந்தப் பிரத்ய காத்ம தீபத்தின் பிரதி பிம்பம்

பதியப்பட்டு முனம் போல சீவன் எனவே நின்று — பொருந்தப் பெற்று முன் போலவே சீவனென்று கூறு மாறு நிலை பெற்றிருந்து (குளகம்) 103

## இதுவும் அது

104 சொப்பனமா நடுமனையை விளக்கியே பொறியாம்
சுருங்கையினிற் போந்துநந வெனு முன்றில் விளக்கு
முற்பகரும் காலகருமா திசமீ ரணனால்-
முடலுமத் துயிற்கத வங்காரிய வாங் காரம்
நற்படிகமணிய வித்தை தனிலடங்கச் சென்று
நநவுகந வெனுமுன்றி னடுமனைகளிருளும்
தற்படிக மணிகதுவும் அறிவொளிதன் முதலாந்
தனித்துரிய விளக்கையடைந் தேகமாம் அன்றே.

இ—ள்

சொப்பனம் ஆம் நடுமனையை விளக்கி — சொப்பனாவஸ்தை யாகிய நடு வீட்டை விளங்கச் செய்து

| | | |
|---|---|---|
| பொறியாம் சுருங்கையினில் போந்து | — | பின்னர் இந்திரியங் களென்னும் சன்னல் வாயில் களால் வெளியில் வந்து, |
| நனவு எனும் முன்றில் விளக்கும் | — | சாக்கிராவஸ்தை யென்ற வெளி முற்றத்தை விளங்கச் செய்வதாம். |
| முற்பகரும், கால கருமம் ஆதி சமீரணனால் | — | பின்னர் முன்னர் கூறப்பட்ட கால கருமங்கள் முதலிய காரணத்தால் (எழுகின்ற) மகாப் பிராணவாயுவினால். |
| அத்துயில் கதவம் மூடலும் | — | அந்த நித்திரையாகி கதவு மூடவும் (உடனே) |
| காரிய ஆங்கார நல்படிக மணி | — | காரியமாகிய (அந்த) அகங் காரமென்னும், நல்ல படிகமணி |
| அவித்தை தனில் சென்று அடங்க | — | (காரணமாகிய) அஞ்ஞானத்தின் கண் போயடங்குவதாம்(அதனால்) |
| நநவுகநவு எனும் மூன்றில் நடு மனைகள் இருளும் | — | சாக்கிர சொப்பனமென்னும் (வெளி) முற்றமும், நடுவீடும் ஆகிய இரண்டும் அந்த காரமாம் |
| தத்படிக மணி கதுவும் அறிவு ஒளி | — | (இவ்வாறு அவை அந்த காரமாக) அந்த அகங்கார மென்னும் படிகமணியின் கண் பிரதிபிம்பித்து இருந்த சிற்பிரகாசமானது |
| தன்முதல் ஆம் தனித்துரிய விளக்கை அடைந்து ஏகம் ஆக | — | தனக்குக் காரண வடிவமான, ஒப்பற்ற பிரத்தியக் ஆத்ம தீபத்தை அடைந்து ஐக்கிய மாவதாம் |

104



105 இத்திறமிங்ககமினது பாவாபா வங்கள்
இலங்குநன வாதிகளின் அவிகார மாகும்,
உய்த்துணரும் உயிர்வேறொன் றிருத்தலினால்
என்றும்
உரைத்தவக மான்மாவன் றெனவறிக புறம்பு,
வைத்தவிடயங்கடனக் கான்மாவாய்ப் பரமாந்
மாவிற்கு வேத்தியமா தலிற்சடா சடமாய்
அத்தமதின் முன்பின்போல் ஒளியிலதாம்
அகந்தைக்
காகஞ்சிற் சாயையாந் மாவுடனாம் புணர்ச்சி

(இ—ள்)

| | | |
|---|---|---|
| இத்திறம் இங்கு இலங்கு நநவு ஆதிகளில் | — | இவ்விதம், இவ்வியாவ காரிக தசையின்கண் விளங்குகின்ற சாக்கிர முதலிய அவஸ்தை களில் |
| அகமினது பாவஅ பாவகங்ள் அங்காரம் ஆகி உய்த்து உணரும் | — | அகங்காரத்தினது தோற்ற ஒடுக்கங்களை நிர்விகாரமாய் இருந்தறிகின்ற |
| உயிர் ஒன்று வேறு இருத்தலினால் | — | ஆத்மாவாகிய ஓர் பொருள் இதற்கு வேறாக இருப்பதால் |
| என்றும் உரைத்த அகம் ஆன்மா என்று அறிக | — | எக்காலத்தும் (இதுகாறும்) கூறப்பட்டு வந்த அகங்காரம் ஆத்மா அன்றென்று (அதனை நீ) அறிவாயாக |
| புறம்பு வைத்த விடயங்கள் தமக்கு ஆன்மாவாய் | — | வெளியிலுள்ள (கடபடாதி) விஷயங்களுக்கு ஆத்மா வாய் அறிவதாயும்) |
| பரமாந்மாவிற்கு வேத்தியம் ஆதலின் | — | (ஆந்தரமாயுள்ள) பிரத்யகாத் மாவிற்கு அறியப்படுவதா யிருத்தலால் |
| சட அடம் ஆம் | — | அறிவும் அறியாமையும் வடிவமாம் |

| | | |
|---|---|---|
| அத்தம் அதின் முன் போல ஒளி (ஆய்) | — | முகம்பார்க்கும் கண்ணாடியின் முன்புறம் போல (பிரதிபிம்ப யோக்கிய) பிரகாசமுடையதாம் |
| பின் (போல்) ஒளி இலது ஆம் | — | பின்புறம் போல பிரகாசம் இல்லாததாயிருக்கின்றன |

## தாதாத்மிய திரயம்

| | | |
|---|---|---|
| அகந்தைக்கு ஆகம் சிற்சாயை, ஆத்மா, உடன் புணர்ச்சி ஆம் | — | அகங்காரத்திற்கு, தூல தேகத்திற்கும்சிதாபாசனுக்கும் ஆத்மாவிற்கும் (இம்மூன்றுடனும்) சம்பந்தமாம் 105 |

106 வெப்பினேன் நானெனலாற் சிற்பதிபிம் பந்தான்
மேவுமாங் காரசம் பந்தத்தாற் றூல-
மெய்ப்படுவ வெம்மை முதலவையறிதல் கரும-
விளைவாகிக் கரும சமா நானறிந்தேனெனலாற்,
றப்பரிய சிற்சாயை யுடனவ் வாங்கார-
சம்பந்தஞ் சிருட்டி முதன் முத்தியளவாகிப்
பொய்ப்பரிய வியல்பாகு நான் கருத்தன் எனலாற்
புணர்ச்சியிலாந் மாவினுடன் அனையதின் சம்பந்தம்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| நான் வெப்பினேன் எனலால் | — | (அவற்றுள்) தாபமடைந்தேன் நானென்று கூறுதலால் |
| சிற்பிரதி பிம்பம் மேவும் ஆங்கார சம்பந்தத்தால் | — | சிதாத்மாவின் பிரதி பிம்பத்தை பொருந்தி யிருக்கின்ற அகங்காரத்தினது சம்பந்தத்தால் |
| தூல மெய்படுவ வெம்மை முதலன அறிதல் கரும விளைவு ஆகி கரும் சம் ஆம் | — | தூல தேகத்தில் உண்டாகின்ற உஷ்ண முதலியனவற்றை உணர்தல் கருமத்தால் உண்டாகின்ற கரும சதா தாத்மிய சம்பந்தமாம் |



| | | |
|---|---|---|
| நான் அறிந்தேன் எனலால் தப்பு அரிய சிற்சாயை உடன் | — | (இதனை) நான் அறிகின்றேன் என்று கூறுதலால் கெடாத சித்தினது பிரதி பிம்பத்துடன் |
| ஆங்கார சம்பந்தம் | — | அகங்காரத்தின் சம்பந்தமானது |
| சிருட்டி முதல் முத்தி அளவு ஆகி பொய்ப்பு அரிய இயல்பு ஆகும் | — | (பிரபஞ்ச) சிருஷ்டி தொடங்கி சீவர்கள் மோட்சமடையுமளவும், மெய்யென்றிருக்கும்சகாதாத்மியசத சம்பந்தமாகும் |
| நான் கருத்தன் எனலால்புணர்ச்சியால் ஆன்மாவின் உடன் அனையதின் சம்பந்தம் | — | (இதற்கு) நான்கர்த்தாவென்று கூறுதலால் எதனோடும் எவ்வகையாலும் சம்பந்த மில்லாதிருக்கின்ற பிரயத்யக் ஆத்மாவுடன் அவ்வகங்காரத்திற்குள்ள சம்பந்தத்தை (குளகம் 106) |

107 இசைப்பிலது பிராந்தி செந் நியமாகு மென்னும்
இவை முழுதுஞ் செப்பு. திரிசிய விவேகந்தான்
மிசைப் புகல்வவஞ் ஞானம் ஆவரண மிக்க-
விட்சேபம் பரோட்சமப ரோட்ச ஞானம் பின்
வசைப்படுதல் உறுஞ்சோக நிவர்த்தியதின் மீது
வருநிரங் கிச திருத்தியெனு மவத்தையேழுந்
திசைப்புறுதலுறுஞ் சீவர்க்காவனவாம் இவற்றின்
திறமனைத்து முறை பிறழாதினியெழுத்து
மொழிவாம்

இ—ள்

| | | |
|---|---|---|
| இசைப்பில் அது பிராந்தி செந்நியம் ஆகும் | — | ஆராய்ந்து கூறுமிடத்து அச்சம் பந்தம் பிரம சதாதாத்மிய சம்பந்தமாகும் |

| | | |
|---|---|---|
| என்னும் இவை முழுதும் செப்பு திரிசிய விவேகம் | — | என்றிது காறும் கூறி வந்த இவ் விஷய மனைத்தும் (மித்தையென்று) கூறப் படுகின்ற திரிசிய விவேக மாகும். |

## சாதன விவேகம் ஏழ வஸ்தை

| | | |
|---|---|---|
| மிசைப் புகல்வ அஞ்ஞானம் ஆவரணம் மிக்க விட்சேபம் | — | இனிமேல் கூறுகின்ற அஞ் ஞானமும் ஆவரணமும் (துன்பம் மிகுந்த விட்சேபமும் |
| பரோட்சம் அப ரோட்சஞானம் வசைப் படுதல்வுறும் சோக நிவர்த்தியும் | — | பரோட்ச ஞானமும் அப ரோட்ச ஞானமும் நிந்திக்கப் படுவதாயிருக்கும் துன்ப நிவர்த்தியும் |
| அதன்மீது வரும் நிரங்குச திருப்தி | — | அத்துன்ப நிவர்த்தியின் பின் னர் வாரா நின்ற தடையற்ற ஆனந்தமாம் |
| எனும் அவத்தை ஏழும் | — | என்கின்ற ஏழவஸ்தைகளும் |
| திசைப்பு உறுதல் உறும் | — | மயக்கமடைந்திருக்கின்ற |
| சீவர்க்கு ஆவனஆம் | — | சீவர்களுக்கு உண்டாவதாம் |
| இவற்றின் திறம் அனைத்தும் | — | இவ்வேழு அவஸ்தைகளின் வகை அனைத்தும் |
| முறைபிறழாது இனிமொழிவாம் | — | கிரமம் தவறாது இனிமேல் எடுத்துக்கூறுதும் |

திகைப்பு என்றது, எதுகை நோக்கி திசைப்பு என திரிந்து நின்றது. [திரிசய விவேகம் முற்றிற்று].



## 108 சாதனசாத்திய விவேகம்

புன்னெறிகொள் குடும்பியாய் வலியறுமோர்சித்துப்
போலியாம் சீவனுயர் சுருதிவிசா ரத்தின்
முன்னமொரு தன்சொருபமாகியபே ரொளியாம்-
முதற்றுரிய நிலையறியா திருந்திடலஞ் ஞானம்,
பின்னொருகா லுயிரியல்பு கூறுமிடத் தின்று-
பிரத்யகாந் மாத்தோன்றா தெனுங்கலக்க
மிரண்டும்

பன்னியவஞ் ஞானகா ரியமாகு மென்னப்
பகர்தருமா வரணமென்பர் பலகலைகற் றுணர்ந்
தோர்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| புல்நெறிகொள் குடும்பிஆய் | — | அற்பச் செயல்களை மேற் கொண்டுள்ள சம்சாரப் பற்றுள்ளவனாய் |
| வலிஅறு ஓர் சித்துப் போலி ஆம் சீவன் | — | தனது நிசவடிவத்தை அறி தற்கு, வலிமையற்றிருக்கின்ற ஒரு சிதாபாசனாகிய சீவன். |
| உயர்சுருதி விசாரத் தின் முன்னம் | — | வித்தைகளுக்கு உள்மிக உயர்ந்துள்ள வேதாந்த விசாரம் செய்வதற்கு முன்பு |
| ஒரு தன்சொருபம் ஆகிய | — | ஒப்பற்ற தனது (நிச) வடிவமாயிருக்கின்ற. |
| பேர்ஒளிஆம் முதல் துரியநிலை அறியாது இருந்திடல் அஞ்ஞா னம் | — | மிகுந்த சுவயம்பிரகாசமும் செகத்காரணமும் ஆகிய துரிய நிலையென்னும் பிரத்ய காத்மாவை, அறியாது இருந்த தன்மையே அஞ்ஞானமாம். |
| பின் ஒரு கால் உயிர் இயல்பு கூறும் இடத்து | — | பின்னர் உண்மையுணரா தோன் ஓர் சமயம் (பெரியோர்) சிதாத்மாவின் இலக்கணத்தையுபதேசிக்கு மிடத்து |

| | | |
|---|---|---|
| பிரத்யகாத்மா இன்று தோன்றாது எனும் கலக்கம் இரண்டும் | — | பிரத்யாகாத்மா இல்லை (இருந்தால் தோன்றாதா எனக் கூறுகின்ற அவனுக்குள்ள அசத்வாபாதக ஆபரணமும் அபானா பாதக ஆவரண மென்னும் மறைப் பிரண்டும் |
| பலகலை கற்று உணர்ந்தோர் பன்னிய அஞ்ஞான காரியம் ஆகும் என்ன பகர் தரு ஆவரணம் என்பர் | — | பல சாஸ்திரங்களை (ஐயந் திரிபர) கற்றுணர்ந்த பெரியோர்கள் முற் கூறிய அஞ்ஞானத்தின் காரியமாகு மென்று கூறப்படுகின்ற இரு வித ஆவரண மென்று கூறுவர். |

## 109 விட்சேபம்

கருத்தனு மொண் கருமபல போத்துருவும் தானாய்க்-
கருதியுடம் பவிமாநி யாஞ்சீவன் றானே
உரைத்தலரும் விட்சேபஞ் சுருதி குருவுண்மை-
யுரையாலுண்டு யிரெனவே யறிதல சத்தென்றும்.
நிரைத்த முதலாவரண நிவர்த்தகமாம் பரோட்சம்
நீபிரம்ம மெனும் வேத மொழி விசாரத்தால்,
வரத்துரியன் நானெனவே யறிந்திடுத லபாநா
வரண நிவர்த் தகமாகும் பரோட்ச ஞானம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| கருத்தனும் | — | (கர்மத்தைச் செய்யும்) கர்த்தாவும்- |
| ஒண் கருமபலம் | — | சிறந்த கரும பலத்தை (அனுபவிக்கும்) |
| போத்துருவும் தானாய் கருதி உடம்பு அபிமானி ஆம் சீவன் | — | போக்தாவும் தானாக எண்ணி தேகாபிமானியா யிருக்கின்ற சீவனே |



| | | |
|---|---|---|
| உரைத்தல் அரும் விட்சேபம் | — | சத்தசத்தென்று கூறற்கரிய விட்சேப மெனப்படும் |

## பரோட்ச ஞானம்

| | | |
|---|---|---|
| சுருதி குரு உண்மை உரையால் உயிர் உண்டு எனவே அறிதல் | — | வேதமும். குருவும், கூறுகின்ற சத்தியவசனமாகிய அவாந்தர வாக்கியத்தைக் கேட்ட விசுவாசத்தால் (தத்துவம் பதங்களின் இலட்சிய பாகமாகிய பிரம்மம் அல்லது) சுத்தாத்மாவையிருக்கின்ற தென்றுணர்தல் |
| நிரைத்த அசத்து என்னும் | — | முன்னர் கூறிய (பிரத்யக பின்ன பிரம்மத்தை) இல்லையென்னும் |
| முதல் ஆவரணம் நிவர்த்த கம்ஆம் | — | முதலாவது ஆவரணத்தை நிவர்த்திப்பதாகிய பரோட்ச ஞானமாகும் |

## அபரோட்ச ஞானம்

| | | |
|---|---|---|
| நீ பிரமம் எனும் வேத மொழி விசாரத்தால் | — | நீயே பிரம்மமென்று கூறுகின்ற, சாமவேத மகாவாக்கிய விசாரத்தால் |
| வர, துரியன், தான் எனவே அறிந்திடுதல் | — | யாவற்றினும் சிறந்துள்ள பிரத்யக பின்ன பிரம்மமே தானென்று உணர்தலே |
| அபாநா ஆவரணம் நிவர்த்தகம் ஆகும் அபரோட்ச ஞானம் | — | பிரத்யக பின்னபிரம்மத்தை இருந்தால் தோன்றாதா என்னும் ஆவணரத்தை நிவர்த்திப்பதாகிய அபரோட்ச ஞானமாகும் |

110 துரியநிலை யடைந்தற்பின் நான் கருத்தனான்போத்
திருவென்னும் சீவவுருத்துக் கமகன் றிடுதல்
அறியதெனு மச்சோக நிவர்த்தியாஞ் செய்தே
யடைதலுறும் பலனனைத்து மடைந்தன
மென்றமைதல்
பரிவினிரங் கிச திருத்தி யிரண்டுமப ரோட்ச
பலமாகு மறிவுருவா மாந் மாவிற் கென்றும்
தெரியுமப ரோட்சமுள தாதலினா லவர்க்குச்
சேர்தலெவ்வா றஞ்ஞாந முதலனவிங் கென்னில்

இ—ள்

| | |
|---|---|
| துரியநிலை அடைந்து அதன் பின் நான் — | பிரத்யகபின்ன பிரம்ம சாட்சாத் காரத்தைப் பெற்று அதன் பின் நான் |
| கருத்தா, நான், பேர்த்துரு என்னும் சீவ உருத்துக்கம் — | கருமத்தைச் செய்பவன், நான் கரும பலத்தை யநுபவிப்பவன் என்று கருதுகின்ற சீவத்வ வடிவ துக்கம். |
| அகன்றிடுதல் அரியது, எனும் அச்சோக நிவர்த்தி ஆம் — | நீங்குதலே (கீழ்மக்கள் அடைதற்கு) அரிதென்று கூறப்படுகின்ற அந்தச் சோக நிவர்த்தியாம் |

**(நிரங்குச திருப்தி)**

| | |
|---|---|
| செய்து அடைதல் உறும்பலன் அனைத்தும் — | யாம் செய்தற்குரிய கருமமனைத்தும், செய்து பெறுதற்குரிய பேறனைத்தையும் |
| அடைந்தனம் என்று அமைதல் — | பெற்றனமென்று (சந்தோஷத்தைப்) பொருந்தி யிருப்பதே |



| | |
|---|---|
| பரிவு இல் நிரங்கி சதிருத்தி — | துன்பமற்றிரிக்கும் (தடையற்ற ஆனந்தமாகிய) நிரங்குச திருப்தியாம் |
| இரண்டும் அபரோட்ச பலம் ஆகும் — | சோக நிவர்த்தி, நிரங்குச திருப்தியென்னும் இரண்டும் அபரோட்ச ஞானத்தின் பிரயோசனமாம் |
| அறிவு உருவு ஆம் ஆன்மாவிற்கு — | சுயம் பிரகாச சித்துவடிவா யுள்ள (பிரத்யக்) ஆத்மாவிற்கு |
| என்றும் தெரியும் அபரோட்சம் உளது ஆதலின் — | எப்போதும் (சர்வத்தையும்) அறியும் தன்மையாகிய அபரோட்சஞானம் இருக்கின்றமையால் |
| அவர்க்கு இங்கு அஞ்ஞான முதல் சேர்தல் எவ்வாறு என்னில் — | அவ்வான்மாவிற்கு இவ் வியாவ காரிக சத்தையின் கண், அஞ்ஞான முதலிய ஏழ வஸ்தைகள் பொருந்துதல் எங்ஙனமெனில் |

**111 (சீவனது ஏழவஸ்தைகளின் திருஷ்டாந்தம்)**

கடந்துநதி பதின்மர் தமை யெண்ணுங்கா லொருவன்
கண்டுநவ புருடரைப்பத் தாமவன்றா னெனவே
அடைந்தறியா திருத்தலே யஞ்ஞானம் பத்தாம்
அவனிலைகா ணப்படா னென்னுமிரு பிராந்தி,
இடும்பைதரு மாவரண நதியுளவ னிறந்தான்
எனுந்துக்கம் விட்சேபம் வேறுரியன் மொழியாற்,
கிடந்ததொரு துறக்கமென வுளனெனவே யறிதல்
கிளர்ந்தவவ னிலையென்ற லொடும்பகைத்தல்ப
ரோட்சம்

(இ—ள்)

| | |
|---|---|
| பதின்மர் நதி கடந்துதமை எண்ணுங்கால் — | பத்துப் புருடர்கள் கூடி (கானல்) சலப்பெருக்குள்ள ஆற்றைக் கடந்து சென்று தங்களை யெண்ணுஞ் சமயத்தில் (அவருள்) |

| | |
|---|---|
| ஒருவன், நவ புருடரைக் கண்டு . | ஒருவன் ஒண்பது புருஷரை (எண்ணி) பார்த்து |
| பத்தாம் அவன் தான் என அடைந்தும் | பத்தாவது புருஷன் தானாக இருந்தும் |
| அறியாது இருத்தலே அஞ்ஞானம் | (தன்னை) அறியாது இருந்தமையே அஞ்ஞானமாம் |
| பத்தாம் அவன் இலை காணப்படான் | பத்தாவது புருஷனில்லை (இருந்தால்) காணப்படானா |
| என்னும் இரு பிராந்தி இடும்பை தரும் ஆவரணம் | என்கின்ற இருவகைப் பிராந்தியே துன்பத்தை தருகின்ற ஆவரணமாம் |
| நதி உள் இறந்தான் அவன் எனும் துக்கம் விட்சேபம் | அக்கானல், ஆற்றிலே அப்பத்தாமவனாகிய புருஷன் இறந்தனனென்று (தரையில் முட்டிக்கொண்டு அழுதலாகிய) துக்கமே, விட்சேபம் |
| வேறு உரியன் மொழியால் ஒரு துறக்கம் கிடந்தது என | மார்க்கத்திற் செல்லும் மற்றோர் ஆப்தனது வசனத்தால் ஓர் சுவர்க்கம் இருக்கின்றதென்று ஆகமப் பிரமாணத்தால் அச் சுவர்க்கத்தை அறிவது போல |
| உளன் எனவே அறிதல், கிளர்ந்த | பத்தாவது புருஷன் இருக்கின்றான் என்றவனை அறிவதே, கூறிய |
| அவன் இலை என்றல் ஒடு பகைத்த பரோட்சம் | அப்பத்தாவது புருஷன் இல்லை யென்னும் முதலாவது ஆவரணத்திற்கு விரோதியான பரோட்ச ஞானமாம். 111 |



112 சங்கநவ புருடரொடு முறையெண்ணி நீயே
தசமனெனத் தனைத்தா னேயிருந்தபடி யடுத்தல்
இங்குவரு தசமன்கா ணப்படா னெனலோ
டிகலுமப ரோட்சமா நதியுளிறந் தனனென்,
றங்குவரு துயரகறல் சோகநிவர்த்தி யதாம்
அடைந்துதன தியல்நிலை யிற் சுகித்திருந்த றானே
துங்கநிரங் கிசதிருத்தி யென்றறிக வினிமேற்
றொல்வேத வாக்கியமாம் விசாரமெடுத்
துரைப்பாம்.

(இ—ள்)

| | |
|---|---|
| சங்கநவ புருடர் ஒடு முறை எண்ணி | (பின் அவன்) கூட்டமாயுள்ள வொன்பது புருடருடன் |
| நீயே தசமன் என தனைத்தானே இருந்தபடி அடுத்தல் | (பத்தாமனைக்கூட்டி) கிரம்மாக எண்ணி நீயே பத்தாவது புருஷன் எனக்கூற (அப்பத்தாவன் தெளிந்து) தன்னைத்தானே உள்ளபடி (பத்தாமவனென்று) அடைதல் |
| இங்கு வருத சமன் காணப்படான் எனல் ஒடு இகலும் அபரோட்சம் ஆம் | இவ்வியாவகாரிக சத்தையின் கண் வாரா நின்ற, பத்தாவது புருஷன் (இருந்தால்) காணப் படானா என்னும் இரண்டாவது ஆவாணத்திற்கு விரோதியான அபரோட்ச ஞானம் |
| நதி உள் இறந்தணன், என்று அங்கு வருது யர் அகறல் சோக நிவர்த்தி யதாம் | (தசமன்) கானலாற்றில் இறந்து விட்டான் என அவ்விடத்து வந்த துக்கம் நீங்குவதே சோக நிவர்த்தி யாகும், |
| தனது இயல் நிலையில் அடைந்து சுகித்து இருத்தலே | தன்னுடைய சுபாவ நிலை அடைந்து சுகரூப மாயிருப்பதே |

| | |
|---|---|
| துங்க நிரங்கிச திருத்தி என்று அறிக | — மேலான தடையற்ற ஆனந்த மென்று இத்திருஷ்டாந்தத்தை அறிக |

வி — அந்தக்கரணம், ஞானேந்திரியம், கர்மேந்திரியம், வாயுக்கள் சூட்சும பஞ்ச பூதங்கள். அவித்தை காமம், கர்மம் என்னும் புரியட்டகசரீரமும், தூல சரீர மும் ஆகிய ஒன்பது புருஷரோடு. சீவனாகிய பத்தாவது புருஷன் சம்சாரமாகிய கானலாற்றிலிரங்கி மநுடசரீர மென்னும் கரையில்வந்து மோட்ச நிமித்தம் ஆராயும் கால் புரியட்டகம் முதலிய ஒன்பதை; அறிந்துக் கூடஸ் தனாகிய தனது நிசசொரூபத்தை யுணராமல் சோக மடைந்து, ஆப்த புருஷனாகிய சற்குருவால் தன்னை யுள்ளபடி உணர்ந்து பரமானந்தக் கடலாயிருப்பதே தாஷ்டாந்தமாக நீ அறிவாயாக என்பதாம்.

| | |
|---|---|
| தொல்வேத வாக்கிய விசாரம் இனிமேல் எடுத்து உரைப்பாம் | — பழமையும் உயர்வு முள்ள வேதத்தின் (மகா) வாக்கிய விசாரத்தை யிதற்குமேல் எடுத்துக் கூறுவாம் 112 |

## 113 வேதவாக்கியங்கள் மூவிதம்

விரிந்தவிதி நிடேதஞ்சித் தார்த்தபோ தகமாய்
வேதவாக் கியமூன்று திறநாகு மவற்றுள்,
வருந்திமக முதலனசெய் கெனறல்விதி விடுக-
மதுபாநா திகனென்கை நிடேதம்விதி யின்றிந்
திருந்துசிவ வுயிரயிக்கப் பொருடனையே தெருட்டல்
சித்தார்த்த போதக வாக்கியமாகும் என்பர்
பொருந்துமறை நான்கினுநான் குளவாம் சித்தார்த்த
போதகமா கியமகா வாக்கியங்க ளென்பர்.
(இ—ள்)

| | |
|---|---|
| வேதவாக்கியம் விரிந்து விதி நிடே தம் சித்தார்த்த போதகம் ஆய் மூன்று திறன் ஆகும் | — வேதவாக்கிய மானது விரி வாயுள்ள, விதி வாக்கியமும் நிஷேத வாக்கியமும், சித் தார்த்த போதக வாக்கியமு மாக மூன்று வகையாவதாம் |



| | |
|---|---|
| அவற்றுள் வருந்தி மகம் முதலன செய்க என்றறன் விதி | — அவ்வாக்கிய முன்றனுள், பொருள் சிலவாலும் சரீரத் தினாலும் வருத்தமுற்று யாகாதி கர்மங்களை செய் வாயென்று கூறுவது விதி வாக்கியமாம். |
| மதுபானாதிகளை விடுக என்கை நிடேதம் | — கட்குடித்தல் விபசார முதலியவற்றை, விடக் கடவாய் என்று கூறுவது நிஷேத வாக்கியமாம் |
| விதி இன்றி திருந்து சிவ உயிர் அயிக்கம் பொருள்தனை தெருட்டல் | — விதி (நிஷேதம்) இல்லாமல் (சர்வத்திற்கும், அதிஷ்டான மாய், யாதொரு பேதமின்றி) திருத்தமாயுள்ள பிரம்மத் திற்கும், ஆத்மாவிற்கும். அயிக்கியார்த்தத்தை தெளிவாகக் கூறுவது |
| சித்தார்த்த போதக வாக்கியம் ஆகும் என்பர் | — சித்தித்துள்ள அர்த்தத்தை போதிக்கும் வாக்கியமாம். எனறிங்ஙனம் வேத வாக்கியங்களைக் கூறுவர் |
| பொருந்து மறை நான்கினும் | — கர்மம், உபசனை, ஞானம், என்னும் மூன்று காண்டத் திலும் பொருந்தியுள்ள, இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களினும் |
| சித்தார்த்த போதகமாகிய மகா வாக்கியங்கள் நான்கு உளவாம் | — சித்தமான பொருளை போதிப்ப தாகிய மகா வாக்கியங்கள், நான்கு விதமாக இருக்கின்றன |

வி—நான்கு மகாவாக்கியங்கள், பிரஞ்ஞானம், பிரம்மம் இது மனனவாக்கியம். அகம் பிரம்மாஸ்மி, இது அநுபூதி வாக்கியம், தத்துமசி, இது உபதேசவாக்கியம் அயம் ஆத்மா பிரம்மம், இது சம்மத வாக்கியமாம் 113

114 உரைத்தவையுள் சிறந்தன்று சாமமறை புகலு
மோங்குதத்வ மசிமகா வாக்கியமாங் கதற்குப்
பரத்தலுறு தற்பதந்தொம் பதந்தொடசி பதமாய்ப்
பதமுன்றாம் சிவமுயிரங் கவற்றயிக்க முறையே
அருத்தமென லாம்பதமே பதார்த்தமொடு வாக்கி
யார்த்தங்க டமக்குச்சம் பந்தமுறை மூன்றாம்
விரிக்கலவை தாஞ்சமா நாதிகர ணம்பின்
விசேடவிசே டியமிலக் கியபொடிலக் கணமாம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| உரைத்த அவை உள் சிறந்தது | — | கூறிய அந்நான்கு வாக்கியங் களுள் சிறப்புற்றிலங்குவது |
| நல்சாமமறை புகலும் ஓங்கு தத்துவம் அசி வாக்கியம் | — | ஈசனை இன்புறச் செய்த நல்ல சாமவேதமானது கூறுவது (உண்மையுணர்த்தும்) உயர்வு பொருந்திய தத்துவமசி மகாவாக்கியமாம், |
| அங்கு அதற்கு பரத்தல் உறு | — | அவ்வேதத்திலுள்ள தத்துவ மசிமகா லாக்கியத்திற்கு, பொருள் விரிந்திருக்கின்ற |
| தத்பதம் தொம்பதத் தோடு அசிபதமாய் பதம் மூன்றாம் | — | தத்பதமும் துவம்பதமும் அசி பதமும் ஆக பத மூன்றுண்டு. |
| அங்கு அவற்றுக்கு முறையே சிவம் உயிர் அயிக்கம் அருத்தம் எனல் ஆம் | — | அவ்வாக்கியத்திலுள்ள (தத்துவம் அசியென்னும்) பதங்களுக்கு கிரமமாக, பிரம் மமும் ஆத்மாவும் அபேதமே பொருளென்று கூறலாகும், |



| | | |
|---|---|---|
| பதம் பதார்த்தம் | — | பதமும் பதார்த்தமும் |
| வாக்கியார்த்தங்கள் | — | வாக்கியார்த்தங்களுக்கும் |
| தமக்கு முறையே | — | இந்த மூன்றிற்கும் கிரமமாக |
| சம்பந்தம் மூன்றாம் | — | சம்பந்தங்கள் மூவிதமாம் |
| விரிக்கில் அவை சமானாதி கரணம் ஆம் | — | விரித்துக் கூறுமிடத்து அச்சம் பந்தங்கள் சமானாதி கரண சம்பந்தம் |
| பின், விசேட விசே டியம் இலக்கியம் ஒடு இலக்கணம் | — | பின்னர் விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம் லட்சய சட்சணபாவ சம்பந்தம் ஆவதாம் |

வி-தத்துவமசி யென்னும் மகா வாக்கியத்திலுள்ள தத்துவம் என்னும் இரண்டு பதங்களுக்குப் பரஸ்பரம் சமானாதி கரணிய சம்பந்தமும், அவ்விருபதங்களின் அருத்த மிரண்டிற்கும், பரஸ்பரம் விசேஷண விசேஷிய பாவசம்பந்தமும் தத்துவமென்னும் வாக்கியத்திற்கும் அல்லது அதன் அர்த்தத்திற்கும் அகண்டசேதனத் தோடு இலட்சய இலட்சணபாவ சம்பந்தமும் உண் டென்பது இங்கு உணரவேண்டும், இம்மூன்றும் மகா வாக்கியத்திற்கு, சககாரிகளாம்.

1 பின்ன பின்னமாய, பிரவிருத்திகு நிமித்தங்களாய, சப்தங்களுக்கு, எவ்வேகார்த்தத்தில், பிரவிருத்தி யுண்டோ, அதுவே, இச்சம்பந்தங்களுக்கும் பரஸ்பரம் சமானாதி கரணிய சம்பந்தமாம்.

ஸோயம் தேவதத்த: என்புளிஸ; சப்தமோ அத்தேச கால விசிஷ்ட தேவதத்தனது வாசகமாம் அயம் சப்தமோ, இத்தேசகால விஷ்ட தேவதத்தனது வாசகமாம் ஆண்டு ஒரே தேவதத்தனினுடத்து ஸ:சப்தத்தின் பிரவிருத்திக்கு நிமித்தம் அத்தேச கால விசிஷ்டத்துவமும் அயம் சப்தத்தின் பிரவிருத்திக்கு நிமித்தம், இத்தேச கால விசிஷ்டத்துவமும் ஆம்.

இவ்விரு சப்தங்களும், பாகத்தியாக இலட்சணையால், அத்தேச கால விசிஷ்டத்துவமும் இத்தேச கால விசிஷ்டத்துவமாகிய, விரோத அம்சங்களைப் பரித்தியாகம் செய்து, ஒரே தேவதத்த பிண்டத்தைப் போதிப்பதாம், இதுவே, ஸோயம் என்னும் இரு சப்தங்தகளுக்கும் பரஸ்பரம் சமானாதி கரணிய சம்பந்தமாம்.

2 முற்கூறிய, வாக்கியத்திலே, இருசப்தங்களின் அர்த்தங்களுக்குள்ள, பரஸ்பரம் விரோதத்தை நிவர்த்திப்பது விசேஷண விசேஷிய பாவ சம்பந்தமாம் ஆண்டு ஸ:சப்தத்தினர்த்தம், விசேஷியமும் அயம் சப்தத்தினது அர்த்தம் விசேஷணமும், ஸோயம் என்னும் வாக்கியப் பிரயோகத்திலாம் அயம் சப்தத்தினர்த்தம் விசேஷியமும் ஸ:சப்தத்தினர்த்தம் விசேஷணமும், அயம்ஸ: என்னும் பிரயோகத்திலாம்.

3 ஈண்டு அறிவிப்பது லட்சணமும் அறிய யோக்கியமாயது இலட்சயமுமாம், ஸோயம் என்னும் இருபதங்களால் அல்லது இருபதங்களின் அர்த்தங்களால் இரு விரோதியம்சங்களை விட்டு விரோதமின்றிய அத்தேவ தத்தபிண்டம் அறியப்படுவதாம். ஆதலால் பதங்களும் பதார்த்தங்களும் இலட்சணமாம் அத்தேவதத்த பிண்டம் இலட்சயமாம்,

தாஷ்டாந்தம் — அங்ஙனமே தத்துவமசியென்னும் மகாவாக்கியத்திலுள்ள, தத்பதமோ பரோட்சதவ சர்வஞ்ஞத்துவாதி, தர்ம விசிஷ்ட ஈசுவர சைதன்னியத்தின் வாசகமாம். துவம் பதமோ — அபரோட்சத்துவ அற்பஞ்ஞத்துவாதி தர்ம விசிஷ்ட சீவசைதன்னியத்தின் வாசகமாம். ஆண்டு தற்பதத்தின் பிரவிருத்திக்கு நிமித்தம், பரோட்சத்வாதி தர்ம விசிஷ்டத் தன்மையாம். துவம் பதத்தின், பிரவிருத்திக்கு நிமித்தம், அபரோட்சத்துவாதி தர்ம



விசிட்டத் தன்மையாம். ஆதலால், தத்துவமென்னும் இருபதங்களின் பிரவிருத்திக்கு நிமித்தம் பின்ன பின்னங்களாம். இவ்விரு பதங்கள் பாகத்தியாக இலட்சணையால் ஓர் அகண்ட சைதன்னியத்தின் போதகமாம் இதுவே அப்பதங்களின் பரஸ்பரம் சமானாதி கரணிய சம்பந்தமாம்.

2 தற்பதார்த்தரூப ஈசுவர சைதன்னியத்திற்கும், துவம்பதார்த்தரூப சீவசைதன்னியத்திற்கும், பரஸ்பரம் பேதப் பிராந்தியை நிவர்த்தி செய்வதாயுள்ளது. விசேஷிய விஷேண பாவ சம்பந்தமாம்

தத்துவமென்னும் வாக்கியப் பிரயோகத்தில் தத்பதார்த்தம் விசேஷியமாம் துவம்பதார்த்தம் விசேஷணமாம், துவம்தத் அசியென்னும் இவ்வித வாக்கியப் பிரயோகத்தில் துவம் பதார்த்தம், விசேஷியமாம், தற்பதார்த்தம், விசேஷணமாம், இங்ஙனம் தத்துவம் பதார்த்தங்களுக்கு பரஸ்பரம் அபேதரூபத்தால் தத்பதார்த்தத்தில் பரோட்சத்வாதி பிராந்தி நீக்கத்தின் பொருட்டு தத்பதார்த்ததை உத்தேசியமாய் துவம் பதத் தன்மையமைக்கப்பட்டதாம் துவம் பதார்த்தத்தில் பரிச்சின்னத்வ பிராந்தி நீக்கத்தின் பொருட்டு துவம் பதார்த்தத்தை உத்தேசித்து, தத்பதார்த்தத்தையமைக்கப்பட்டதாம். இவ்விதம் விசேஷண விசேஷியபாவம் செய்வதால் இரண்டாவது பேதமயல் நீங்கும்

3 தத்துவம் என்னும் இருபதங்கட்கும் அவ்விரு பதங்களின் அர்த்தரூபமான, ஈசுவர சீவர்கட்கும் வாக்கியார்த்த வடிவ அகண்டசைதன்னியத்தோடு, இலட்சண இலட்சய பாவசம் பந்தமாம். அவ்விரு பதங்களும் பதார்த்தங்களும், பரோட்சத்வ அபரோட்சத்வாதி, விருத்ததர்மங்களைப் பரிகரித்து, அவிருத்த அகண்ட சைதன்னியத்தையே அறிவிப்பதாம்.

ஆதலால் அப்பதங்களினும் பதார்த்தங்களினுமோ, இலக்கணத்தன்மையும், அவ்வகண்ட சைதன்னியத்தில் இலட்சியத்தன்மையும், உளவாம் என்று தத்துவாநு சந்தானம் கூறுவதாம்.

## 115 தத்துவம் பதவாச்சியார்த்தம்

அறைதலுறு பதங்கடமக் கிருபொருளிங் குளவாம்
அவைவாச்சி யார்த்தமிலக் கியார்த்தமெனவவற்றுள்
முறைமைதரு விராட்புருடன் முதலாகி நின்ற-
மூவுருவ வீசனுமப் பிரம்ம முமொன் றாகிப்
பிறிதலற நிற்புழிதற் பதத்திற்கு கெய்துறுவ-
பெயர்வாச்சி யார்த்தமுக்கி யார்த்தமபி தாமத்தா
நெறிகொள்வி சுவாதிகளுந் துரியனுமொன் றாகி
நிற்புழிதொம் பதத்திற்கு வருமம் மூவகையும்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| இங்கு அறைதல் உறுபதங்கள் தமக்கு இருபொருள் உளவாம் | — | இத்தத்துவமசி மகா வாக்கியத்துள் கூறப்படுகின்ற தத்துவமென்னும் பதங் களுக்கு இரண்டுவித அர்த்தங்களுண்டு |
| அவை வாச்சியார்த் தம், இலக்கியார்த்தம் என ஆம் அவற்றுள் | — | அப்பொருள்கள் வாச்சியார்த் தம். இலச்சியார்த்தம் என்ப தாம், அவ்விரண்டினுள் |
| முறைமை தரு விராட் புருடன் முதல் ஆகி நின்ற | — | கிரமமாய் நிற்கின்ற, சமஷ்டி தூல, சூக்கும, காரண சரீரத் தோடு கூடிய. விராட்புருஷன் இரண்ய கருப்பன், அந்தரி யாமியாகி நின்ற |



| | | |
|---|---|---|
| மூவுருவு ஈசனும் அப்பிரம் மமும் ஒன்று ஆகி பிறிதல் அற நிற்புழி | — | மூன்று வடிவாய் சிருஷ்டிதிதி சம்மார மாகிய அவஸ்தை களோடு கூடிய ஈசுவரனும், அந்தப் பிரம்மமும், தப்தாய பிண்டம் போல ஏகாகாரமாய் பிறிவின்றி நின்றவிடத்து |
| தத்பதத்திற்கு எய்துறுவ பெயர் | — | தற்பதார்த்ததிற்குப் பொருந்தி யிருக்கின்ற பெயர்கள் |
| வாச்சியார்த்தம் | — | முக்கியார்த்தம், அபிதார்த்தம் சக்கியார்த்தமென்று கூறப்படும் |
| நெறிகொள் விசுவாதிகளும், துரி யனும் ஒன்று ஆகி நிற்புழி | — | முறைமையாகக்கொண்டுள்ள வியஷ்டி, தூல, சூக்குமகாரண சரீரமும், நநவு கநவு உறக்க மென்னும் அவஸ்தைகளும் விசுவன், தைசதன், பிராஞ் ஞன் என்னும் மூவுருவும் பிரத்யக் ஆந்மாவும் தப்தாய பிண்டம் போல ஏகாகரமாய் பிறிவற்று நின்றவிடத்து |
| தொம்பத்திற்கு அம் மூவகையும் வரும் | — | துவம்பதத்திற்கு, முற்கூறிய விதம் வாச்சியார்தம் முதலிய அம்மூவகைப் பெயர்களும் வருவனவாம் |

## தத்துவம் பதலட்சியார்த்தம்

116 தத்பதத் தினுக்குவிராட் புருடாதி யகன்று-
தனிநிருபா திகப்பிரம மேயிலக்கி யார்த்தம்
சொற்பரவுஞ் சோதிதத்தற் பதார்த்தமென நிற்கும்
தொம்பதத்திற் குற்ற விசுவாதிகளின் வேறாம்
பொற்பினிரு பாதிகமாந் துரியனிலக் கியார்த்தம்
பொருந்துறுசோ திததொம் பதார்த்தமெனலாகும்
விற்பரவு மிலக்கணைவிட் டதுவும் விடாததுவும்
விட்டுவிடா ததுவுமென மூவகையா மன்றே.

இ—ள்

| | | |
|---|---|---|
| தத்பதத்தினுக்கு விராட் புருடாதி அகன்ற | — | தத்பதத்திற்கு விராட் புருஷாதி அபிமானத் திரயமும், விராட்டாதி சரீரத்திரயமும், சிருஷ்டிதிதி முதலிய அவஸ் தாத்திரமும் நீங்கிய. |
| தனி நிருபா திகப் பிரம்மமே இலக்கி யார்த்தம் சொல் பரவு | — | ஏகமாயுள்ள (மாயா) உபாதி நீங்கிய பிரம்மமே இலட்ச யார்த்தப் பொருளாம் (அது) புகழமைந்த வாச்சியத் திலுள்ள விரோதபாகம் |
| சோதித தற் பதார்த்தம் என நிற்கும் | — | நீக்கி, அவிரோதபாகமாகச் சோதித்தறிந்த (சுத்த) தத்பதார்த்த எனவும், |
| தொம்பதத்திற்கு உற்ற | — | விளங்கி நிலைபெற்றிருப்பதாம் துவம்பதத்திற்குக் கிரமமாகப் பொருந்திய, |
| விசுவாதிகளின் வேறு ஆம் | — | வியஷ்டி தூலாதி சரீரத்திரயத் திற்கும் நநவாதி யவஸ் தாத்திரயத்திற்கும் விசுவன் முதலிய அபிமானத் திரயத்திற்கும் வேறாயுள்ள. |
| பொற்பின் நிரு பாதிகம் ஆம் துரியன் இலக்கிய அர்த்தம் | — | (எல்லா அவஸ்தைகளிலும், இலங்கும்) எழிலமைந்த அவித்தை அகன்ற பிரதிய காத்மா இலக்கியப் பொருளாம். |
| பொருந்துறு சோதித தொம் பதார்த்தம் எனம் ஆகும் | — | வாச்சியார்த்தக்திலுள்ள, விரோதபாகம் நீக்கி, அவிரோதமாகப் பொருந் தியுள்ள, சோதித்தறிந்த (சுத்த) துவம் பதார்த்த மென்று கூறலாம். |



## (இலட்சணையின் பேதம்)

| | | |
|---|---|---|
| வில் பரவும் இலக்கணை | — | இலக்கணநூலினும், தருக்க நூலினும் விளக்கம் பொருந்திய இலக்கணமானது |
| விட்டதுவும் விடாததும் விட்டு விடாததுவும் என மூவகை ஆம் | — | விட்ட இலக்கணையென்றும் விடாத இலக்கணையென்றும் விட்டு விடாத இலக்கணை யென்றும் மூவிதமாகும் |

## 117 இந்த லட்சணங்களுக்கு தாரணம்

கங்கையினி லிடைச்சேரி மருவலுறுஞ் சொல்லும்
கவன்குந்தமொடு சோயந் தேவதத்தனென்னும்
இங்கிவைக ளுதாரணமா மவற்றினுக்குக் கங்கை
யெனுமொழிநீர் வடிவாந்தன் முக்கியார்த்தத்தை
தங்குமிடைச் சேரிதனக் கிடமாகா மையினாற்
றணந்துகரை காட்டுந்தன் முக்கியார்த்தத்தை
துங்கமுறு குந்தமொழி விடாமற்குந் தத்தைச்
சுமப்பவனை காட்டுமென வுணர்ந்திடுக துணிந்தே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| கங்கையினில் இடைச் சேரி மருவல் உறும் சொல்லும் | — | கங்காநதியின் கண், இடைச் சேரியானது பொருந்தியிருக் கின்றதென்று, கூறும் வாக்கியமும் |
| குந்தம் கவன் ஒடு சோயம் தேவதத்தன் எனும் சொல் | — | ஈட்டி சொல்லுகின்றதென்னும் வாக்கியத்தோடு அவனே இத்தேவதத்தன் எனும் வாக்கியமும் |
| இவைகள் இங்கு அவற்றினுக்கு உதாரணம் | — | ஆகிய இம்மூன்று வாக்கியங் களும், இவ்விடத்து, அம் மூன்றிலக்கணங்களுக்கும் முறையே திருஷ்டாந்தங் களாம் (விட்டலட்சணை) |

| | | |
|---|---|---|
| கங்கை எனும் மொழி | — | கங்கையிலிடைச் சேரி யிருக்கின்றதென்பதில். கங்கையென்னும் பதம் தன்வாச்சியார்த்த மாய பிரபாகம் |
| தங்கும் இடைச்சேரி தனக்கு இடம் ஆகாமையினால் | — | கங்கையின் கண் பொருந்தி யுள்ள இடைச்சேரிக்கு இருப்பிடம் ஆகாததால் |
| நீர்வடிவு ஆம், தன் முக்கியார்த்தத்தை, தணந்து, கரை காட்டும் | — | பிரவாக வடிவமாயுள்ள் தனது வாச்சியார்த்தத்தைவிட்டு சக்கிய சம்பந்தம் லட்சணை யென்னும் கிரமத்தால் தனது சையோக சம்பந்தியாகிய கரையக் காட்டும் |

## விடாதலட்சணை

| | | |
|---|---|---|
| துங்கம் உறுகுந்த மொழிதன் முக்கி யார்த்தத்தை விடாமல் | — | தோள் மேற் பொருந்திய ஈட்டியென்னும் பதம், தனது வாச்சியார்த்தமாகிய ஈட்டியை விடாமல் (ஆதார அதேய சம்பந்தத்தால்) |
| குந்தத்தைச் சுமப்பவனைக் காட்டும் | — | குந்தமென்னும் ஈட்டியை சுமக்கின்றவனைக் காட்டுவதாம் |
| என துணிந்து உணர்ந்திடுக | — | என்று, நிச்சயமாக இவற்றை முறையே, விட்ட லட்சணைக்கும், விடாத லட்சணைக்கும் உ-தாரணமாக நீ உணர்வாயாக |

## 118 விட்டுவிடாலட்சணை

முன்னமொழி தருஞ்சோயந் தேவத்தனென்னும்
மொழியுண்முத லவனென்னு மொழியிறந்த காலந்



தன்னில்வரு தேசவயோ விசிட்டநாம் தேவ
தத்தனைக்காட் டிடுவனென் மொழிநிகழ்காலத்தி
லுன்னவரு மவையுடைய தேவதத்தன் றன்னை
யுணர்த்திடுமிவ் விருத்ததரு மப்பொருள்களிரண்டு
மன்னுதல்செ யயிக்கமுறா மையினாலப் பொருள்கண்
வருவிருத்த தருமங்கள் அனைத்தினையும் விட்டே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| முன்னம் மொழிதரும் சோயம் தேவதத்தன் எனும் மொழி உள் | — | கூறிய சோயம் தேவதத்தன், என்கின்ற வாக்கியத்தில் |
| முதல் அவன் எனும் மொழி இறந்த காலம் தன்னில் வரு | — | முதலிலுள்ள (ஸ: வடிவ) அவனென்னும் பதம் இறந்த காலத்தில் (பொருந்தி) வந்த |
| தேசவயோ விசிட்ட னாம் தேவதத்தனைக் காட்டும் | — | தூரதேசம் பால்யாவஸ்தை சதுரங்க சேனைகளோடு கூடியவனாகிய, தேவதத்த னான அரசனைக் காட்டுவதாம் |
| இவன் என்மொழி நிகழ்காலத்தில் உன்ன வரும் அவைஉடைய தேவதத்தன் தன்னை காட்டும் | — | அயம்வடிவ இவனென்னும் பதம் நிகழ்காலத்தில், ஆராய்ந் தறிய வருகின்ற, சமீபதேசம் விருத்தாவஸ்தை காவிகாம்பர தண்டு கமண்டலங்களோடு கூடியவனாகிய தேவதத் தானான சன்னியாசி அறிவிப்பதாம். |
| இவ்விருத்த தருமப் பொருள்கள் மன்னுதல் செய் | — | (இறந்தகாலம், நிகழ்காலம் என்னும் தொடக்கத்து) இவ் வுபய விரோத தருமமுடைய அவன் இவனென்னும் தேவ தத்தனாகிய அரச சந்நியாசி யென்னும் இரண்டு பொருள் களுக்கும் நிலைபெறுதலைச் செய்கின்ற. |

| | | |
|---|---|---|
| அயிக்கம் உறாமை யினால் அப்பொருள் கண்வரு விருத்த தரு மங்கள் அனைத்தும விட்டு | — | அபேதம் பொருந்தாமையி னால் அவ்விரு பொருளிடத் தும் (பொருந்தி வருகின்ற விரோத தருமமனைத்தும்விட்டு நீக்கி (இது குளகம்) 118 |

### 119 தத்துவமசி, மகாவாக்கியார்த்த உதாரணம்

விருத்தமறுந் தருமமாந் தேவதத்தன் றனையே,
விடாதுகொளி வைனிவனே யிவனவனே
யென்னும்
தெரித்தலரி தாயதா தான்மியங்கூ டுறுமாற்
தேரினிதை விட்டுவிடா விலக்கணையினொடு
தான்
அருத்தவிலக் கணைபாகத் தியாக விலக்கணையென்
றறைதலினால் இதுவேதத் வமசிவாக்கி யத்திற்
குரைத்திடுவ ருதாரணமாயு ரியதென வுண்மை
யுணர்ந்துடையோ ரஃதெவ்வாறெனின் முறையே
யுரைப்பாம்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| விருத்தம் அறு தருமம் ஆம் தேவ தத்தன்தனையே | — | விரோதமில்லாத தரும முடையவனாகிய நிறம், மச்சம், நீண்டகரம் இன்சொல் முதலியவற்றோடு கூடிய தேவதத்த சரீரத்தை |
| விடாது கொளின் அவனே இவன் இவனே அவன் | — | விடாது கொண்டால், அத் தேவதத்தனாகிய, அரசனே இத்தேவதத்தனாகிய, சந்நியாசியாம் இத்தேவதத் தனாகிய சந்நியசியேஅத் தேவதத்தனுகிய அரசனாம். |



| | | |
|---|---|---|
| என்னும் தெரித்தல் அரிது ஆயதான்மி யம் கூடுறும் | — | என்று கூறியவற்றை நிஷ் காம புண்ணியமும், சூட்சும புத்தியும் நூலாராய்ச்சியும் இல்லாதவர் கட்கு எளியதா யறிவித்தல் அரியதான (விரோத. அவிரோதமாகிய எல்லா வாச்சிய பாகங்களுக் கும் ஆசிரத்தன்மைச்) தாதாந் மியத்தன்மைச் சம்பந்தத்தால் அபேதம் பொருந்துவதாம் |
| தேரின் இதைவிட்டு விடாத இலக்கணை யின் ஒடு அருத்த இலக்கணை | — | ஆராய்ந்துணருமிடத்து (சோயம் தேவதத்தன் என் னும் வாக்கியத்திற்கு) இவ் வாறு பொருள் கொள்வதை விட்டு விடாத இலக்கண யுடன். பொருளிலக்கணை யென்றும் விரோத பாகம் |
| பாகத்தியா இலக் கணை என்று அறை தலினால் | — | நீக்கிய லட்சணை யென்றும் கண்ட லட்சணையென்றும் சொல்லப்படுவதால். |
| உண்மை உணர்ந்து உடையோர் இதுவே | — | உண்மைப் பொருளுணர்ந்த வுத்தமர்கள் (சோயம் தேவ தத்தன் என்னும்) வாக்கியமே |
| தத்துவமசி வாக்கி யத்திற்கு உதாரண மாய் | — | சாமவேதத்தில் சாந்தோக்கிய உபநிஷத்தில்உத்தாலக முனி வர், தன்மகனாகிய சுவேத கேது வென்னும் சீடனுக் குபதேசித்த தத்துவமசி மகா வாக்கியத்திற்கு திருஷ்டாந்த மாகத் தக்கதாக, |
| உரியது என உரைத்திடுவர் | — | இருக்கின்ற தென்று அவ்வாக் கியத்தைக் கூறுவார்கள். |

அஃது எவ்வாறு எனின் முறையே உறைப்பாம் — அவ்விட்டு விடாத இலக்கணை தத்துவமசி, மகாவாக்யத்தில் எவ்விதம் பொருந்துகின்ற தென்றால் (அதனைக்) கிரம மாகக் கூறுவாம்.

காலதேசாதி விரோதபாகங்களுக்கு, புருஷனோடு ஆசிரியத் தன்மைச் சம்பந்தமும், அரசன் சந்நியாசி யென்னும் பிண்ட மாத்திரமான அவிரோத பாகங் களுக்கு புருஷனோடு தாதாந்மிய சம்பந்தம் என்பதை இங்குணரப்பாலதாம், 119

## 120 தத்துவமசி மகாவாக்கியார்த்தவுபமேயம்

தத்பதம்வாச் சியார்த்தமா யெலாமறிதன் முதலாம்
சற்குணங்கொள் பரோட்சனாம் சிவன்றனையே
யுணர்த்தும்,
முற்பகருந் துவம்பதமுக் கியமாய்ச்சிற் றுணர்வு-
முதலாய வீனகுண விசிட்டவப ரோட்ச,
கற்பிதசீ வனையுணர்த்து மிம்முரண்கொள் பொருட்கே-
கத்துவங் கூடாமையினால் விருபொருளு மடையும்
பற்பலவாம் பரோட்சமுடனப ரோட்சமாகும்-
பனகத்தரு மத்திறங்க ளனைத்தினையும் விட்டே.
இ—ள்

தத்பதம் வாச்சி யர்த்தம் ஆய் — (தத்துவம், அசி என்னும் முப்பதங்களில்) தத்பதமானது (தனது) வாச்சியார்த்த மாயுள்ள

எலாம் அறிதல் முதல் ஆம் சட் குணம் கொள் — சர்வஞ்ஞத்துவம் முதலான, ஆறுகுணங்களைக் கொண்டுள்ள

பரோட்சன் ஆம் சிவன் தனையே உணர்த்தும் — (தத்துவஞானியைத் தவிர மற்றையோர்க் கெல்லாம்) பரோட்சனாகிய, பரமேஸ்வரனை அறிவிப்பதாம்



முற்பகரும் துவம்பத முக்கியம் ஆய் — தத்துவமசி, மகா வாக்கியத்தில் முன் கூறிய துவம்பதமானது தனது வாச்சியார்த்தமாயுள்ள,

சிற்றுணர்வு முதல் ஆய, ஈனகுண விசிட்ட அபரோட்ச கற்பித சீவனை உணர்த்தும் — அற்ப அறிவு முதலிய தாழ்ந்த குணங்களுடன் கூடிய அபரோட்சனாகிய சிதா பாசனையே அறிவிப்பதாம்.

இம்முரண் கொள் பொருட்கு ஏகத்துவம் கூடாமையின் — இவ்வித விரோத தர்மங்களைக் கொண்டுள்ள, (ஈசுவர சீவ ரெண்ணும்) பொருள்களுக்கு (ஒன்றாற்தன்மையாய) ஐக்கியம் பொருந்தாமையால்

அவ்விரு பொருள் களும் அடையும் பல்பலவாம் — (ஈசுவர சீவரென்னும்) அந்த இரண்டு பொருள்களுக்கும் அடைந்துள்ள பலவிதமான

பரோட்சமுடன் அபரோட்சம் ஆகும் பகைத்தருமங்கள் அனைத்தினையும் விட்டு — பரோட்சத்தோடு அபரோட்ச மாகிய விரோதமான தருமக் கூறுபாடுகளை அனைத்தையும், விடுத்து (குளகம்)

121 இகலிலா வறிவுமாத் திரமாகி நின்ற
இலக்கியமாம் பிரம்மகூ டத்தவுயிர் கொள்ளிற்
புகரிலா வதுவிதுவே யிதுவதுவே யென்னப்
பொருந்துதா தாந்மியவந் துறுமெனவே யறிக
பகவிலா வசிபதமிவ் விலக்கியார்த் தத்தின்
பரோட்சபவ ரோட்சுங்கள் மாயாகற் பிதமென்
றுகவிலா துணர்த்தியுறு பலமாமிம் முறையால்
ஒன்றாகு மறிவேயுண் டெனல் வாக்கியார்த்தம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| இகல் இலா அறிவு மாத்திரம் ஆகி நின்ற இலக்கியம் ஆம் பிரம்ம கூடத்த உயிர் கொளின் | — | விரோதமின்றிய சேதன மாத்திரமாய், நிலைபெற்றிருக்கின்ற (தத்துவம் பதங்களின்) இலட்சியார்த்தங்களாகிய பிரம்மத்தையும்கூடஸ்தராகிய ஆத்மாவையும் (ஐக்கிய மாதற்கு) கொள்ளுவோம் ஆனால் |
| புகர் இலா அதுவே இது இதுவே அது | — | குற்றமில்லாத அந்தப் பிரம்மமே, இந்தக் கூடஸ்தான்மாவாம் |
| என்னல். பொருந்து தாதாந்மியம் | — | இந்தக் கூடஸ்தான்மாவே அந்தப் பிரம்மாம் என்பதாக (குற்றமின்றி) அமைகின்ற விரோத அவிரோதமாகிய எல்லாவாச்சிய பாகங்களுக்கும் அதிஷ்டானத் தன்மை தாதான்மியத் தன்மை சம்பந்தத்தால் அந்தப் பிரமாத் மக்களுக்கு அபேத ஞானம் |
| வந்து உறும் எனவே அறிக | — | வந்து பொருந்துவதாம் என்று அவ்வைக்கியத்தை நீ அறிவாயாக |
| பகவு இலா அசிபதம் | — | (என்றும் கூடஸ்த பிரம்மங்களின்) பிறிவற்று அபேதத்தைக் காட்டும் அசிபதமான (தத்துவம் பதங்களின்) |
| இவ்விலட்சியார்த்தத்தில் | — | இலட்சியார்த்தங்களாகிய, பிரம்ம கூடஸ்தான் மாக்களின் |



| | | |
|---|---|---|
| பரோட்ச அபரோட்சங்கள் மாயா கற்பிதம் என்று | — | பரோசத்துவம் அபரோட்சத்துவங்கள் மாயையால் கற்பிக்கப் பட்டனவாம் என்று |
| உகவு இலாது உணர்த்தி உறு பலம் ஆம் | — | நிலைகேடின்றி தெரிவித்து (சீவப் பிரம்ம ஐக்கியத்தை போதிப்பதில்) மிகு பலனுடையதாகியிருப்பதாம் |
| இம்முறையால் ஒன்று ஆகும் அறிவே உண்டு | — | (தத்துவமசியென்னும் இவற்றிற்குப் பொருள் கூறிய) இக்கிரமத்தால் ஏகமாயுள்ள சேதனகாத்திரம் (பாரமாத்திக சத்தியமாக) இருப்பதாம் |
| எனல் வாக்கியார்த்தம் | — | மற்றனைத்தும் மித்தையாம் என்னும் சித்தாந்தம் செய்வதை, தத்துவமசி மகாவாக்கியத்தின் அர்த்தமாகும் |

விரோதமாய கற்பிதப் பிரபஞ்சத்திற்கு லட்சிய சேதனத்தோடு, அதிஷ்டானத் தன்மைச் சம்பந்தமும், அவிரோத வாச்சிய சேதனங்களுக்கு லட்சியச் சேதனத்தோடு தாதாந்மியச் சம்பந்தமும், உணரத் தக்கதாம், கற்பிதபேதம், வாஸ்தவ அபேதம் ததாந்மிய சம்பந்தமாம். சக்கிய சம்மந்தம் இலட்சணையென்பர்

இங்கு விட்டு விடாத இலக்கணையில், விட்ட சக்கியப் பொருள், விடாத சக்கியப் பொருள், ஆகிய இவற்றின் சம்பந்தமென்பது பொது இலக்கணமாம். இங்கு விட்டுவிடாத இலக்கணையிலும் உளதாலும் அதனால் இங்கு அகண்டானந்தம் பெறப்படுதலும் ஆராய்ந்து உணர்க மேலும் மகா வாக்கியத்தால் ஞான விருப்புடையாருக்கு, அகண்ட பிரம்மத்தின் அறிவு உண்டாகுகவென்பது இறைவனது அனாதி

கருத்துஆதலின் அது நிருடலட்சணையாம். சங்கை வாச்சியார்த்தத்திற்கு இலட்சியார்த்தத்தோடுசம்பந்தம் அங்கீகரித்தால், அசங்கத்தன்மைக்குக் கேடுண்டாம். சம்பந்தம் அங்கீகரியாவிடின் இலட்சணை பொருந்தாது ஏனெனின், சக்கியசம்பந்தம் அல்லது போத்திய சம்பந்தம். லட்சணையென்பர். சமாதானம் வாச்சியத்தில் சேதனம் சடம் என இருவிதமான பொருள் களுண்டு அதன் வாச்சியத்தினது சேதனபாகத் திற்கு இலட்சியார்த்தத்தில் தாதாந்மிய அபேத சம்பந்தம் உண்டு. வாச்சியபாகமான சேதனத்தின் சொருபமே இலட்சிய சேதனமாம், ஆதலால் வாச்சிய சேதனபாகத்திற்கு இலட்சிய சேதனத்தோடு, தாதான்மிய சம்பந்தமுண்டு. வாச்சியத்தின் சடபாகத் திற்கு அதிஷ்டானத்தன்மை சம்பந்தமுண்டு, கற்பிதத்தின் சம்பந்தத்தால் அதிஷ்டானத்தின் சுபாவம் கெடாது தனது தாதாந்மய சம்பந்தத்தால் சுபாவத்திற்கு கேடுண்டாகாது அதனால் இலட்சியத்தின் அசங்கத் தன்மையும் கெடாது என்று விருத்திப் பிரபாகரம் கூறுவதை ஆய்ந்துணர்க.

## திருஷ்டாந்தம்

22 தூயதத்துவ மசிமகா வாக்கியத்தி னாலே-
துரியபாற் குளதேகத் துவமென்கை கடாதி,
யாயவுபா திகளகற்றி விசும்பொன்றே யெனவும்
அகற்றிமநு டத்தன்மை யிராமனை நீதானே,
மாயவன்காண் எனவுங்கன் னனைவேடு களித்து
மகன்குந்திக் கெனவுமொரு தசமனைமாய் துயரம்
போயகல வொழித்து நீயேதசம எனவும்-
புகலுதல் போற்சுபாசித்த மாகுவதேயன்றி,

இ—ள்

| | | |
|---|---|---|
| தூயதத்துவமசி மகாவாக்கி யத்தினாலே | — | (உண்மையை யுணர்த்து தலால் மிகு) பரிசுத்தமாயுள்ள தத்துவ மசிமகா வாக்கியத் தினாலே |



| | | |
|---|---|---|
| துரியபரற்கு ஏக த்துவம் உளது | — | கூடஸ்த்தான்மாவிற்கும் பிரம்மத்திற்கும் ஐக்கியமிருக் கின்றது |
| என்கை கடாதி ஆய உபாதிகள் அகற்றி விசும்பு ஒன்றே எனவும் | — | என்று கூறுதல் கடமுதலியன வாகிய உபாதிகள் நீக்கி. ஆகாயம் ஒன்றென்று கூறுவது போலும் |
| மநுடத்தன்மை அகற்றி ராமனை நீதானேமாயவன் எனவும் | — | மநுஷத்தன்மையை மாற்றி ஸ்ரீ ராமச்சந்திரனை (நோக்கி) நீயே திருமால் என்று உப தேசித்தது போலும்' |
| வேடு கழிந்து கன்னனை குந்திக்கு மகன் எனவும் | — | வேட்டுவ சாதி தன்மையை நீக்கி கர்ன்னனை (நோக்கி நீ) குந்தியினது புத்திரனென்பது போலும் |
| மாய்துயரம் போய் அகல ஒழித்து ஒரு தசமன் எனவும் | — | மரண துக்கம் நீங்கிப் போக அதனை நீக்கி(அறியாமையில்) ஒப்பற்ற பத்தாமவனை (நோக்கி) நீயே பத்தாமவன் என்று கூறுவது போலும் |
| புகலுதல் போல் சுபாவ சித்தம் ஆகு வதே அன்றே | — | சுபாவ சித்தமாயிருப்பதே யல்லாமல் |

## 123 பேதவாத மறுப்பு

ஒருமலர்க்குத் துறக்கமெனல் போன் முத்திவிருப்ப
முதவருத்த வாதமெழிற் பதுமையைத் தேவ் எனல்போ
லிருமைதரு முபாசநா பரமனுடன் றன்னை-
இந்திரனென் பதுபோல்த் துதிபரமா ளினையே,
அருமரசென் பதுபோல வுபசாரி கந்தா
னக்கினிமா ணவகனெனும் வாக்கியமே போல
உரிமைதரு சுகுணசா திரிசமிது கோவி-
னுடம் பென்கை போற்சாதி வியத்தியா மன்றே

(இ - ள்)

## அருத்த வாதம்

| | |
|---|---|
| ஒரு மலர்க்கு துறக்கம். எனல் போல் முக்தி விருப்பம் உதவும் அருத்த வாதம் — | (பரமேஸ்வரனை) ஒரு மலர் கொண்டு, அர்ச்சிக்கின்றவனுக்கு சுவர்க்கத்தையடைதலுண்டாகுமென்னும் வாக்கியம்போல, மோட்சத்தில் இச்சையையுண்டாக்குகின்ற அருத்த வாதமும் |

## உபாசநாபரவாதம்

| | |
|---|---|
| எழில் பதுமையை தேவு எனல் போல் இருமை தரும் உபாசநாபரம் — | அழகமைந்த விக்கிரகத்தை கடவுள் வடிவமென்று கூறும் வாக்கியம் போலும். இம்மை மறுமைப் பயன்களைத் தருகின்ற உபாசநா பரவாதமும். |

## (துதிபரவாதம்)

| | |
|---|---|
| மநுடன் தன்னை இந்திரன் என்பது போல் துதிபரம் — | ஒரு சாதாரண மநுடனை (இவன்) இந்திரன் என்று கூறும் வாக்கியம் போல, துதிபரவாதமும். |

## (உபசாரவாதம்)

| | |
|---|---|
| ஆளினை அரும் அரசு— என்பது போல உபசாரிகம் | ஓர் அடிமையாளினை (இவன்) பெறுதற்குரிய அரசன் என்று கூறும், உபசாரிகவாதமும் |

## (குணசாதிரிசியவாதம்)

| | |
|---|---|
| அக்கினிமாணவகன் — என்னும் வாக்கியம் போல, உரிமைதருசு குணசாதிரிசம் | இம்)மாணவன் அக்கினியென்று கூறும் வாக்கியம் போல் பெருமை தருகின்ற குணசாதிரிய வாதமும். |



## (சாதி வியத்திவாதம்)

| | |
|---|---|
| இது கோவின் உடம்பு— என்கை போல் சாதி வியத்தி | இந்த கோத்தன்மை (பிறிந்து தோன்றாமையால்) பசுவின் தேகமென்று கூறும் வாக்கியம் போலும் சாதி வியத்திவாதம். (குளகம்) 123 |

124 கடத் தொடுமட் கநநிய மென்வாக்கியமே போலக்,
காரியகா ரணநீலோற் பலமெனும் வாக்கியம் போல்
விடுப்பில்குண குணிதயிர்பாற் கபேதமெனல்போல்
விகாரமே வாரிகனங் கட்கேகமெனல் போல்
அடுத்தவம்சாம் சிகம்பிம்பப் பிரதிபிம்பங் களுக்கு
அயிக்கமெனல் போல்விம்பப் பதிவிம்ப வாதம்
எடுத்துணரில் எனவிங்ஙன் பேதபரமாக
விசைப்பனவெலாம்சுருதி விரோதமென வறியே

(இ-ள்) (காரியகாரணவாதம்)

| | |
|---|---|
| கடத்தொடுமட்கு அநந்நியம் என் வாக்கியம் — போல காரிய காரண வாதம் | கடத்தோடு மண்ணுக்கு அந்நியம் இல்லையாம் — என்று கூறும் வாக்கியம் போல காரிய காரணவாதமும் |

## குணகுணிவாதம்

| | |
|---|---|
| நீலோ உற்பலம் எனும் வாக்கியம் போல் விடுப்பு இல் குணகுணி — | நீலநிறமுடையது உற்பல (கருங்குவளை மலரா) மென்று கூறும் வாக்கியம் போன்று விட்டு நீங்காத குணகுணி வாதமும் |

## விகார வாதம்

| | |
|---|---|
| தயிர் பால்கு அபேதம் எனல் போல விகாரம் — | தயிர் பாலுக்கு அபேதம் இருக்கின்றதென்று கூறும் வாக்கியம் போல. விகார வாதமும் |

## அம்சாம்சிக வாதம்

வாரி கணங்கட்கு ஏகம் எனல்போல், அடுத்த அம்சா அம்சிகம் — கடலுக்கு, அலைதிவலை நுரையாதிகளோடு ஒன்றா யிருக்கின்ற தென்னும் வாக்கியம் போல, பொருத்திய அம்சாம் சிகவாதமும்

## பிம்பப் பிரதிபிம்ப வாதமும்

விம்பம் பிரதி விம்பங்களுக்கு அயிக்கம் எனல் போல — பிம்பப் பிரதி விம்பங்களுக்கு ஐக்கிய முண்டென்று கூறும் வாக்கியம் போல

விம்பப்பிரதி விம்ப வாதம்என பேதபர மாக இங்ஙன இசைப் பன எல்லாம் எடுத்து உணரில் சுருதி விரோதம் என அறி — பிம்பப் பிரதிவிம்பவாத மென்று பேத தாற்பரியமாக இவ்விடத்துக்கூறுவன வெல் லாம் (அவற்றையாராய்ந்து சாரம்) எடுத்துணருமிடத்து (சத்தியம் அத்வைதம், இங்குப் பேதம் சிறிதுமில்லை. இவையாவும், சொப்பனம் போல் பொய்யென்று கூறும்) வேதவாக்கியங்களுக்கு விரோதமென்றறிக

வி—தத்துவமசி மகா வாக்கியத்திற்கு, சுபாவ சித்தத்தைக் கொள்வதேயல்லாமல், அர்த்தவாதம் முதல், பிம்பப் பிரதிபிம்ப வாதம் வரை. 11 வாதங்களும் பூர்வபட்சமாக தள்ளத்தக்கதென்பதாம். 124

125 அவ்வகிலங் கட்கெல்லாம் பொய்மையே புகலும்
அரியதாம் வேதாந்த பக்கமதி லினைய,
வெவ்வமறு சுருதிவிசா ரத்தினால் உண்மை
யெனுமுத்தி கூடுமெனல் எவ்வாறிங் கென்னில்
அவ்வியமென் சொப்பனமா தணைவினான்மெய்மை



யாயவீ ரியவொழிவுங் கற்பிதமாம் வடிவிற்
செவ்வியவொண் கடவுள்வழி பாட்டினால் இட்டஞ்
சேர்தலும்போல் நூலுணர்வான் முத்தியுஞ் சித்திக்கும்

இ—ள்

அவ் அகிலங்கட்கு எலாம் பொய்மையே புகலும் — (முற்கூறிய திரிசிய வடிவ) அந்தப் பிரபஞ்சமனைத்திற்கும் மித்தியாத் தன்மையைக் கூறுகின்ற

அரியது ஆம் வேதாந்த பக்கமதில் — அநதிகாரிகளுக்கு அருமை யான வேதாந்தபட்சத்தில்

இனைய, எவ்வம் அறு சுருதி விசா ரத்தினால் உண்மை எனும் முத்தி கூடும் எனல் — சற்குருவும் சற்சாஸ்திரமும், சத்தியமானால் அத்வைத சித்தாந்த விரோதமாம். மித்தையானால், கானல் சலத் தால் தாக சாந்தியுண்டாகதது போல் சத்தியமான மோட்ச முண்டாவது இன்றா ஆதலின் இத்தன்மைக் குற்றமின்றிய (குருசந்நிதியின்) வேதாந்த விசாரத்தினால்(பாரமார்த்திக) சத்தியமென்று கூறுகின்ற மோட்சம் சித்திக்குமென்று கூறுவது.

இங்கு எவ்வாறு என்னில் — இவ்விடத் தெப்படி பொருந்து வதாம் என்று (ஒருவன்) வினவினால்.

அவ்வியம் என் சொப்பந மாது அணைவினால் — (தனதுவாஸ்தவ) வடிவமில்லை யென்று யாவருங் கூறுகின்ற கநவின்கண் தோன்றும் ஸ்திரியைக் கூடுவதால்

| | | |
|---|---|---|
| மெய்மை ஆயவீரிய ஒழிவும் | — | (வியாவகரிக) சத்தியமான வீரிய வீழ்ச்சியும். |
| கற்பிதம் ஆம் | — | (சிற்பியினால் சிலையை |
| வடிவில் செவ்விய | — | தெய்வமாகக் கற்பிக்கப்படும் விக்கிரங்களினின்றும் (விதி விசுவாசம், இச்சை, அடம் இவற்றால்) செவ்வனே (நன்றாகப் பாவித்துச் செய்யும்) |
| ஒள் கடவுள் வழி பாட்டினால் இட்டம் சேர்தலும் போல் | — | அழகிய தெய்வத்தின் பூசை முதலியவற்றால் (அவனுக்கு) விரும்பிய பொருள் சித்தித்தல்போலவே |
| நூல் உணர்வால் முத்தியும் சித்திக்கும் | — | (மோட்சவிருப்புடையோருக்கு சற்குரு சந்நிதியில்) வேதாந்த சாஸ்திர விசாரத்தினால்(பாரமார்த்தீக) மோட்சம் சித்திப்பதாகும். |

வி. எப்படியெனில், சமசத்தையே தம்மில் சாதக பாதகமானதால், வியாவகாரீக குருவினாலும் வேதத்தினாலும், வியாவகாரீக அஞ்ஞானகாரியமான, பந்த நிவர்த்தியானது சொப்பனத்தில் புலிகண்டோன் பயத்தினால் சாக்கிரத்தில் விளித்தவுடன் பயம் நீங்குவதே போல பாரமார்த்திக சத்தியமான மோட்சமடையப்படுமென்பதாம்.

## 126 முத்தி விக்கினத் திரயம்

அருமையெனும் முத்திவிலக்காக மூன றுளவாம்
அஞ்ஞானம் ஐயம்விப ரீதமென வவற்றுள்
பிரம்மல நனென்கை அஞ்ஞான நானப்
பிரமமோ வலனோவென் றிடலை யஞ் சுருதி
வருமினிய வுத்திகளால் நான்பரமாயினுமுன்
வளர்சீவ பாவமுண் டென்குதல் விப ரீதந்தான்
றருமுறையில் அஞ்ஞான திகட்குமுரண் ஆகும்
சவணமொடும நநிதித் தியாசநங்க ளன்றே,



(இ-ள்)

| | | |
|---|---|---|
| அருமை எனும் முத்தி விலக்கு ஆக | — | அநதிகாரிகட்கு அரியதாம் என்று கூறப்படுகின்ற மோட்சம் பெறுவதற்கு பிரதி பந்தமாக, |
| அஞ்ஞானம், ஐயம், விபரீதம் என மூன்று உளவாம் | — | பிரமாணகத சம்சயமென்னும் அஞ்ஞானம், பிரமேயகத சம்சயமென்னும் சந்தேகமும், ஒன்றை வேறொன்றாக அறிவதென்னும் விபரீதமும் என்று மூவிதமாயுள்ளன. |
| அவற்றுள் நான் பிரமம் அலன் என்கை அஞ்ஞானம் | — | அந்தப் பிரதிபந்தம் மூன்றனுள், அது நீயாகின்றாய், என்று சற்குருவிடத்தில் உபதேசங்கேட்ட அதிகாரிக்கு, தன்னிடத்தில்சர்வஞ்ஞுத்வாதி கல்யாணகுணங்களைக் காணாது, நான் பிரம்மமல்லன் என்று பாவனை செய்திருப்பதே அஞ்ஞானமாம். |
| நான் அப்பிரமோ அலனோ என்றிடல் ஐயம் | — | விட்டுவிடாத விலக்கணையால், தத்துவமசி முதலிய மகா வாக்கியப் பொருளை அறிந்தும் விசுவாசக் குறைவால் யான் பிரம்மம் ஆவேனோ ஆக மாட்டேனோ என்று பாவனை செய்வதே சந்தேகமாம் |
| சுருதி வரு இனிய உத்திதிகளினால் | — | வேதாந்த சாஸ்திரங் களினாலும் (அவற்றால்) உண்டாகின்ற (சிந்தனை செய்வோர்க்கு) இனிமை யாயுள்ள யுக்திகளினாலும் |

| | | |
|---|---|---|
| நான் பரம் ஆயினும் | — | யான் பிரம்மமாவேன் ஆயினும் |
| முன் வளர் சீவபாவம் உண்டு என்குதல் விபரீதம் | — | அநாதியாக (யான் எனதென்று) வளர்ந்து வருகின்ற சீவத்துவம் (என்னின்று நீங்காது) இருக்கின்றது (அதனால் யான் சீவனே) என்று பாவித்திருப்பதே விபரீத பாவனையாம் |

## முத்தி விக்கினத்திரய பரிகாரம்

| | | |
|---|---|---|
| தரு முறையில் அஞ்ஞானாதி கட்கு | — | இங்ஙனம் வந்த கிரமப்படி அஞ்ஞானம் முதலிய வற்றிற்கும் |
| சவணம் ஒடு மனன நிதித்தியா சனங்கள் முரண் ஆகும் | — | சிரவண, மனன, நிதித்தியா சனங்கள் (இம் மூன்றிற்கும் பகையாயிருப்பதாம். |

127 சூதகா திகளிடைச் சுருதிவிசா ரத்தாற்
றுணிவுதோன் றுதலெனவே சிவமொடு
யிரயிக்கம்
ஓதுமா ரணமொழியின் றாற்பரியங் கேட்கை
வுயர்சவணம் கேட்டபொரு ளுத்தியிற் சிந்தித்தல்
தீதின்மா மநநமவற் றாற்றுணிந்த பொருளிற்
சித்தமசை வறவிருத்த னிதித்தியா சநந்தான்
மேதையாகிய சவணம் ஞானத்தால் ஆன்மா
மெய்மையா முக்கியத்தால் சவணமங்கி யெனலாம்
இ—ள்

## சிரவணம்

| | | |
|---|---|---|
| சுருதி விசாரத்தால் சூதகாதிகளின் இடை துணிவு | — | ஆப்தன் வாயிலாகச் செய்யும் கரும காண்ட, வேதவாக்கிய விசாரணையால் பிறப்பிறப் |



| | | |
|---|---|---|
| தோன்றுதல் என | | பாதிகளால் உண்டாம் தீட்டென்பவற்றில் நிச்சய புத்தி யுண்டாவது போல் |
| சிவம் ஒரு உயிர் அயிக்கம் ஓதும் | — | பிரம்மத்தோடு பிரத்ய காந்மாவிற்கு அயிக்கத்தைக் கூறுகின்ற |
| ஆரண மொழியின் தற்பரியம் கேட்கை உயர் சவணம் | — | ஞான காண்ட வேதவாக்கியத் தின் தாற்பரியத்தை நல்லாசிரி யர் வாயிலாக சட்லிங்க தாற் பரியத்துடன் நிச்சய புத்தி யோடு கேட்டுக் கொள்வதே மேலான சிரவணமாம் |
| கேட்ட பொருள் உத்தியால் சிந்தித்தல் தீது இல்மாமநநம் | — | இவ்வாறு,கேட்ட (சீவப்பிரம்ம ஐக்கிய) அர்த்தத்தை (தருக் கத்தோடு யுக்தியினால் ஆராய்ச்சி செய்து நோக்குதல் குற்றமற்ற சிறந்த மநநமாகும் |

## நிதித்தியாசனம்

| | | |
|---|---|---|
| அவற்றால் துணிந்த பொருளில் | — | சிரவணம் மநநமென்னும் அவ்விரண்டினாலும் நிச்ச யித்த (சீவப் பிரம்ம ஐக்கிய வடிவ) அர்த்தத்தின் கண் |
| சித்தம் அசைவு அற இருதல் நிதித்தி யாசனம் | — | சித்தம் நிச்சயமாக விருப்பதே நிதித்தியாசனமாம் |

## ஞானத்திற்கு சிரவணம் மநநம் சககாரியெனல்

| | | |
|---|---|---|
| மேதையாகிய சவண ஞானத்தால் | — | மேன்மையைத் தருகின்ற சிரவணத்தாலுண்டாகிய (சிவப் பிரம்மைக்கிய வடிவ) ஞானத்தால் |

ஆன்மா மெய்மை யாம் முக்கியத்தால் சவணம் அங்கி எனல் ஆம் — ஆத்மாவினுண்மைத் தெரிசனம் உண்டாவதாம் (இங்ஙனம்) முக்கிய மாயிருத்தல் பற்றி (தத்துவ ஞானத்திற்கு சககாரி காரணமாயுள்ள சிரவணாதி கட்குள்) சிரவணம், அங்கி என்று கூறப்படுவதாம்

வி — சிரவணம், அங்கி, அங்கம் என இருவிதமாம் அவற்றுள், அங்கி சிரவணம், சற்குரு வினிடத்தில் மகா வாக்கியத்தை உபதேசம் கேட்பது அங்க சிரவணம்-- குரு சந்நிதியில் சட்லிங்க தாற்பரியத்துடன் மகா வாக்கியத்தை விசாரித்தல் என்று விசாரசாகரம் முதலிய நூல்கள் கூறுவதாம், 127

**128 [சிரவணம் அங்கி, மநந நிதித்தியாசனங்கள் அங்க மென்பதற்கு, திருஷ்டாந்த வாயிலாக கூறுதல்]**

ஏனையவோ ரிரண்டும்தன் துணையெனலா லங்கம்
எனலாகும்அஃ தெவ்வாறெ னிற்பொருள்க டிகழ்த்து
மானதோர் சுடர்அசைவிற் கருமவலி யின்றாம்
ஆதலினால் வளிதடுக்கும் திரையெனலாம் மநநம்
மேனிமிர்வான் றிரிதூண்டி யொளிர்வித்தல் போலும்-
விளம்புநிதித் தியாசனமென் றறிந்திடுக தெரிந்தே,
மோனையா மெனவுரைத்த சிரவணத் திற்குள்ள-
முறையிலறு வகையிலிங்க தாற்பரிய முறைப்பாம்
(இ—ள்)

ஏனைய ஓர் இரண்டும் அதன் துணை எனலாம் — மற்றைய ஒப்பற்ற மநந நிதித்தியாசனங்கள் என்னும் இரண்டும் அச்சிரவணத்திற்கு சககாரிகளாமென்று கூறப்படுவதால்

அங்கம் எனல் ஆகும் அஃது எவ்வாறு என்னில் — அங்கமென்று கூறப்படுவதாம் அஃதெப்படி பொருந்துவதாமென்னின்



பொருள்கள் திகழ்த்து மானது — இருட்டிலுள்ள கடமுதலிய பொருள்களை. விளக்குவிப்பதாகிய

ஓர் சுடர் அசைவில் கரும வலிகின்றாம் ஆதலின் — ஒரு தீபமானது (காற்றால்) சலிக்குமிடத்து (அதற்குப் பொருள்களை விளக்குவதாகிய) காரிய சாமர்த்தியாம் ஆதலால்

மனனம் வளி தடுக்கும் திரை எனல் ஆம் — மநநத்தை (அத்தீப சலித்தற்கு காரணமான) வாயுவின் சஞ்சாரத்தைத் தடுக்கும், திரை போல்வது எனக் கூறலாம்

விளம்பு நிதித் தியா சனம் மேல் நிமிர்வான் திரி தூண்டி — (மனோ நாசத்திற்கு ஒப்பற்ற சாதனமென்று) கூறுகின்ற நித்தியாசமானது (அத்தீபம் ஒளிமழுங்குமிடத்து (அது) மேலோங்கிப் பிரகாசிக்கும் பொருட்டும் அத்தீபத்தின் திரியைத் (தூண்டு கோலால் தூண்டிவிட்டு (அத்தீபத்தைப்

ஒளிர்வித்தல் போலும் என்று தெரிந்து அறிந்திடுக — பிரகாசிக்கச் செய்வது போல, அச்சிர வணத்திற்குச், சககாரியாக, இருப்பதாம் என்று (சிரவண முதலிய வற்றின் இயல்பினை நீ ஆராய்ந்தறிவாயாக.

## சட்லிங்கதாற்பரியம்

மோனையாம் என உரைத்த சிர வணத்திற்கு உள்ள முறையில் — (தத்துவ ஞான சாதனங் களுள் தலையானதாமென்று கூறுகின்ற சிரவணத்திற்குத் தாற்பரியமாயுள்ள கிரமப்படி

அறுவகைலிங்க தாற்பரியம் உரைப்பாம் — சட்லிங்க தாற்பரியத்தைக் கூறுகின்றோம்

வி—சிரவணம் விளக்குப் போல்வதாம், மநநம் திரை போல்வதாம், திதித்தியரசனம், தூண்டுகோல் போல்வதாம். லோகவாசனை தேகவாசனை சாஸ்திர வாசனையென்பன. காற்றினைப் போல்வன வென்பதாம். 128

129 அவைகளுபக் கிரமமுப சங்கார முடனே
யப்பியாசம்பின்அபூர் வதைபலமொ டுற்ற,
நவிலருத்த வாதமுப பத்தியென லாகும்
நற்சிருட்டி முன்செகமெய்ப் பரமாயிற்றென்றுஞ்
சிவமதற்குச் சுவகதா திகளிலையென் றகண்டஞ்
செப்புமதே யுபக்கிரமஞ் சகஞ்சிவத்தின் மாயத்தும்
பவமகல துரியற்குப் பிரம்முட யிக்கம்-
பகர்ந்தந்து விதங்கூறல் உம்சங்கா ரந்தான்?

(இ—ள்)

அவைகள் உபக்கிரமம் உபசங்காரமுடன் — அந்தச் சட்வித லிங்க தாற்பரியங்கள், உபக்கிரமம் உபசங்காரமும்

அப்பியாசம்பின் அபூர்வதை பலம் ஒரு நவல் உற்ற அருத்த வாதம் — அப்பியாசமும் பின்னர், அபூர்வதையும் பலமும், (துதி நித்தையென இருவகையாகக் கூறப்படுகின்ற அருத்த வாதமும்,

உபபத்தி எனல் ஆகும் — உபத்தியும் என்று கூறப் படுகின்றனவாம். அவற்றுள் (சாந்தோக்கிய உபநிஷத் முதலானவற்றில பிரகரணா ரம்பத்தில்)



நல்சிருட்டி முன் சகம்—மெய்ப்பரம் ஆயிற்று என்றும் — நல்லோர்க்கு மோட்சமாகிய ஆனந்தத்திற்கு ஏதுவாய, சிருஷ்டிக்கு முன்னர் நாம ரூபமாகியுள்ள பிரபஞ்சம் (அத்விதீய) சத்ரூப பிரம்மா யிருந்த தென்றும்

சிவம் அதற்கு சுவக தாதிகள் இல்லை என்றும் — அந்தச் சத்ரூபப் பிரம்மத் திற்கும், சுவகதம், சுசாதி, விசாதியாகிய பேதங்கள் மூன்றும் இல்லை யென்றும்

அகண்டம் செப்புவதே உபக்கிரமம் — (பிரம்மத்தின்) அகண்ட சொருபத்தைக் கூறுவதே உபக்கிரமம் (பிரகரணத்தின் முடிவில்) நாம

சகம் சிவத்தில் மாய்த்து பவம் அகல துரியற்கு — ரூபப் பிரபஞ்சத்தை அந்த பிரம்மத்தின் கண் ஒடுங்கும் படி செய்து(அதிகாரிக்கு)பிறப் பொழியுமாறு பிரத்யகாத்மா விற்கு (அந்தப்)

பிரமமுடன் அயிக்கம் பகர்ந்து — பிரமத் தோடுள்ள அபேதத் தை உபதேசித்து (அந்தப் பிரம்மம்)

அத்து விதம் கூறல் உபசங்காரம் — அத்துவிதமாம் என்று (அவ் விதம்) ஒன்றென்றுணர்த்து வதே உபசங்காரமாம் (இது குளகம்) 129

130 கூறுமிவை யிரண்டுமோ ரிலிங்கமென வறைவர்
கூடத்தனே பிரம மெனமறித்து மறித்துந்
தேறவுரைத் திடலப்பி யாசமாந் துரியன்
திகழ்பிரமா ணாதீத னென்கையபூர் வதையாம்
பாறிலுயர் ஒன்றறிதி லெலாமறித லென்கை-
பலம்பிரத்திய காந்மவுரு வாம்பிரமம் தனக்கு

மாறரிய வைந்தொழிற்கர்த் திருத்துவஞ்
செப்புறுதல்
வயங்கருத்த வாதமென மதித்திடுக தெரிந்தே.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| கூறும் இவை இர ண்டும் ஓர் லிங்கம் என அறைவர் | — | கூறிய இவ்விரண்டும் கூடி ஒரு லிங்கமென்று (அறிஞர் கள்) கூறுவார்கள் |
| கூடத்தனே பிரமம் என மறித்தும் மறித் தும், தேற உறைத் திடல் அப்பியாசம் | — | (பிரகரணத்திடையே தத்துவ மசி முதலிய மகா வாக்கியங் களால்) கூடஸ்தான்மாவே, பிரம்மமென்று மறுபடியும், மறுபடியும் (அதனை) தெளி வாக அறியக் கூறுவதே அப்பியாசமாம் (அபூர்வதை) |
| திகழ் துரியன் பிரமாண அதீதன் என்கை அபூர்வதை | — | தனது சத்தையினாலேயே விளங்குகின்ற (பிரமாபின்ன மாகிய கூடஸ்தன் பிரத்யட்ச முதலிய) பிராமாணங்களுக்கு விஷயமாகதிருப்பவன் எனக் கூறுவதே அபூர்வதையாம். |
| பாறில் உயிர் ஒன்று அறிதல் எலாம் அறிதல் பலம் | — | பலம் பிறிவற்ற அந்தக் கூட்டஸ்தாத்மாவொன்றனை அறிந்தால் சர்வத்தையும் அறிதலாம் என்று கூறுவதே பலமாம். |
| பிரத்ய கான்ம உருவு ஆம் பிரம்மம் தனக்கு | — | பிரயக் ஆன்ம வடிவமாயுள்ள (நிர்விகார) பிரமத்திற்கு |
| மாறு அரிய ஐந்து தொழில் | — | கால கரும முதலிய நியமம் தவறுதலில்லாத பஞ்ச கிருத்தியங்களுக்கு |



| | | |
|---|---|---|
| கருத்துருத்துவம் செப்புதல், அருத்த வாதம் என தெரிந்து மதித்திடுக | — | கர்த்தாவாந் தன்மையைக் கூறுவதே அர்த்தவாதம் என்று (அதனை) ஆராய்ந்து அறிவாயாக 130 |

## உபபத்தி திருஷ்டாந்தாம்

131 கடத்தினுக்கு மண்ணினையும் நூற்குலண்டு தனையும்
காரணமென்பது போலப் பிரம்மமே முன்னம்
படைத்தசகத் காரணமென் பதுவேதிட் டாந்தம்
பகருத்தி தர்க்கமநு மாநமிவை மூன்றும்
அடுத்துவரு மநநசக காரிகளா மவற்றுள்,
ஆருயிர்கள் அநேகம்வியா பகமெனவே கூறும்
தடுப்பரிய சாங்கியமே முதலாய மதத்துள்
சாற்றுமுயி ரெலாமுடம் புதொறும் புணர்ச்சி
யுறலால்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| கடத்தினுக்கு மண்ணினையும், நூற்கு உலண்டு தனையும் காரணம் என்பது போல | — | கடத்திற்கு மண்ணையும் பட்டுநூலுக்கு கோசாகாரப் புழுவையும், காரணம் என்று கூறுவது போல |
| முன்னம் படைத்த சகத், பிரம்மமே காரணம் என்பதுவே திருட்டாந்தம் | — | முன்னர் சிருஷ்டித்த பிரபஞ்சத்திற்குப் பிரம்மமே காரணமாம் என்று கூறுவதே திருஷ்டாந்தம் என்னும் உபபத்தியாம். இதுவே சட்லிங்க தாற்பரியமாம் |

வி—இவ்வாறு ஆறுலிங்களால் சகல உபநிஷங்களுக்கும், தாற்பரியம் அத்வைத பிரம்மத்தில் உளது அந்தலிங்களை, உபநிஷங்களின் வியாக்கியானங்களில், பகவான் சங்கரர், வெளிப்படையாக எழுதியிருக்கின்றனர், அவற்றால் வேதாந்த வாக்கியங்களுக்கு

அத்வைத பிரம்மத்தில் தாற்பரிய நிச்சயமுண்டாகின்றது என்று விருத்தி ரத்தினாவலி ஐந்தாவது ரத்தினத்தில் கூறுவது காண்க

## மனன சக காரித்திரயம்

| | |
|---|---|
| பகர் உத்தி தருக்கம், — | நியாய நூலார் சிறப்பித்துப் |
| அநுமானம் இவை | பேசுகின்றயுக்தியும் |
| மூன்றும் | அநுமானமும் தருக்கமும் |
| | என்னும் இவை மூன்றும் |
| அடுத்து வரும் — | சிரவணத்தை அடுத்து |
| மனன சககாரிகள் | வருகின்ற மனனத்திற்குச் |
| ஆம் | சககாரிகள் ஆயிருப்பனவாம் |

வி — (1) யுக்தி இது கூடும், இது கூடாது எனத் தோன்றும் ஆராய்ச்சி வடிவ புத்தியுக்தியாம். இது கூடுமென்பது அந்வயமாம். இது கூடாதென்பது வியதிரேகமாம் அந்வய வெதிரேகமென்னும் இரண்டங்கத்தோடு கூடியது யுக்தியாம், அஃதிருந்தால், அஃதிருக்கும் என்பது அந்வயமாம் இதற்கு உ தா க ர ண ம் புகையாகிய காரியம் இருந்தால், அக்கினியாகிய காரணம் இருக்கும் என்பதாம், இதுபோல் ஆரோபமாகிய மாயப்பிரபஞ்சம் இருந்தால் அதிஷ்டானமாகிய பிரம்மம் இருக்கும் என்பது அந்வயமாம், அதிஷ்டானமாகிய பி ர ம் ம ம் இல்லையாயின் ஆரோபமான செகத்தும் இன்றாம் என்பது வெதிரேகமாம். இந்த யுக்தியால் கற்பிதமாயுள்ள மாயாப் பிரபஞ்சத்திற்கு, அதிஷ்டானமாக ஒருபொருள் யதார்த்தமாக இருத்தல் வேண்டும் என்பது பெறப்படுவதாம், மேல் ஆத்மா, ஏகமாநாநாவா என்னும் யு க் தி யை அதிஷ்டானப் பொ ரு ள் ஒன்று என்பதால் இந்த யுக்தியிலடக்கிக் கூறியதை அ றி ய வு ம் அத்தியாரோபா மென்றும் அபவாதமென்றும் சொல்லும் யுக்தியால் பந்தம் வீடென்றுரைக்கும் வேதாந்த மெல்லாம் என்று கைவல்லிய ந வ நீ த ம் கூறுவதால், அத்தியாரோப யுக்தியும் அபவாதயுக்தியும் இங்கறியத்தக்கதாம்.



2 தருக்கம் — தருக்கித்துப் பேசுவது தருக்கமாம். அஃது அநிஷ்டத்தைக் கூறுதலாம். தருக்க சங்கிரகம், தருக்கம், வியாப்பியத்தை ஆ ரோ பி த் த லா ல், வியாபகத்தை யரோபிப்பது. அது தீயில்லையாயின் புகையும் இல்லையாம் என்பது ஆம். இந்தத் தருக்கத்தின் இயல்பை உதாகரணத்துடன் கூறுவது அறிக. இதன் விரிவை நியாயப் பிரகாசம் 6-வது பரிச் சேதத்திலும் இந்தத் தருக்க பரிபாஷயின் குறிப்புரையிலும் அறிக. இந்தத் தருக்கத்தால் அதிஷ்டானமான பிரம்மம் இல்லையாயின், ஆரோபமான மாயாப் பிரபஞ்சமும் இல்லையாம், ஆரோபமான மாயாப் பிரபஞ்சம் இருத்தலின் அதற்கு அதிஷ்டானமான பிரம்மம் இன்றியமையாதிருத்தல் வேண்டும் என்பது பெறப்படுவதாம்.

3 அநுமானம், அநுமிதிப் பிரமையின் கரணம் அநுமானப் பிரமாணமாம். இம்மலை, தீயுடையது, புகையுடைமையால், எனக் கூறும் போது, புகையின் ஞானம் அநுமானமாம். அதனால் உண்டாகும் தீயின் ஞானம், அநுமிதிப் பிரமையாம் பிரமை யதார்த்த ஞானம்

பிரம்மம், தேசப் பரிச்சேதம், இல்லாததாம் வியாபமாயிருத்தலின் யாது தேசப்பரிச் சேதம் இல்லாதது அன்று அது வியாபகமும் அன்று கடம் போல்

பிரம்மம் — காலப்பரிச் சேதம் இல்லாததாம். நித்தியமாயிருத்தலின், யாது காலப்பரிச்சேதம் இல்லாதது அன்று, அது நித்தியமும் அன்று மின்னல் போல.

பிரம்மம் வஸ்துப் பரிச்சேதம் இல்லாததாம் திரிசயமாயுள்ள எல்லாவற்றின் சொரூப மாயிருத்தலால் யாது வஸ்துப் பரிச்சேதம் இல்லாததன்று அஃது எல்லாவற்றின் சொரூபமும் அன்று ஆகாயம் போல, என்றிவ்

வாறு அளவிறந்த அநுமானப் பிரமாணங்கள் உண்டு அவற்றைப் பெருநூல்களில் காண்க.

## தருக்கத்தோடுகூடிய அநுமானம்

வேதாந்த வாக்கியங்களால், சீவனிடத்து நிச்சயிக்கப்பட்டுள்ள, பிரம்மத்தின் அபேதம் எதுவோ, அஃதநுமானத்தாலும், இவ்வாற்றல் சித்திக்கின்றது. சீவன், பிரம்மா பின்னன். சச்சிதானந்தத் தன்மையால், யாண்டு யாண்டு, சச்சிதானந்தத் தன்மையுண்டு. ஆண்டாண்டு பிரம்மா பேதமும் உண்டு, பிரம்மம் போல, இது மூன்று அவையவங்களின் சமுதாயமான மகாவாக்கியமாம், ஈண்டு சீவன் பட்சம், பிரம்மா பேதம் சாத்தியம், சச்சிதானந்தத் தன்மை ஏது பிரம்மம் திருஷ்டாந்தம் ஈண்டு பிரதிவாதி சீவனிடத்து சச்சிதாதானந்தத் தன்மை ஏதுவோ இருக்கின்றது. பிரம்மா பேதமாகிய சாத்தியம் இல்லை, யென்றிவ்வாறு பட்சத்தில் சச்சிதானந்த மாகிய ஏதுவிற்குப் பிரம்மா பேதமாகி சாத்தியத் தோடு வியபிசார சங்கை செய்யின், தருக்கத்தால் அச்சங்கையை நிவர்த்தி செய்யவேண்டும். ஈண்டு தருக்கத்தின் சொரூபம் இதுவாம். சீவனிடத்து சச்சிதானந்தத் தன்மையாகிய ஏதுவை அங்கீகரித்து பிரம்மா பேதமாகிய சாத்தியத்தை ஆங்கீகரியாவிடின், சச்சிதானந்தத்திற்கு அத்விதீயத் தன்மையை பிரதிபாதிக்கும் சுருதி விரோதம் உண்டாம், அநிஷ்டத்தை சம்பாதிப்பது தருக்கமாம் சுருதியின் விரோதம் சர்வாஸ்தீகர்களுக்கும் அநிஷ்டமாம்.

வியாவகாரிக பிரபஞ்சம்மித்தை, ஞானத்தால் நிவர்த்திக்கப்படும் தன்மையால், யாண்டுயாண்டு, ஞானத்தால் நிவர்த்திக்கப்படும் தன்மை உண்டு ஆண்டாண்டுமித்தியாத்தன்மையும் உண்டு இப்பி வெள்ளி முதலானது போல, ஈண்டு வியாவகாரிகப் பிரபஞ்சம் பட்சம் மித்தியாத்தன்மை சாத்தியம் ஞானத்தால் நிவர்த்திக்கும் தன்மை ஏது இப்பிவெள்ளி முதலியன திருஷ்டாந்தம் 'வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தையென்பது, பிரதிஞ்சா வாக்கியம் ஞானத்தால் நிவர்த்திக்கப் படுந்தன்மை ஏதுவாக்கியம், யாண்டாண்டு ஞானத்தால் நிவர்த்திக்கப்படும் தன்மை உண்டு, ஆண்டாண்டு மித்யாத்வம் உண்டு. இப்பி வெள்ளி முதலியன போல என்பது உதாகரண வாக்கியமாம், ஈண்டுப் பிரபஞ்சத்திற்கு ஞானத்தால் நிவர்த்திக்கப்படும் தன்மையை ஒப்பி மித்தியாத்தன்மையை அங்கீகரியாவிடின், சத்திற்கு ஞானத்தால் நிவர்த்தி பொருந்தாது அதனால் ஞானத்தால் சர்வபிரபஞ்சமும் நிவர்த்தியாதலை பிரதி பாதிக்கும், சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமுண்டாம் என்னும் தருக்கத்தால், வியபசார கங்கையினிவர்த்தி உண்டாகின்றது என்று விருத்திப் பிரபாகரம் இரண்டாவது பிரகாசம் கூறுவதறிக.



## அநேக ஆன்மவாதம்

| | | |
|---|---|---|
| அவற்றுள் ஆர் உயிர்கள் அநேகம் வியாபகம், என கூறும் | — | அம்மூன்றனுள் (உடம்பின் கண்) பொருந்தியுள்ள சீவர்கள் பலவாம் வியாபகமாம் என்று அவற்றைக் கூறுகின்ற |
| தடுப்பு அரிய சாங்கியமே முதல் ஆய மதத்து உள் | — | அத்வைத சித்தாந்தம் முற்றும் உணர்ந்தவர்களல்லாதார் மறுப்பதற்கு அரிய சாங்கிய முதலிய சமயங்களுள். |
| சாற்றும் உயிர் எலாம் உடம்பு தொறும் புணர்ச்சி உறலால் | — | சொல்லப்படுகின்ற சீவர்கள் அனைவரும், தேகம் தோறும் ஒவ்வொரு தேகத்திலும் சம்பந்தம் உண்டாயிருத்தலால் |

இவ்வுடம் பிவற்கேயாம் போகசாதகமற்
றேனோர்க்கன் றெனப்போகத் திதிபுகலொணாதாம்
வந்தவுடம் பெத்திறத்து மிவன்வினையால் வரலான்
மற்றிவற்கே யெனின்வினையு மெவர்க்குமிலை யோதான்
முந்தையுடம் பவிமானந்தாற் செய்வினை யவர்க்கே
முற்றுமெனி னவ்வபிமா நமுந்தை யுடல்சேர்
அந்தவுயிர் அனைத்திற்கு மிலையோதா னிவ்வா
றநவவத்தை நீக்கவரித நாதியுயிர் எனலால் 32

இ—ள்

| | | |
|---|---|---|
| இவற்கே இந்த உடம்பு போக சாதனம் ஆம் | — | இவ்வான்மாவிற்கே இந்தச் சரீரம் (சுக துக்க வடிவ) போக துபவத்திற்குஇடம் ஆம் |
| ஏனோர்க்கு இன்று என போகதிதி புகலொணாதாம் | — | மற்ற சீவர்களுக்கு போக சாதனம் அன்றாம், என்று போகஸ்திதியை கூறுதல் கூடாதாம் |
| வந்த உடம்பு எத் திறத்தும் | — | இவ்வான்மாவிற்கு வாரா நின்ற உடம்பு, எவ்விதத் தினாலும் |
| இவன் வினையால் வரலால் இவற்கே | — | இவ்வான்மாவின் கருமத்தால் வருதலால், இவ்வான்மாவிற்கே |
| எனின் வினையும் எவற்கும் இலையோ | — | ஆமென்றால், அந்தக் கருமமும் எல்லா சிவர் களுக்கும் இல்லையோ (யாவர்க்கும் உண்டாம்) |
| முந்தை உடம்பு அபிமானத்தால் செய்வினை இவற்கே முற்றும் எனின் | — | (இவ்வான்மா) பூர்வ தேகாபி மானத்தால், செய்த கருமம், இவ்வான்மாவிற்கே பொருந்துவதாம் என்றால் |
| அவ் அபிமானமும் முந்தை உடல் சேர் | — | அந்தப் பூர்வதேகாபி மானமும், பூர்வதேகத்திற் கூடியிருந்த |



| | | |
|---|---|---|
| அந்த உயிர் அனைத்திற்கும் இல்லையோ | — | அந்த சீவர்களனைவர்க்கும் இல்லையோ (உண்டாம்) |
| இவ்வாறு அந அவத்தை நீக்கல் அறிது அநாதி உயிர் எனலால் | — | இங்ஙனம் (வருகின்ற) அநவ வஸ்தையான தோஷத்தை ஒழித்தல் முடியாதாம். ஏனெனின் சாங்கியர் முதலோர் ஆன்மா நித்தியம் (பல) வென்று கூறலால் 132 |

133 செப்பரிய வேகான்மபக் கமதிற் போகத்
திதியிலையென் றனேகான்ம பக்கமது கொளினும்
இப்பரிசு மிகுபோகத் திதிகூடா தாயிற்று
இச்சங்கை யிருமதத்து மொக்குமே யென்னிற்
பற்பலவிலே கான்ம பக்கமதில் விம்பப்
பதிவிம்ப நியாயத்தால் கரணவசை வாதி
மெய்ப்பரிய பலதிறத்தா லெண்ணிகழ்ந்த போக
விளைவுகூ டுதலெளிதென் குதலுத்தி யாமால்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| செப்பரிய ஏக ஆன்ம, பக்கமதில் | — | பிறர் மறுத்துக்கூறற்கரியதான அத்வைத பட்சத்தில் |
| போக திதி இல, என்று, அநேக ஆந்ம பக்கமது கொளினும் | — | போகத்தின் வியவஸ்தை சம்பவியாது என்று அநேகா ந்மபட்சத்தை அங்கீகரித் தாலும் (அதிலும்) |
| இப்பரிசு மிகு போக திதி கூடாது ஆயிற்று | — | இவ்விதமாக மிகுந்தசுகதுக்கங் களின் வியவஸ்தை பொருந்தாதாம் |
| இச்சங்கை இரு மத்தும் ஒக்குமே எனின் | — | இவ்வாட்சேபம் (ஏகான்ம வாதம் அநேகான்மவாதம் என்னும்) இரண்டு மதத்திலும், ஒத்திருக்கின்றதே எனின் |

| | | |
|---|---|---|
| பல்பல இல் ஏகான் மபக்க மதில் | — | நநாவென்பது சிறிதும் இல்லை (என்று) சுருதிகள் முழக்கும் அத்வைத மதத்தின் கண், |
| விம்ப பிரதி விம்ப, நியாயத்தால் கரண அசைவு ஆதி | — | பிம்பப் பிரதி பிம்ப நியாயத் தால் (உபாதியான) அந்தக் கரணத்தின் கலக்கம் அதனால் சுகதுக்கம் முதலியன |
| மெய்ப்பு அரிய பல திறத்தால் | — | உண்மையாதல் இல்லாத, நாநாவிதமாயிருக்கின்ற |
| எண் நிகழ்ந்த போக விளைவு கூடுதல் எளிது என்குதல் உத்தி | — | அளவு கடந்த (விசித்திரமான) போகாநுபவம் (பிரதி பிம்ப சீவர்க்கு) சம்பவித்தல் எளிதாம் என்று கூறுதல் உத்தியாகும் |

வி—வியாபகமான ஆத்மா நாநாவென்று அங்கிகரிக்கின் எல்லா ஆத்மாக்களின் சம்பந்தத்தையும் அங்கீகரித்தல் வேண்டும். அதனால் இந்தச் சரீரம் இந்த ஆத்மாவினுடையதென்னும் நிச்சயமுண்டாகாது. ஒவ்வோராத்மாவிற்கும் எல்லாச் சரீரங்களுமிருத்தல் வேண்டும். எந்த ஆத்மாவின் கருமத்தினால் எந்தச் சரீரமுண்டாயிற்றோ அந்த ஆத்மாவிற்கு அது சரீரமென்று ஒருவன் கூறின் அதுவும் பொருந்தாது. ஏனெனின் எந்தச் சரீரத்தாற் கர்மம் செய்யப்பட்டதோ எந்தக் கருமத்தைச் செய்தவனது முன் சரீரத்திலும் சகலாத்மாக்களுக்கு சம்பந்தமிருந்தது. ஆதலால் கருமமும் சகலாத்மாக்களினதேயாகும். ஓராத்மாவினதாகாது. எந்த ஆத்மாவிற்குச் சரீரம் மனதோடு கூடியிருக்கின்றதோ அந்த ஆத்மாவிற்கு அது சரீரம் என்று கூறின் அதுவும் பொருந்தாது ஏனெனில் சரீரம்போல் மனதுடனும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமிருக்கின்றது அதன் கண் இந்த மனம், இந்த ஆத்மாவினதென்னும் நிச்சயமுண்டாகாது. பின்னரோ எல்லா ஆத்மாக்களுக்கும், எல்லா மனமுமிருத்தல் வேண்டும். அங்ஙனமே எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா இந்திரியமும்



இருத்தல் வேண்டும். வெளிப் பதார்த்தங்களில் இது என்னுடையது. இது வேறொருவனது என்னும் விவகாரமும் சரீரத்தை நிமித்தமாகவுடையதாம் எல்லா ஆத்மாகட்கும் எல்லாச் சரீரமும் ஆதலால் வெளிப்பதார்த்தங்கள் யாவும், எல்லா ஆத்மாக்களுக்கும் உரியனவ. தல் வேண்டும். அன்றியும் எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீரத்தில் நான் என்னுடைய தென்னும் புத்தியிருக்கின்றதோ அந்தச் சரீரமே அந்த ஆத்மாவினதாம், யானென்னும் புத்தியும் என்னுடையதென்னும் புத்தியும் ஒன்றாம். ஆதலால், எல்லா ஆத்மாவிலுமிராது! ஆனால் ஒரு தருமம் ஒரு தருமியின் கண்ணேயே இருக்கும்! ஆதலால், ஒரே ஆத்மாவின் சரீரமாம். எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீரமிருக்கின்றதோ அந்தச் சரீரத்துடன் சம்மந்தப்பட்ட மனமும் இந்திரியமும் வெளிப்பதார்த்தங்களும் அந்த ஆத்மாவினுடையனவாம்! ஆதலால், வியாபகமான நாநா ஆத்மாக்களை, அங்கீகரித்தலிலும் தோஷமில்லை என்று கூறின் அவ்வார்த்தையும் பொருந்தாது! ஏனெனின் நான் என்னும் புத்தி ஒரே தேகத்தில் ஒரே ஆத்மாவிற்கிருப்பினும், அது நியாயமதத்திற்கு பொருந்துவதில்லை, எல்லா ஆத்மாக்கட்கும், ஒரு சரீரத்தில் நானென்னும் புத்தி உண்டாதல் வேண்டும். ஏனெனின், நியாயமதத்தில் புத்தியென்பது ஞானத்திற்காம், அந்த ஞானம் ஆத்ம மனங்களின் சையோகத்தினாலுண்டாகின்றது. அந்த மனமோடுண்டாம் சையோகம் எல்லா ஆத்மாக்களுக்கு முண்டாகின்றது. ஆதலால் மனதின் சையோகத்தினால் எங்ஙனம் ஒரு சரீரத்தில் ஒரு ஆத்மாவிற்கு நான் என்னும் புத்தியுண்டாகின்றதோ, அங்ஙனமே ஒரு சரீரத்தில் எல்லா ஆத்மாக்களுக்கு நானென்னும் புத்தி உண்டாதல் வேண்டும். மனத்தின் சையோகம் எல்லா ஆத்மாக்களோடும் இருப்பினும் எந்த ஆத்மாவில் ஞானத்தை உண்டுபண்ணும் அதிஷ்டமாயிருக்கின்றதோ, அந்த ஆத்மாவிற்கே நானென்னும் புத்தியுண்டாகின்றது என்று கூறினும் எல்லோருக்குமே ஞானமுண்டாதல் வேண்டும். ஏனெ

னின் வியாபகமான நாநா ஆத்மாவினை அங்கீகாரஞ் செய்யினோ ஒரு சரீரத்தின் சுபாசுபகிரியைகளால் சரீரத்திலிருக்கும் எல்லா ஆத்மாக்களுக்குமே அதிர்ஷ்ட முண்டாதல் வேண்டும் என்னும் வார்த்தையினைமுற் கூறியுள்ளோம். ஆதலால் வியாபகமான நாநா ஆத்மா வினை அங்கீகரிக்கினோ ஒரு தேகத்தில் எல்லா ஆத்மாக் கட்கும், சுகதுக்கங்களின் போகமுண்டாதல் வேண்டும் அநுபவத்தில் அங்ஙனமின்று. ஆதலால் ஆத்மா நாநா வியாபகம் கர்த்தா போக்தா என்னும் நியாய மதமும் அதையனுசரித்த பேதவாதிகளுடைய சித்தாந்தம் நலமுடையதன்று.

நமது சித்தாந்தத்திலோ, கர்த்தா போக்தா அந்தக் கரணமாம், அந்த அந்தக்கரணம், நாநாவாம். வியா பகமும் அணுவும் அன்றாம். பின்னரோ அதன் பரிணா மம், சரீரத்திற்குச் சமானமாம் தீபப் பிரகாசம் போல பெரிய சரீரத்தை அடையும் போது அந்தக்கரணம் விகாச மாகின்றது. சிறிய சரீரத்தில் சங்கோசமாகின்றது. இவ்வார்த்தை சித்தாந்தபிந்துவின் வியாக்கியானத்தில் மதுசூதன சுவாமிகளால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது எந்த அந்தக் கரணத்திற்கு எந்த சரீரத்தோடு சம்பந்த மிருக்கின்றதோ அந்த அந்தக்கரணத்திற்கு அந்தச் சரீரத்தாற் போகமுண்டாகிறது.

அந்தக் கரணத்தை வியாபகமாக அங்கீகரிக் கினோ எல்லா சரீரங்களும் எல்லோர்க்கும் உரியன வாம், போகமும் எல்லோர்க்கும் உண்டாம் அந்த அந்தக்கரணம் வியாபகம் அன்றாதலின் தோஷமில்லை அந்தக்கரணத்தை அணுவென அங்கீகரிக்கினோ சரீரத்தின் ஓரிடத்தில் அஃதிருக்க வேண்டும் என்று அங்கீகரித்தல் நேரும். அவ்வார்த்தை பொருந்தாது ஏனெனின் ஒரே காலத்திலேயே பாதத்திலும் சிரசிலும் முள் குத்தினால் இரண்டிடங்களிலும் ரே காலத்தில் வேதனை உண்டா



கின்றது. அஃதுண்டாக வேண்டுவதில்லை! ஏனெனின் அந்தக்கரணம் அணுவாயினோ ஒரு ஸ்தானத்திலேயே ஒரு காலத்திலிருக்கும் அதனால் எவ்விடத்தில் அந்தக் கரண மிருக்கின்றதோ அவ்விடத்திலேயே வேதனையுண் டாதல் வேண்டும். இரண்டிடங்களிலும் உண்டாக வேண்டுவதில்லை. ஆதலால் அந்தக்கரணம் அணுவும் வியாபகமும்அன்று ஆனால், சரீரத்திற்குச் சமான மாயிருக்கின்றது. அதனால் ஒரு தோஷமுமில்லை அணுவிற்கும் வியாபகத்திற்கும் விலட்சணமாயிருப்பது எதுவோ அதனையே மத்திமபரிணாமம் என்பர், என்று விசாரசாகரம் ஆறாவது தரங்கத்தில் கூறுவதிங் குணரத்தக்கதாம்.

134 தருக்கவநு மானவிலக் கணங்கடா மிசிரா
சாரியர்கண் முதலானோர் கண்டநா திகளில்
விரித்தமைத லாலிதுதான் சுபாநுபவ நூலாய்-
விளங்குதலா லீண்டுரைப்பிற் பெருகுமெனும்
பயத்தால்

உரைக்கிலமந் திரயோகம் பரிசயோ கம்பின்-
உயர்பாவ யோகமுட னபாவயோ கந்தான்,
தெரித்தமகா யோகமெனு மிவைகளோ ரைந்தும்
திகழ்கின்ற நிதித்தியா சநவடிவ மாமால்

இ—ள்

| | | |
|---|---|---|
| தருக்க அநுமான இலக்கணங்கள் | — | தருக்க அநுமான இலக் கணங்கள், ஸ்ரீஷர் |
| மிசிரா சாரியர்கள் | | ஷமிசிராசியர் மதுசூதன |
| முதலானோர் கண் | | சரஸ்வதி |
| டனாதிகளில் | | சுவாமிகள், நரசிம்ம |
| விரித்து | | சுவாமிகள், சிற்சுகாசாரியர், |
| உரைத்தலால் | | பிரம்மானந்தர் முதலிய |
| | | பெரியோர்கள் இயற்றியுள்ள |
| | | கண்டனகாத்தியம், |

அத்வைதசித்தி, பேததிக்காரம், சிற்சுகி முதலிய நூல்களில் அவர்களால் பிரசித்தமாய் விரித்துக் கூறப்பட்டிருத்தலாலும்.

இதுதான் சுபாநுபவ நூலாய் விளங்கு தலால் — (வேதாந்த சூடாமணி யென்னும்) இந் நூலானது சுபாநுபவப் பிரகரணமாய் விளங்குதலாலும்.

ஈண்டு உரைப்பின் பெருகும் எனும் பயத்தால் உரைக்கிலம் — இந்நூலின்கண் தருக்க முதலியவற்றைக் கூறின் நூல்விரியும் எனும் அச்சத்தால் (யுக்தி கடினமான தருக்க முதலியவற்றை) கூறாது விடுத்தனம்

## நிதித்தியாசன யோகபஞ்சகம்

மந்திரயோகம் பரிச யோகம் பின் உயர் பாவயோகம் உடன் அபாவ யோகம் — மந்திரயோகமும் பரிசயோகமும் பின்னர் மிகவுயர்ந்துள்ள பாவயோக முடன் அபாவ யோகமும்.

தெரித்தமகாயோகம் எனும் இவைகள் ஓர் ஐந்தும் திகழ்கின்ற நிதித்தியா சன வடிவம் ஆம் — சிறப்பாக தெரிவிக்கப் படுகின்ற மகாயோகமும் என்று கூறப்படுகின்ற ஒப்பற்ற இவ் வைந்து யோகங்களும் (தத்துவ தெரிசனமாக) விளங்குகின்ற நிதித்தியாசன மாம்.

135 ஓங்கார திகளநுசந் தானத்தால் பரத்தில்
உள்ளமடங் குதலேமந் திரயோக மதனோ
டீங்காகு மநபவந மொன்றாய்மூ லத்தில்
இருஞ்சுழினை வழிசென்று செந்நிநடு விருந்த



தேங்கான்ம வொளியின்ம னோலயமாதல் பரிசம்
சிரந்துறக்கம் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதீ
பாங்காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம்
பரமனுரு வாயவிராட் புருடவடி வெனினும்
(இ-ள்)

## மந்திரயோகம்

ஓங்கா ராதிகளின் அநுசந்தானத்தால் பரத்தில் உள்ளம் அடங்குதலே மந்திரயோகம் — அவற்றுள் ஓம் என்னும் பிரணவ முதலிய மந்திரங்களினால் (இடைவிடாது சிந்தித்தலாகிய) தியானப்பியாசத்தால் பரமான்மாவின்கண், மனோ லயமாதலே மந்திரயோகம்

## பரிச யோகம்

அதனோடு ஈங்கு ஆகும் மனம் — அம்மந்திர யோகத்தோடு இவ்வுலகின்கண் (மக்கள் எவ்விதம் பாவிக்கின்றரோ அவ்விதம்) ஆகும்படி செய்கின்ற மனமும்.

பவனம் ஒன்றாய் மூலாதாரத்தில் இரும் சுழினை வழி சென்று — பிராணவாயும் ஒன்றாகக் கூடி மூலாதாரத்தில் நின்றும் பெருமை வாய்ந்த சுழிமுனை நாடிமார்க்கத்தில்ஏறிச்சென்று

சென்னி நடு இருந்த தேங்கு ஆந்ம ஒளியில் மநோலயம் ஆதல் பரிசம் — சிரசின் மத்தியில் (பிரம்மரந்திரத்தில்) இருக்கின்ற பரிபூரண ஆந்மப்பிரகாசத்தில் அந்த மநோலயம் ஆதலே பரிசயோகமாம்

## பாவ யோகம்

சிரம் துறக்கம் — சுவர்க்கமே சிரசாகவும்
செவி திசைகள் — திக்குகளே செவிகளாகவும்

| | | |
|---|---|---|
| இரு சுடர்கள் விழி | — | சூரிய, சந்திரர்களே நேத்திரங்களாகவும் |
| தீ, பாங்கு ஆயமுகம் | — | அக்கினியே அழகமைந்த முகமாகவும் |
| உந்தி விசும்பு | — | நாபி ஆகாயமாகவும் |
| நிலம் பதம் ஆம் | — | நிலம் பாதமாகவும் |
| பரமன் உருவு ஆய விராட் புருட வடிவு எனினும் | — | பரமேஸ்வரன் திருவுருமா யிருக்கின்ற விராட் புருஷ வடிவத்தையாகிலும் (குளகம்) 135 |

136. அன்றியள வுறுபெருந்தோள் படைபணியோடுற்ற
அண்ணல்வடி வெனினுநினைந் தவயவங்க டம்மில்
ஒன்றொன்றை விடுத்து நின்ற யவயவிமாத்
திரமாம்-
உண்மையாம் பிரம்மத்தில் மனமடங்கல் பாவஞ்
சென்றளவு கரணமுறா வொருபிரம்மந் தன்னில்
சிந்தையடங் குதலபாவம் படைப்பி லொழிவிற்
றன்றெரித றெரியாமை யிடத்தினோர் பரிசாய்த்
தன்வடிவாம் பிரம்மத்தின் மநமிறல்மா யோகம்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| அன்றி அளவுறும் பெரும் தோள்படை | — | அல்லது (இரண்டு நான்கு என்றறறொடக்கத்து) அள வுள்ள தோள்களில்(அவற்றிற் கேற்ற) ஆயுதங்களையும் |
| பணியோடு உற்று அண்ணல் வடிவு எனினும் | — | (தனது வடிவத்திற்குத் தக்க) ஆபரணங்களோடு பொருந்தி யுள்ள, பரமேஸ்வரனது (திவ் வியமங்கள) சொருபத்தையா கிலும். |
| நினைந்து அவயவங் கள்தம்மில் | — | தியானம் செய்து பின்னர் கூறிய அந்தப் பாத முதலிய அவயவங்களில் |



| | | |
|---|---|---|
| ஒன்று ஒன்றாய் விடுத்து நின்ற | — | ஒன்றொன்றாக நீக்கி நீங்குத லின்றி நிலைபெற்று நின்ற |
| அவயவிமாத்திரம் ஆம் உண்மையாம் பிரம்மத்தில் மநம் அடங்கல் பாவம் | — | அவயவி மாத்திரமான, சத்ரூப பிரம்மத்தில் மநம் லயமாவதே பாவயோகமாம் |

## அபாவயோகம்

| | | |
|---|---|---|
| கரணம், சென்று அளவு உறா ஒரு பிரம்மம் தன்னில் சிந்தை அடங்குதல் அபாவம் | — | அகக்கரணம், புறக்கரணம் என்னும் மநோ வாக்காதி களால்காண்டற்கரியஒப்பற்ற பிரம்ம சொருபந்தன்னில் மநம் லயமாவதே, அபாவ யோகமாம் |

## மகா யோகம்

| | | |
|---|---|---|
| படைப்பில் ஒழிவில், தன் தெரியல்தெரியாமை இடத்தில் | — | உலக சிருஷ்டி காலத்திலும் (அதன்) சங்கார காலத்திலும் (யான் இதனை அறிவேன் என்னும்) தனது அறிதலாகிய சமயத்திலும் யான் இதனை அறியேனென்னும் தனது) அறியாமையாகிய சமயத்திலும் |
| ஓர் பரிசு ஆய்தன் வடிவு ஆம் பிரம்மத்தில் மநம் இறல் மாயோகம் | — | (ஓர் விகாரமுமின்றி) ஒரே தன்மையாயிருக்கின்ற, தனது யாதார்த்த வடிவமான (பிரத்யகபின்ன) பிரம்ம சொருபத்தில் மநம் லயமாவதே மகாயோகம் 136 |

## 137 ஞானப் பிரதிபந்தத்திரயம்

பகர்ந்தவுயி ருண்மைவிலக் காகவரும் பூதப்-
பிரதிபந்தம் வர்த்த, மானப்பிர திபந்தம்பின்,
நிகழ்ந்தவா, காமியப்பிரதி பந்தமென முத்தி-
நேயமொடு துறந்துகுரு பரனையறிந் தடைந்து
மகிழ்ந்துசவ ணாதிகமுற் றிடினுமுன் னுகர்ந்த
வநிதாதி விடயசுக வாதனையாற் றினமும்
புகுந்துமந நிலைகலக்கி யுயிருண்மை யுறாமற்
போக்கியிட றனைபூதப் பிரதிபந்த மென்பர்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பகர்ந்த உயிர் உண்மை விலக்காக | — | முற்கூறிய பிரத்யகான்மசாட்சர்த்காரத்திற்கு, விக்கினமாக |
| பூதப்பிரதிபந்தம் வர்த்தமானப் பிரதி பந்தம், பின் நிகழ்ந்த ஆகாமிய பிரதிபந்தம் | — | சென்றகாலப் பிரதிபந்தமும், நிகழ்காலப் பிரதிபந்தமும், பின்னர் நிகழ்கின்ற ஆகாமியப் பிரதி பந்தமும் |
| என வரும் | — | என்று (மூன்றுவிதப் பிரதி பந்தம்) வருவனவாம், |
| முத்தி நேயம் ஒடு துறந்து | — | அவற்றுள் ஒருவன் மோட்ச விருப்பத்துடன் மனைவி மக்கள், மாநிதியென்னும் மூவேடணைகளையும் விடுத்து |
| குருபரனை அறிந்து அடைந்து | — | சற்குருமூர்த்தியை (பலமுறை ஆராய்ந்து நோக்கி, இவர்நம்மைப் பிறப்பிறப்பாகிய முதலைவாயினின்றும் விடுவித்து மோட்ச சாம்ராட்சியம் கொடுத்து பாதுகாத்தற்குரியவரே என்று நிச்சயமாக) அறிந்து (அவரைத்தஞ்சமாக) அடைந்து |



| | | |
|---|---|---|
| மகிழ்ந்து சவணாதி முற்றிடினும் | — | மிகு பிரியமாய் சிரவண மநந நிதித்தியாசனங்களைச் செய்தாலும். |
| முன்நுகர்ந்த வநிதாதிவிடய சுகவாதனையால் தினமும் புகுந்து | — | முன்னர்கிரகஸ்தா சிரமத்தில் அநுபவத்திருந்த, மனைவி முதலிய விடயங்களாலுண்டாகிய சிற்றின்பவாசனையால் நாள்தோறும் சித்தத்தில். பிரவேசித்து .(அவனது) |
| மனநிலைகலக்கி உயிர் உண்மை உறாமல் போக்கி இடல் தன்னை | — | மனவுறுதியைக் கலங்கும்படிசெய்து, பிரத்யகபின்ன பிரம்மசாட்சாத்கார முண்டாகாமல், அதனைத் தடுத்துக்கெடுத்து விடல் தனையே, (மேலோர்) |
| பூதப் பிரபந்தம் என்பர் | — | சென்றகாலப் பிரதிபந்த மென்று கூறுவார்கள் |

வி—வாசனையால் தினமும் புகுந்து மனநிலைகலக்கி ஆந்ம ஞானமடையாமல் போக்குவது முன்னநுபவித்த விஷயாநுபவமாம்) 137

## 138 வர்த்த மானப்பிரதிபந்தம்

மடிவிடயா சத்தியபி மாநமொடு குதர்க்க
மறுகுறுசிற் றினஞ்சேர்தல் சபலத்துவாதி
அடைதலின்மெய் தெரிந்துமுயி ருண்மையுறா தழித்தல்
அதுவாகும் வர்த்தமா நப்பிரதிபந் தங்காண்
விடலரிய சநநமினுஞ் சிலவடைந்தா லன்றி
விடாதுபிர மாதியுல கிச்சையெனும் தோட
மொடுமருவி மறைப்பொருளை யுணர்ந்திடினு மான்ம
வுண்மையுறா தழித்தலா காமியப்பிரதி பந்தம்.

இ—ள்

| | | |
|---|---|---|
| மடி, விடயா சத்தி | — | சோம்பல் (சப்தாதி) |
| அபிமானம் | | விஷயங்களில் இச்சை |
| குதற்கம் | | சாதி, செல்வம், கல்வி அழகு, முதலியவற்றில் யான் என தென்னும் செறுக்கு வடிவ அபிமானம் சுருதி விரோத மாய்க் கூறுதல் (சித்தம்) |
| மறுகுறு சிற்று இனம் சேர்தல் சபலத்துவாதி அடைதலின் | — | கலங்குதற்கேது வாய கீழ் மக்கள் உடன் கூடியிருத்தல், திறபுத்தியின்மை, விடா முயற்சியின்மை, முதலியன (அதிகாரிக்கு) உண்டாவதால் (அவன்) |
| மெய் தெரிந்தும் உயிர் உண்மை உறாது அழித்தல் | — | தத்துவ விசாரம் செய் திருந் தாலும் பிரம்மா பின்ன ஆன்ம சாட்சாத்காரம் பொருந்தா வாறு (அதனைத்) தடுத்தல் |
| அது வர்த்தமான பிரதிபந்தம் ஆகும் | — | எதுவோ அது நிகழ்காலப் பிரதி பந்தமாகும் |

## ஆகாமியப் பிரதிபந்தம்

| | | |
|---|---|---|
| விடல் அரிய சநநம் இனும் | — | ஓர் அதிகாரிக்கு திடாப ரோட்ச சாட்சாத் காரமுண்டா மளவும் நீங்குதற்கரிய பிறப்பு, |
| சில அடைந்தால் அன்றி பிரமாதி உலக இச்சை விடாது | — | இன்னும் சில அடைந் தாலல்லாமல் (எனக்கு) பிரம்மலோக முதலிய புண்ணியவுலகங்களில் (யான் வைத்துள்ள) பிரியம் நீங்காது |



| | | |
|---|---|---|
| எனும் தோடமொடு | — | என்கின்ற, தோஷத்தோடு |
| மருவி, மறைப் பொருளை உணர்ந்திடினும் | | பொருந்தி வேதார்த்தத்தை அறிந்திருப்பினும் (அவனுக்கு) |
| ஆந்மா உண்மை உறாது அழித்தல் ஆகாமியப் பிரதி பந்தம் | — | ஆத்ம சாட்சாத் கார மடையாமல் (அதனைத்) தடுத்தலே எதிர்காலத் தடையாகிய ஆகாமியப் பிரதிபந்தமாகும் 138 |

## 139 ஞானப் பிரதிபந்த நிவர்த்தகம்

பந்தமவை மூன்றினையும் கடந்திடுவான் பயில்வ
பகர்ஞானம் வைராக முபரதியா மவற்றின்
வந்தணுகு மிலக்கணங்கா ரணமொடுதான் சொருப-
மருவுகா ரியமெனவே தனித்தனிஞா னக்கு-
முந்துசவ ணாதிகமே காரணமாந் மாவும்
மூலவகங் காரமும்வே றாக்குதலே சொருபம்,
நந்துமகங் காரகத மயற்குத்தான் கரியாய்,
நணுகுதலே காரிமென் றறைகுவர்மு தறிஞர்.

(இ—ள்)

| | | |
|---|---|---|
| பந்தம் அவை மூன் றனையும் கடந்திடு வான் | — | கூறிய அந்தப் பிரதிபந்தம் மூன்றனையும, கடந்து செல்லும் படி |
| பயில்வ பகர் ஞானம், வைராகம் உபரதியாம் | — | அப்பியாசித்தற்குரியன (பெரி யோர்கள் பிறவிப் பிணிக்கு, மருந்தென்று பேசுகின்ற) ஞானம், வைராக்கியம், உபரதி என்கின்ற மூவிதமாம் |
| அவற்றின் இலக் கணம், காரண மொடு சொருபம் மருவு காரியம் என தனிதனி வந்து அணுகும் | — | அம்மூன்றினது இலக்கண மாவது, காரணமுடன் சொரு பமும், செயலாய்ப் பொருந் திய காரியமென்றும் தனித் தனியாகவொவ்வொன்றிற்கும் வந்து பொருந்துவனவாம் |

| | | |
|---|---|---|
| ஞானக்கு முந்து | — | ஞானத்திற்கு (அகம் பிரம் மாஸ்மி யென்னும் தத்துவ ஞானத்திற்கு) முதன்மை யாயுள்ள, |
| சவணாதிகமே காரணம் | — | சிரவணம் மநநம் நிதித்தி யாசனமே காரணமாம் |

## ஞான சொரூபம்

| | | |
|---|---|---|
| ஆன்மாவும் மூல அகங்காரமும் வேறாக்குதலே சொரூபம் | — | ஆத்மாவையும் மூலாங்காரத் தையும் அவற்றின் அத்தியாச ஐக்கியம் தோன்றா தொழிய ஆத்மா சத்தியம், அகங்காரம் மித்தையா மென (ஐயந்திரிபின்றி) வேறாகப் பிரித்தறிதலே சொரூபமாகும் |

## ஞான காரியம்

| | | |
|---|---|---|
| நந்தும், அகங்கார கதமயற்கு தான் கரியாய் நணுகுதலே கரியம் என்று மூது அறிஞர் அறைகுவர் | — | ஞானத்தால் நசிக்கின்ற, அகங்காரத்தோடு கூடியுள்ள சீவனுக்கு, பிரத்யகான்மா வாகியதான் சாட்சி மாத்திரமா யிருந்து விளங்குதலே காரியமாமென்று, பேரறிஞர் கள் ஞானத்தின் காரண முதலியவற்றைப் பேசினர். *139* |

## 140 வைராக்கியத்தின் காரணம்

வேண்டும்வை ராக்கியத்திற் குற்றவநி தாதி
விடயத்தி னிலையாமை முதலாய குற்றங்
காண்டலது காரணமெத் திறத்தானு மதனை
கழன்றிடுதல் சொருபம்பின் புறாமைகா ரியமா,



மாண்டவுப ரதிக்கியமா திகளேகா ரணஞ்சூழ்
மனமொடுங்கல் சொருபமாம் புறக்கருமந் தன்னின்
மீண்டுபுகு மயலறுதல் காரியமென் றிசைப்பர்
விளம்பலுறு ஞானாதி கட்கவதி மொழிவாம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| வேண்டும் வைராக் கியத்திற்கு உற்றவ னிதாதி விடயத்தில் நிலையாமை முதல் ஆய குற்றம் | — | அதிகாரி புருஷர் விரும்புதற் குரிய வைராக்கியற்கு (கருமத் தால்) பொருந்திய ஸ்திரி முத லிய விஷயங்களில் அவற் றைத் தேடுவதிலும் காப்பாற்று வதிலும் காலத்தால் அழிவதி லும் இவ்விஷயங்களின் அநித்தியத்வ முதலாய தோஷங்களை |
| காண்டல் அது காரணம் | — | கண்டறிதலே காரணமாகும் |
| எத்திறத் தானும் அதனை கழன்றிடுதல் சொருபம் | — | பின் எவ்விதத்தாலும் அந்த ஸ்திரி முதலிய விடயங்களை விட்டு விடுவதே சொருபமாம் |
| பின்பு உறாமை காரியம் ஆம் | — | அவ்விஷயங்களை) விட்ட பின்னர் மறுபடியும் பிரவேசி யாதிருத்தல் காரியம் ஆம் |
| மாண்ட உபரதிக்கு இயமாதிகளே காரணம் | — | (உபாரதிக்குக் காரணம்) மநோநாசவாயிலாய் சீவன் முத்தி கொடுத்தற்கு) சிறந்த உபரதிக்கு, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியனம் சமாதி யென்னும் அஷ்டாங்கயோகமாம் |

1 வி—இயமம்—அஹிம்சை (கொல்லாமை) சத்தியம் (உண்மை பேசுதல்) அஸ்தேயம் (திருடாமை) பிரம்மச் சரியம், க்ஷமை (பொறுமை) திருதி (தைரியம்) தயை, ஆர்ஜவம் (நேர்மை மிதாகாரம்) சௌசம் (சுத்தம்) என்னும் இப்பத்தும் இயமமாம், இதன் பயன் துற்சங்க நீக்கமும் சற்சங்கத்தைக் கொள்ளுதலாம்.

2 நியமம் — தவம், சந்தோஷம், விசுவாசம், தானம் ஈசுவரப் பிரணிதானம் (பூசை) உபநிஷத் வாக்கிய சிரவணம், லஜ்ஜை மதி வைதீக நற்கருமங்களில் சிரத்தை ஜெபம். விரதமென்னும் இப்பத்தும் நியமமாம் இதன் பயன் சன்மார்க்கப் பிரவிருத்தியும் துன்மார்க்க நிவர்த்தியுமாம்.

3 ஆசனம்—ஸ்வஸ்திகம், கோமுகம், வீரம், கூர்மம், பத்மம், குக்குடம் உத்தானம், தனுஷம், மத்ஸ்யம் பச்சிமதானம், மயூரம், சவம், சிம்மம், பத்ரம், சித்த முதலியன ஆசனமாம். இங்கு 16 மட்டும் கூறப் பட்டது இதையோக நூல்களில் 124 வகைப்படும். அவற்றுள் தியானத்திற்குச் சிறந்தாசனமாவது சித்தாசனமாம். அஃது இடதுகால் குதியை ஆசனத்தின் கீழ் அழுத்தி வலதுகால் குதியை லிங்கத்தின் மேல் வைத்து உக்கார்ந்து சரீரத்தை தடிபோல் நிமிர்த்திப் பார்வையைப் புருவநடுவில் வைத்து இருப்பதாம் இக்காலத்தில் சித்தாசனம் சிரத்தையுடையவர்களுக்குப் போதுமானது ஆகும்.

4 பிராணாயாமம்—மூக்கின் [illegible] இடப்பக்கத்துத் துவாரத்தின் வழியாக இடையென்னும் நாடியால், வாயுவை பூரித்தல் பூரகமாம். மூக்கின் வலப் பக்கத்தின் துவாரத்தின் வழியாக வாயுவை விடுதல் ரேசகமாம், சுழிமுனையால் வாயுவை அடக்குதல் கும்பகமாம். பிராணாயாமமென்பது இம்மூன்றுமாம், அஃதாவது வெளிவாயுவை உட்கொள்ளுதலாகிய



சுவாசமும், உட்வாயுவை, வெளியில் விடுதலாகிய பிற சுவாசமும் ஆகிய இரண்டின் கதியையும் கெடுத்தல் பிராணாயாமமாம், அஃது அகற்பம், சகற்பம் என இருவகைத்தாம், பிரணவ உச்சாரண மின்றிச் செய்யும் பிராணாயாமம், அகற்பமாம், பிரணவ உச்சாரணத்தோடு செய்யும் பிராணாயாமம் சகற்பமாம். எந்த துவிஜன் காலையில் எழுந்து, பிராணசம்யமம் என்னும் பிராணாயாமமொன்றை யாசரிக்கின்றானோ அவன் பாவமனைத்தும் கெடுத்து விரைவில் பிரம்மலோகத்தை அடைகின்றான் என்று யோகசூடாமணி உபநிஷத் கூறுகின்றது.

5 பிரத்தியாகாரம் — சுபாவமாக விஷயங்களிற் செல்லும் இந்திரியங்களையும் மனத்தையும் நிரோதம் செய்வது (தடுப்பது) இதை திருவள்ளுவர் உரனென்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான் வரனென்னும் வைப்புக் கோர்வித்து என்றார்.

6 தாரணை—அந்தர் முகமாக திருப்பப்பட்ட மனதை பிரத்யகான்ம சொருபத்தில் நிருத்தலாம்.

7 தியானம்—இலக்கிய வஸ்துவின்பாற் செல்லுகின்ற ச. ஜா. தீய விருத்திப் பிரபாகமாம்

8 சமாதி எழுந்த சம்ஸ்காரத்தின் திரஸ்காரமும் (விஷயங்களின் சிந்தனையின் அடக்கமும்) அடங்கிய சமஸ்காரத்தின் பிரகடமும் (ஆத்ம சிந்தனைகளின் வெளிப்பாடும்) உண்டாய் அந்தக்கரணம் ஏகாக்கிரமாய் (ஒருமுகமாய்)ப் பரிணமித்தல் சமாதியாம். இச் சமாதி, சவிகற்பம், நிருவிகற்பம் என இருவகையாம். ஞாதா ஞானம் ஞேயரூப திரிபுடி விளக்கத்தோடு கூடி அத்வைத பிரம்மத்திலுள்ள, அந்தக் கரணத்தின் ஸ்திதிசவி கற்பசமாதி யெனப்படும். திரிபுடித் தோற்ற மில்லாத அகண்ட பிரம்மாகாரமான அந்தக் கரண விருத்தியின் ஸ்திதி நிர்விகற்ப சமாதியாம். இவ்

விரண்டினுள் சவிகற்ப சமாதி, சாதனமாம்; நிர்விகற்ப சமாதி பயனாம். இவ்விரண்டினுள் முன்னது சம்பிரஞ்ஞாத சமாதியென்றும் பின்னது அசம்பிரஞ்ஞாத சமாதியென்றும் சொல்லப்படும். அச்சமாதிகளின் லாபத்தால் அவித்தை முதலிய கிலேசங்களும், சுபா சுபகருமங்களும் முற்றும் நிவர்த்தியாகின்றனவென்று பாதஞ்சலயோக சூத்திரம் கூறுகின்றன மேலும் பிராணயாமம் பெரும்பாலும் இக்காலத்தில் சித்திப்பதில்லை. இது குருமுன்னிலையில் செய்யும் அடயோகமாம். இதைக் கடினமென்றுணர. கைவல்லிய நவநீதத்தில், கருத்ததற்கு இல்லையாயின் என்றார் [உபரதியின் சொரூபம்]

சூழ்மனம் ஒடுங்கல் சொரூபம் — (வனிதாதி விஷயங்களைக்) கருதுகின்ற மனம் (தனது ஸ்தானமாகிய ஆத்ம சொரூபத்தில்) ஏகாக்கிரமாக இருத்தலே, சொரூபம்

புறக்கருமம் தன்னில், மீண்டும் புகும் மயல் அறுதல் காரியம் என்று இசைப்பர் — (காரியம்) முன்னர் விட்ட பகிர் முகவியாபாரத்தில் திரும்பச் செல்லும் விபரீத எண்ணமற்று அகண்ட பிரம்ம சொரூபத்தில் அழுந்தியிருப்பதே காரியமாம் என்று மேலோர், ஞானாதிகட்கு காரண முதலியவற்றைக் கூறுவார்கள்

விளம்பல் உறும் ஞானாதிகட்கு அவதி மொழிவாம் — (முன்னர்) கூறிய, ஞானம், வைராக்கியம்உபரதியென்னும் இவற்றிற்கு எல்லையினைக் கூறுவாம். அதனையென்பது, தொகுதியொருமையாம் 140



## 141 ஞான வைராக்கிய உபரதிகளுக்கு அவதி

தக்கதே காந்மபா வம்போலப் பிரம்மந்
தானென்னுந் திண்மை ஞானத்தினுக்கா மவதி
மிக்கபிர மாதிபதந் துரும்பெனவே நினைத்தல்
விளம்பும்வை ராக்கியத்திற் கவதிசுழுத் தியன்போற்
றொக்ககரு மங்களனைத் தினையும்நினை யாமை-
தோன்றுமுப ரதிக்கவதி யாகுமிவை மூன்றும்-
புக்கொருவ னடைந்திடுமே லதுமுன்னம் விடாது
புரிந்தமா தவத்தின்வலி யென்றறிக தெரிந்தே.

(இ—ள்)

### ஞானத்திற்கு அவதி

தக்க தேகான்ம பாவம் போல — அஞ்ஞான காலத்தில், தகுதியான தேகான்ம புத்தி திடமாயிருந்ததுபோல.

பிரம்மம் தான் என்னும் திண்மை — பிரம்மமே யானென்னும் புத்தி திடமாயிருத்தலே

ஞானத்தினுக்கு அவதி — ஞானத்திற்கு எல்லையாகும்

மிக்க பிரம்மாதிபதம் துரும்பு எனவே நினைத்தல் விளம்பும் வைராக்கியத்திற்கு அவதி — மேன்மை மிகுந்த பிரம்மலோக முதலிய புண்ணியத்தால் வரும் பதவிகளை ஓர் திரணம் போற்கருதுவது உயர்வாகக் கூறும் வைராக்கியத்திற்கு அவதியாம்.

### உபரதிக்கு அவதி

சுழுத்தியன் போல் தொக்க கருமங்கள் அனைத்தையும் — சுழுத்திய வஸ்தையை அடைந்தவன் போல பலவிதமாய்ப் பொருந்தியுள்ள கருமங்களனைத்தினையும்

| | |
|---|---|
| நினையாமை தோன்றும் உபரதிக்கு அவதியாம் — | மறந்திருத்தலே வைராக்கியத்தால் உண்டாகும் உபரதிக்கு எல்லையாகும் |
| இவை மூன்றும் ஒருவன் புக்கு அடைந்திடு மேல் — | இந்த ஞானமுதலிய மூன்றையும் அதிகாரி புருஷன் ஒருவன் தனது முயற்சியால் (சற்குருவினிடத்தில்) சென்று அடைவானாயின் |
| அது முன்னம் விடாது புரிந்த — | அவனுக்கு அம் மூன்றனது சித்தி அவன் முற்பிறப்பில் இடைவிடாது செய்து வந்த |
| மாதவத்தின் வலி என்று தெரிந்து அறிக — | பெருந்தவத்தின் பலமாமென்று அம் மூன்றனது சித்தியையும் நீ ஆராய்ந்து அறிவாயாக 141 |

## 142 மோட்சகாரணம் ஞானமாம் எனல்

குறையகலும் வைராக்கிய முபரதியா மிரண்டுங்
கூடிஞா னங்கூடா தாயின்முத்தி யரிதாம்
உறுமினிய மிசையுலக பதங்கிடைக்கு ஞானம்
ஒன்றுமடைந் தவையிரண்டு மிலையாயி னிற்ப
முறியுமர நெடும்பணையோன் விழநினை வின்றியினு
முறியவிழல் போலவே தேகாந்த மதனிற்,
பெறுவனுயர் முத்தியினை யுடற்கமைந்த வினையால்
பிறந்திடுந்துக் காநுபவ முளதாத றிண்ணம்

(இ—ள்)

| | |
|---|---|
| குறை அகலும் வைராக்கியம் — | (திருஷ்டதுக்கமென்னும் விட்சேபமாகிய) குறை நீக்குகின்ற வைராக்கியம் |
| உபரதி இரண்டும் கூடி — | உபரதி இரண்டும் (ஒருவனுக்குப் பூரணமாகக்) கூடி இருப்பினும் |



| | |
|---|---|
| ஞானம் கூடாது ஆயின் முத்தி அரிது ஆம் — | ஞானமாத்திரம் கூடாதிருக்குமாயின் அவனுக்கு மோட்சமுண்டாதல் இல்லையாம் (ஆனால்) |
| உறும் இனிய மிசை உலக பதம் கிடைக்கும் — | மிகவும் இனிமை பொருந்திய எவ்வுலகத்திற்கும் மேலாகவுள்ள பிரம்மலோகத்தை அடைதல் சித்திப்பதாம் |
| ஞானம் ஒன்று அடைந்து இவை இரண்டும் இல ஆயின் — | (ஒருவன் தத்துவ) ஞானமொன்றுமாத்திரம் அடைந்து (இருக்க) அவனிடத்து வைராக்கிய உபரதியுமான இரண்டுமில்லையாயின் |
| முறியும் மரம் நெடும் பணையோன் நிற்ப — | முறிந்து விழுதற்குரிய விருட்சத்தினது நீண்ட கிளையின் கண் இருப்பவன் (அதனிடத்து) நின்றிருக்க (அல்லது) |
| விழ நினைவு இன்றியினும் — | (பூமியின்கண்) விழ நினைவு இல்லாதவனாயிருப்பினும் |
| முறிய விழல் போல — | அவ்விருட்சத்தின் கிளை முறிந்து (பூமியின் கண் அவனுடன்) விழுதல்போல |
| தேகாந்தம் அதனில் உயர் முத்தியினை பெறுவன் — | அவன் பிராரத்த கருமம் முடிவில் உயர்வாகிய மோட்சத்தினை அடைந்திருப்பன் |
| உடற்கு அமைந்த வினையால் — | (அவனுக்குத் தேகமுள்ளளவும் அவனது) தூலவுடம்பு வருதற்குக் காரணமாகப் பொருந்திய பிராரத்த கருமத்தால், |
| பிறந்திடும் துக்காநுபவம் உளதாதல் திண்ணம் — | உண்டாகின்ற (சுகத்தோடு) துக்கத்தை அநுபவித்தல் உண்டாவது நிச்சயம் 142 |

## 143 ஞான சப்த பூமிகள்

சாற்றரிய சுபேட்சை விசாரணை தநுமா நசிசத்
வாபத்தி யசம்சத்தி பதார்த்தாபா வனையே,
மேற்றுரிய காமியெனு மிவற்றினை முதறிஞர்
விளங்குசத்த ஞானபூ மிகையென்பர் அவற்றுட்
டோற்றிடுநான் மூடனாயிருந்தகா ரணமென்-
சுருதிகுரு வாலறிவ லெனநினைதல் சுபேட்சை,
மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன்றும்,
வைராகத் துறுதல்சதா சாரம்விசா ரணையே,

இ—ள்

சாற்ற அரிய சுபேட்சை விசாரணை தநுமாநசி — (உண்மையை சத்துக்களுணர் வரேயன்றி கீழ்மக்கள் அறிந்து) கூறற்கரிய, சுபேட்சையும், விசாரணையும், தநுமாநசியும்,

சத்துவா பத்திஅசம் சத்திபதார்த்தாபா வனைமேல்துரியகாமி — சத்துவாபத்தியும், அசம் சத்தியும் பதார்த்தா பாவனையும் மேலாகவுள்ள துரியகாமியும்

எனும் இவற்றினை முது அறிஞர் விளங்கு சத்த ஞான பூமிகை என்பர் — என்று கூறப்படுகின்ற இவ்வேழு ஞான பூமிகளை, வசிட்டர் முதலிய பேரறிவினையுடையார் (சீவன் முத்திவிதேக முத்தி சாதன மாக அதிகாரிகளிடத்தில்) விளங்குகின்ற ஞான பூமிகளென்று கூறுவர்.

அவற்றுள் தோற்றிடு நான் மூடன் ஆய் இருந்த காரணம் என் — அவ்வேழு ஞான பூமிகளுள் (மோட்சத்திற்கு உரித்தான மக்களில் ஒருவனாக) பிறந்திருக்கின்ற நான் (பிறந்தது முதல் இன்று வரையும் ஆத்மா அநாத்மா விசாரம் செய்யும்) அறிவில்லாதவனா யிருக்கின்ற காரணம் யாது அதனை

சுருதி குருவால் அறிவன் என நினைதல் சுபேட்சை — சுருதி வாக்கியத்தாலும் ஆசாரியர் உபதேசத்தாலும், இனி அறிய முயலுவேன் என்றெண்ணுவதே சுபேட்சையாம்

மாற்றரிய சுருதி குருவால் சிறிது தோன்றும் வைராகத்து உறுதல் — (கர்ம காண்ட சுருதியினாலும், பேதவாதிகளாலும்,) மாற்றுதற் கரிய வேதவாக்கியத்தாலும் சற்குருவினுபதேசத்தாலும் சிறிதுண்டாய (விவேக) வைராக்கிய பலத்தால் பொருந்துவதாகிய கேட்ட பொருளை

சதா சாரம் விசாரணை — பேதபாதக அபேத சாதக யுக்திகளால் சிந்தித்தலாகிய மனனமென்னும் சத்துக்களது சதாசாரப் பிரவிர்த்தியே விசாரணையாம்

வி — சுபேட்சை — சுபம் என்பது மோட்சம், இச்சை என்பது விருப்பம்,அதாவது நிஷ்காம கர்மோபசனைகள் செய்து அதனால் விவேக வைராக்கிய சட்சம்பத்தி முமுட்சுத்தமென்னும் நான்கு சாதனங்களுடைய அதிகாரி சற்குருவை அடைந்து மோட்சமடையவேண்டு மென்கிற தீவிரமான இச்சை.

விசாரணை—குருபணி விடையுடன், பிச்சை சௌவசம் முதலிய சன்னியாசி தர்ம பாலனத்தோடு கூடின சதாசாரமேயாம், கிரகஸ்த்தராகில், மானச சன்னியா

சத்துடன் குருசேவையும் சதாசாரமும் பழகுதலாம்'
பூமியென்பது மனோ நிலையேயாம். 143

144 மருவலுறு சுபேட்சைவிசா ரணைவலியால் விடய
வலியறுத றான்தநுமா நசியவற்றின் பயில்வால்
விரவுநந வாயவுல கினைக்கனவென் றெண்ணி
மெய்த்தவாந் மாவுண்மை கருதல்சத்வா பத்தி,
பரவலுறு முலகுதோன் றாதுசுழுத்தி யன்போற்
பகரறிவு மாத்திரையாய் நிற்றலசம் சத்தி
ஒருவிவா சனையனைத்து மிகுதுயில்வோன் போல
வுயிரானந்தத் தொடுங்கல் பதார்த்தபா வனையாம்

இ—ள்

| | | |
|---|---|---|
| மருவல் உறுசுபேட்சை விசாரணை வலியால் | — | நிஷ்காம கர்மோபாசனைகளால்) பொருந்துகின்ற, சுபேட்சை, விசாரணைகளின் அப்பியாச பலத்தால், |
| விடய வலிஅறுதல்தான் தநு மாநசி | — | விஷயங்களில் இழுப்பதாகிய பற்று (சித்தத்தில் சவிகற்ப சமாதி பரியந்தம் தொடர்ந்து வருகின்ற விஷயவாசனை, நீங்குவதே தநுமா நசியாம் (பின்னர்) சுபேட்சை முதலிய |
| அவற்றின் பயில்வால், விரவு ஆயநநவு உலகினை | — | அம்மூன்றனது அப்பியா சபலத்தால் (ஆத்மாநாத்மாவிவேகமில்லாதற்குச் சத்தியமாகப்) பொருந்தித் தோன்றுவதாய சாக்கிரப் பிரபஞ்சத்தினை, |
| கனவு என்று எண்ணி மெய்த்த ஆன்ம | — | சொப்பனம் பிரபஞ்சமென்று (மனத்தில்) நிச்சயம் செய்து எக்காலத்தும் சுபாவமாக இருக்கின்ற (பிரமாபின்ன பிரத்யக) ஆன்மாவின் |



| | | |
|---|---|---|
| உண்மை கருதல் சத்துவா பத்தி | — | ஆத்மாவின் உண்மை வடிவத்தை வெளி விஷயங்களின் சமஸ்கார நாசத்தால் மிக்க திட வைராக்கிய ரூபசத் வாசனையோடு கூடிய மனத்தால் தானாகச் சிந்தித்துணர் தலே சத்துவாபத்தியாகும் பின்னர் |
| பரவல் உறு உலகு தோன்றாது சுழுத்தி யன் போல் | — | (நாமரூபப் பிரபஞ்சமாக) விரிந்திருக்கின்ற உலகம் தோன்றுதலின்றி (அடங்கி) சுழுத்தியவஸ்தையுடையவன் போல (சத்துக்களால் கிடைத்தற்கரியதுஎன) கூறுகின்ற சுபேட்சை |
| பகர் அறிவு மாத்திரை ஆய் நிற்றல் அகம் சத்தி | — | முதலிய நான்கு பூமிகளின் அப்பியாசபலத்தால் நிரதிசயானந்த நித்தியாபரோட்ச சின்மாத்திர பிரமாத்திர மாக மனம் அழுந்தி அஞ்ஞானம் அதன் காரியமான பிரபஞ்ச மனைத்தையும் மறந்து நிலைபெற்றிருத்தலே அசம் சத்தியாம். பின்னர் |
| வாசனை அனைத்தும் ஒருவிமிகுதுயில் வோன்போல் உயிர் ஆனந்தத்து ஒடுங்கல் பதார்த்தாபாவனையாம் | — | சர்வ வாசனைகளும் நீங்கிப் போக ஐந்து பூமிகளின் அப்பியாச பலத்தால் காடநித்திரை செய்பவன்போலவாகிய ஆந்தரங்களாயுள்ள திரிபுடி ரூபமான பதார்த்தங்கள் அபாவமாகி மனம் அத்வைதானந்தத்தில் விலயமாவதே பதார்த்தா பாவனையாம். |

வி—தநுமாநசி—தநுவென்பது, சுருங்கல், சுருங்குதலாகிய தன்மையை மனமடைதல், அல்லது இராசோதமோ குணங்களடங்கிய அருபமனமாயிருத்தல் என்பதாம்.
சத்வாபத்தி — மனது பரமாத்மசத்து ரூபமாக மிஞ்சியிருத்தல் அசம்சத்தி — வாகிய ஆந்தர பதார்த்தங்களான விஷயங்களோடும் அவற்றின் சமஸ்காரங்களோடும் சம்பந்தமில்லாமையாம். சம்சத்தி சம்பந்தம் அசம்சத்தி அஃதின்மை.
பதார்த்தா பாவனை — வாகிய ஆந்தர பதார்த்தங்களின் அநுசந்தானம் இல்லாமையாம். ஆயின் தேகயாத்திரை எங்ஙன் கூடுமெனின் சிரகாலம் சீடர் பக்தர்களால் தேகயாத்திரை
கூடுமென்க காடநித்திரை—பெரும் தூக்கம் 144

145 உண்டிலையென்னா மலகங் கிருதிநிரகங் கிருதி
யுறாமலறி வுருவாயவ த்துவித பதத்திற்
கண்டதொரு வறுங்குடம் போலுட்புறஞ்சூனியமாங்
கதிதுரிய காமியா முபரதியை யடைந்து
கொண்டிலக லுறுதிரிசி யானுவித் தம்பின்-
கூறலுறு சத்தானு வித்தநிருவி கற்பம்
எண்டருசட் சமாதிகளாம் புறமொடக மென்னும்
இருபேத மடைந்தவற்றை முறையினிவண் மொழிவாம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| உண்டு இலை என்னாமல் அகங் கிருதியும் நிரகங் கிருதியும் உறாமல் | — | சத்து அசத்து என்று கூற முடியாமலும் நநவு, கநவுகளில் தேகத்தை நானென்று அபிமானித்தலும், சுழுத்திய வஸ்தையாதிகளில் அபிமானமற்றிருத்தலும் பொருந்தாமல் |
| அறிவுருவு ஆய அத்து வித பதத்தில் | — | சின்மாத்திர சொருபமாயிருக்கின்ற அத்வைதமாகிய பிரம்மானந்த பதத்தில் |



| | | |
|---|---|---|
| கண்டது ஒருவறுங்குடம் போல் | — | (புறத்தில்) கண்டதாகிய, அகத்தும் புறத்தும் நீரின்றிய ஒரு வெறுங்குடம் போல் |
| உள், புறம். சூனியம் ஆம், கதி துரியகாமி ஆம் | — | அகத்து (மநோவியாபாரமும்) புறத்தும் (இந்திரிய வியாபாரமின்றி சூனியமாய் தண்ணீரில் அமிழ்த்திய கடம்போல்) அத்வைதானந்த மாத்திரமாயிருக்கும் நிலமையே துரிய காமியாம். |

நான்காவது அவஸ்தையையே துரியகா வென்றும் துரியமென்றும் சொல்லப்படும். இந்த ஞானபூமிகள் ஏழினுள் முதல்மூன்று பூமிகள் தத்துவஞானத்திற்கு சாதனமும் நான்காவது பூமி தத்துவஞானவடிவமாயிருத்தலால் சீவன்முத்தி விதேகமுத்திக்ளுக்குச் சாதனமும், ஐந்தாறேழ் பூமிகள் சீவன் முத்தியின் விலட்சணானந்தற்கு சாதனமும் ஆம்

| | | |
|---|---|---|
| உபரதி அடைந்து கொண்டு | — | முற்கூறிய வாசனையுடன் மனோ நாசத்தையும் கைக் கொண்டு. |
| இலகல் உறுதிரிசி யாநு வேதம் | — | விளங்கா நின்ற, திரிசியாநு வித்த சவிகற்ப சமாதி யென்றும் (அதன்) |
| பின் கூறல் உறும் சத்தாநு வேதம் | — | பின்னர் கூறப்படுகின்ற சத்தாநு வித்த சவிகற்ப சமாதி என்றும் |
| நிருவி கற்பமும் புறமொடு அகமும் | — | நிருவிகற்ப சமாதியென்றும் (இம் மூன்றும் பாகியம் ஆந்தர மென்கின்ற |
| இரு பேதம் அடைந்து | — | இரண்டு வகையாக பேதமடைந்து (இருத்தல் பற்றி (அதிகாரிகள்) |

எண்தரு சட்சமாதி கள் ஆம் அவற்றை முறையின் இவண் மொழிவாம் — கருதும்படி இருக்கின்றது ஆறு சமாதிகளாம். அச் சமாதிகளை கிரமமாக இவ் விடத்துக் கூறுவோம் 145

146 கடாதிவிட யத்தினிலொன் றினைக்குறித்து நாம
கற்பனையோ டுருவமெனு மாயையதன் திறத்தைத்
தடாதுவிடுத் தத்தி பாதிப்பிரிய மென்னும்-
சச்சிதா னந்தமாம் பிரமத்தின் திறத்தை
விடாதநுசந் தானஞ்செய் திடுதலே புறத்து
மெய்த்திரிசி யாநுவித் தம்பெயர்கொள் கின்ற
கெடாததொரு சவிகற்ப சமாதியென லாகும்
கிளர்ந்தபுறச் சத்தாநு வித்தமது கிளப்பில்

இ—ள்

கடாதி விடயத் தினில் ஒன்றினைக் குறித்து — கடமுதலிய விஷயக் கூட்டத்துள் (யாதாவது) ஒரு விஷயத்தைக் குறித்து (எடுத்துக் கொண்டு)

நாம கற்பனையோடு உருவமும் எனும் மாயை அதன் திறத்தை தடாது விடுத்து — நாமத்தோடு ரூபமும் என்று கூறப்படுகின்ற, மாயையின் அம்சங்களிரண்டையும் (மித்தையென்றுணர்ந்ததை) தடையில்லாது நீக்கி (அதிலுள்ள)

அத்தி பாதி பிரியம் என்னும் சச்சித் ஆனந்தம் ஆம் பிரமத் தின் திறத்தை — இருப்பு விளக்கம் இன்ப மென்று கூறப்படுகின்ற சத்தும் சித்தும் ஆனந்தமும் ஆகிய பிரமத்தின் அம்சங்கள் மூன்றையும்

விடாது அநுசந் தானம் செய்தலே — இடை விடாது நெடுங்காலம் நிரந்தரம், நேசத்தோடு விசுவாசமாய் (நானென்று பாவித்து) அப்பியாசம்செய்தலே



மெய்ப் புறத்திரியாது— வேதப் பெயர் கொள்கின்ற — உண்மை ஞானத்தைக் கொடுக்கின்ற, பாகிய திரிசியாநுபவித்த சமாதி யென்னும் பெயரைக் கொண்டுள்ள

கெடாதது ஒரு சவிகற்ப சமாதி எனல் ஆகும் — திரிசிய நாட்ட முள்ளளவும் கெடாதிருக்கின்ற ஒப்பற்ற சவிகற்ப சமாதி யென்று கூறுதற்கு உரியதாகும்

கிளர்ந்த புறச் சத்தாநு வேதம் அது கிளப்பில் — முற்கூறிய பாகிய சத்தாநு வித்த சவி கற்பசமாதியியல் பினைக் கூறுமிடத்து (குறித்தல்- சுட்டியறிதல் வேதம்- வித்தமென்று கூறப்படும் 146

## 147 பாகிய சத்தாநு வித்த சவிகற்ப சமாதி

சச்சிதா னந்தவுரு வாகுவதே பிரமம்-
தானெனவே தியானித்தல் அதுவாகு மென்க,
இச்சமாதி கள்பயின்ற வலியினாற் றோன்றும்,
இரும்பிரமா னந்தநிலை தனின்மனஞ்சென் றொடுங்கி
நிச்சயமா யலையில்கடல் போலிருத்தல் புறத்து-
நிருவிகற்ப சமாதியா மநோகதகா மாதிக்,
கச்சமறு கரிதானென் றெண்ணுதலுட் டிரிசி-
யாநுவித் தப்பெயர்கொள்சவிகற்ப சமாதி,

(இ—ள்)

சச்சிதானந்த உருவு ஆகுவதே — (அகண்ட) சச்சிதானந்த (அத்வைத சொருப மாயிருப்பதே,

பிரம்மம் தான் எனவே, தியானித்தல் அது ஆகும் என்க — பிரம்மாம் (அதுவே) யானென்று பாவனை செய்வதே (மேற்கூறிய) அந்தச் சத்தாநுவித்த சவிகற்பசமாதியாம் என்று (அதனியல்பினை நீ) அறிவாயாக

| | |
|---|---|
| இச் சமாதிகள் பயின்ற விலியினால் | — இவ்விருவகைச் சமாதிகளையும் அப்பியாசம் செய்த பலத்தால் |
| தோன்றும் இரும், பிரமானந்த நிலை தனில் | — தோன்றிய (என்றும்) உள்ள பிரம்மானந்தத்தின் அநுபவத்தில் |
| மனம் சென்று ஒடுங்கி | — மனமானது (மெல்ல மெல்ல) சென்றடங்கி (விகற்பமெல்லா நீங்கி) |
| அலையில் கடல் போல் நிச்சலம் ஆய் | — நிஸ்த்தரங்க சமுத்திரம் போன்று சலனமில்லாமல், |
| இருத்தல் புறத்து நிருவிகற்ப சமாதி ஆம் | — இருப்பதே பாகிய நிருவிகற்ப சமாதியாம். |

## ஆந்தர திரிசியாநுவித்த சவிகற்பசமாதி

| | |
|---|---|
| மநோகத காமாதிக்கு அச்சம் அறு கரிதான் என்று | — மநத்திலுள்ள காமக்குரோத முதலிய சங்கற்ப வடிவ திரிசயங்களுக்கும் (அவித்தை முதலிய பஞ்ச கிலேசங்களுக்கும் பய மற்றுள்ள சாட்சி மாத்திரமாயிருக்கின்றே னென்று |
| எண்ணுதல் உள் திரிசியாநு வேத பெயர் கொள், சவிகற்பசமாதி | — பாவனை செய்வதே, ஆந்தரத் திரிசியாநுவித்த சமாதியென்னும் பெயரை கொண்டுள்ள சவிகற்ப சமாதியாம் |

147

## 148 ஆந்தரசத்தா நுவித்த சவிகற்ப சமாதி

சங்கமறு சச்சிதா னந்தவொளி யுருவம்-
தானெனச் சிந்திடலுட் சத்தாநு வித்தம்,



பொங்குறுதன் னநுபூதி ரசந்தோன்று மதனாற்-
புகன்றதிரி சியம்சத்த மெனுமிரண்டு மகன்றே
இங்கசைவி றீபமெனப் பந்தமற விருத்தல்-
இலங்குறுமுண் ணிருவிகற்ப சமாதியிவ்வா றானும்,
தங்கலுற வொழுகுமி யோகிக்குமன மெங்குச்
சரிக்குமாண் டாண்டெலாஞ் சமாதியென லாகும்

(இ—ள்)

| | |
|---|---|
| சங்கம் அறுசச் சிதானந்த ஒளி உருவம்தான் என | — கூட்டமின்றிய (அசங்க சத்து சித்து ஆனந்த (சுயம் பிரகாச அத்வைத) சொருப (பிரம்மமே) நானென்று பாவனை செய்வதே |
| சிந்தித்திடல் உள் சத்தாநு வேதம் | — ஆந்தர சத்தாநுவித்த சவிகற்ப சமாதியாம் |
| பொங்கு உறு தன் அநுபூதி ரதம் தோன்றும் அதனால் | — பூரணமாக விளங்குகின்ற சுவாநுபவ (ஆத்மாநுபவ) சுகாவேசம் உண்டாகும் அதனால் |
| புகன்ற திரிசியம் சத்தம் எனும் இரண்டும் அகன்று | — முற்கூறிய திரிசியா நுவித்தம், சத்தாநுவித்தம் என்னும் சவிகற்பசமாதிகள் இரண்டும் நீங்கிப்போக |
| இங்கு அசைவு இல் தீபம் என | — இவ்வுலகத்தில் (காற்றால்) அசைதலில்லாது (பிரகாசிக்கும்) தீபத்தைப் போல. |
| பந்தம் அற இருத்தல் | — (ஆபாசமாகத்) தோன்றும் உலக சிந்தனையென்னும், பந்தமற்று நிர்ச்சிந்தை யாயிருப்பதே |
| இலங்குறும் உள் நிருவிகற்ப சமாதி | — (திருஷ்ட துக்கமின்றி) விளங்குகின்ற ஆந்தர நிருவிகற்ப சமாதியாம் (விடா முயற்சியினால் தனக்கு கைவந்த) |

இவ் ஆறானும் தங்கல் உற ஒழுகும் — இந்த ஆறுவித சமாதி களினாலும் (மனம் பிரத்யக பின்ன பிரம்ம சொருபத்தில் நன்றாகப்) பொருந்தியிருக்கச் செய்கின்ற

யோகிக்கும் மனம் எங்கு சரிக்கும் — யோக புருஷனுக்கு (பேதத் தோற்றமின்மையால் அவன்) மனம் எங்கு சென்றதோ

ஆண்டு ஆண்டு எலாம் சமாதி எனல் ஆகும் — அங்கங்கெல்லாம் ஆனந்த வடிவமாகவே விளங்கும் சமாதியே யாமென்று கூறலாகும். (சுகாவேசம்— ஆனந்தப் பெருக்கு)

## 149 ஞானபல சதுஷ்டயம்

தக்கமா ஞானபல நான்குதுக்கா பாவம்
சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே,
தொக்கபிராப் தப்ராப் பியங்களென வவற்றுள்
சொல்லியதுக் காபாவ மிகபரத்தா விரண்டாம்
பொய்க்குமோர் தூலவுடம் பொழிவொழிநீ நாற்றம்
புகுபிணிகண் முதலனவுஞ் சூக்கமதே கத்து
மிக்ககா மதியுங்கா ரணத்தினிலவ் வாதி -
வியாதிகட்கு வித்தாம் வாசனையுமிகத் திடும்பை,
(இ—ள்)

தக்கமா ஞான பலம் — அதிகாரிக்கு தகுதியுள்ள பரிபூரண ஞானத்தின் பிரயோசனம்

துக்க அபாவம் சர்வ காமாப்தி கிருத கிருத் தியம் தொக்க பிராப் தப் பிராப்பியம் என — துக்க நிவர்த்தியும் சர்வானந்த த்தையும் அடைதலும் செய்ய வேண்டியதை அனைத்தும் செய்து முடித்ததாம் (பின் தொடர்ந்த அடைய வேண்டி தனைத்தும் அடைந்திருப்ப தாம் என்ற



நான்கு அவற்றுள் — நான்கு விதமாம் அந் நான்கினுள்

சொல்லிய துக்க அபாவம் — முன்னர் கூறிய துக்கமின்மை என்பது (விசார ஞானத்தால்)

பொய்க்கும் ஓர் தூல உடம்பு — பொய்த்தழியும் (இழிவால் தனக்கு பிறிதொன்று) ஒப்பற்ற தூல சரீரத்தில்

எழில் ஒழிவு தீ நாற்றம் புகு பிணிகள் முதலனவும் — அழகின்மை, குரூரத்துவம், துற்கந்தம், கபம், குன்மம், க்ஷயம், முதலிய தொடர்ந்து வருகின்ற வியாதிகள் முதலியனவும்

சூக்கும தேகத்து மிக்க காமாதியும் — சூட்சும சரீரத்தில் மிகுந்த காமக் குரோதாதி துற்குணங்களும்

காரணத்தில் அவ் ஆதி வியாதிகட்கு வித்தாம் வாசனையும் இகத்து இடும்பை — காரண சரிரத்தில் அந்த ஆதிவியாதிகளுக்கு காரண மாயுள்ள சமஸ்காரமும் (ஆகிய மூவகை துன்பங் களும்) இகலோக துக்கங்களாம்

(ஆதி வியாதிகட்கு காரணமான சமஸ்காரமும் துக்க சாதனமாயிருத்தல் பற்றி அதனையும் உபசாரமாக துக்கமென்று கூறப் பட்டதென்றுணர்க) 149

150 மித்தையெனும் மாயாகா ரியவுடம்பா திகளின்
வேறாய துரியஞா நத்தின்மே லாக,
வைத்தவொரு போக்கியபோத் திருக்களிலா மையினால்
வரஞானிக் கவ்விடும்பை மூன்றுமிலா திருத்தல்
பொய்த்தவிக லோகதுக்கா பாவமென லாகும்
புண்ணியம்வந் தென்றுபோம் பாவமென நின்ற
சித்தமுறு சிந்தனையே பரலோக துக்கந்
தெரியினெனப் புகன்றிடுவர் திருக்கறுநல் லறிஞர்

இ—ள்

மித்தை எனும் மாயா காரியம் — மித்யா சொருபமென்று கூறப்படுகின்ற மாயையின் காரியமான

உடம்பு ஆதிகளின் வேறு ஆய — தூல சரீர முதலியவற்றினும், விலட்சணமாயுள்ள, (அத்விதீய)

துரிய ஞானத்தின் மேலாக வைத்த ஒரு போக்கிய போத்திருக்கள் — பிரம்மஞானத்தின் பின்னர் (பாரமார்த்திக சத்தியம்) ஆக (அநுபவிக்கும்படி'வைத்துள்ள ஓர் போக்கியங்களும் போக்தாக்களும் (போகங்களும்)

வர ஞானிக்கு இலாமையால் — மூவுலகத்திலும் அரிதாய் விளங்குகின்ற ஞானிக்கு இல்லாமையால்

அவ் விடும்பை மூன்றும் — ஆதி வியாதி வாசனையென்னும் அம் மூவித துக்கமும்

இலாது இருத்தல் பொய்த்த இகலோக துக்க அபாவம் எனல் ஆகும் — அவனுக்கு இல்லாமலிருப்பதே மித்தையாயுள்ள இகலோக துக்கா பாவமென்று கூறப்படுவதாம்

புண்ணியம் என்று வந்து உறும் பாவம் என்று போம் — புண்ணிய கர்மம் எப்போது வந்து பொருந்துமோ பாவ கர்மம் எப்போது நீங்குமோ

என நின்ற சித்தம் உறு சிந்தனையே — என்று நிலைபெற்றிருக்கின்ற மனதின்கண் பொருந்திய சிந்தனையே

திருக்கு அறு நல் அறிஞர் தெரியின் பரலோக துக்கம் எனப் புகன்றிடுவர் — விபரீத புத்தியொழிந்த பேரறிவுடையார் ஆராயுமிடத்து பரலோக துக்கா பாவமென்று (அதனைக்) கூறுவர்



நமக்குப் பாவம் புண்ணியம் இரண்டும், நரகசொர்க்க சாதனமென்று கேள்வியுற்றவன், அப்பாவம் நீங்கிப் புண்ணியம் பொருந்தவில்லையே என்று சிந்திக்கின்ற சிந்தனையும் துக்க சாதனமாதல் பற்றி உபசார வழக்கால் அதுவும் துக்கமெனக் கூறப்பட்டது. 150

151 ஞானநிலை யடைதலுந்தா மரையிலை நீர் போல
ஞானியிரு வினையுமுறா மையினாலி ந்தநத்திற்
றீநணுகு மழலில்விர கிலாதது போற்கருமச்
செயலிலவனா மவனிலஃ திராமை யினான்,
மானழலுண் வநத்திலுறாதது போல ஞான-
மயனைவினை யாவுமுறா மையினாலச் சிந்தை
தானவனி லெழாதிருத்த றனையுரைப்பர் மேலோர்
தக்கபர லோகதுக்கா பாவமென வன்றே.

இ—ள்

ஞான நிலை அடைதலும் — (ஐயந்திரிபின்றி சீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்தின் நிலைப் பேறடைந்தவுடன்

தாமரை இலை நீர் போல் ஞானி இரு வினையும் உறாமையினால் — தாமரை இலையினிடத்தில் தண்ணீர் பற்றாதது போல, ஞானிபுருஷனிடத்து (அறம் பாவம் என்னும்) இரு வினைகள் பற்றாமையாலும்

இந்தனத்தில் தீ நணுகும் அழலில் விறகு இறாது — விறகினிடத்து அக்கினி இருப்பதாம் அந்த் அக்கினியில் விறகு இருப்பதில்லையாம்;

அதுபோல் கருமச் செயலில் அவன் ஆம் அவனில் அஃது இராமையினால் — அது போல (கருமத்தால் வந்த அவ்விரு) கரும விவகாரத்தில் அந்த ஞானி (விவகரித்தும்) இருப்பவனாம், அந்த ஞானியினிடத்து அந்த ஆகாமிய கர்மங்கள் (பிரமஜ்ஞாதான் மியச் சம்பந்தமின்றி தால் பற்றி) இராமையினாலும்

| | |
|---|---|
| மான் அழல் உண்வ — நத்தை உறாது அது போல | மான் முதலிய மிருகங்கள், அக்கினிபற்றியுள்ள கானகத்தில் பொருந்துவதில்லையாம் அதுபோல |
| ஞானமயனை வினை — யாவும் உறாமை யினால் | ஞானாக்கினி சொருபமாயுள்ள ஞானியை கருமமனைத்தும் பொருந்தாமையாலும்(புண்ணியம் எப்போது வரும், பாவம் எப்போது போகும் என்னும்) |
| அச்சிந்தை தான் அவனில் எழாது இருத்தல் தனை | அச்சிந்தனையானது அந்த ஞானியினிடத்து (மறந்தும் அந்நினைவு) தோன்றாதிருப்பதை |
| மேலோர் தக்க — பரலோக துக்கா பாவம் என உரைப்பர் | செய்யத்தக்கதைச் செய்யும் பெரியோர்கள் பரலோக துக்கா பாவமென்று கூறுவார்கள் (எரியும் வனத்தில் மான் முதலியன என்பதனால் இனம் பற்றி பறவையாதிகளும் செல்லாதென்க |

(தாமரை இலை நீர் பற்றாமை போலும், நெருப்பில் விறகில்லாமை போலும், கொழுந்து விட்டெரியும் கானகத்தில், மிருகம் முதலியனசேராமை போலும். கர்மத்திற்கு இருப்பிடமாகிய ஆவரண விசிட்டஞ் ஞானத்திலிருந்து பிரமஜ தாதான்மிய சம்பந்தம் விடுபட்டால் கருமங்களனைத்து பொருந்துவதில்லையாம். அதனால் ஞானியானவன் கர்மசிந்தனையின்றியவனாயிருக்கின்றான் அங்ஙனம் இருத்தலே ஞானிக்குப் பரலோகதுக்காபாவம், துக்கமில்லாமை யென்றறியத் தக்கதாம். 151

## 152 சர்வ காமாப்தி

எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌ மாதி,
இரணியகர்ப் பாந்தமாய் மேன்மேல் வேண்டுற்ற,
நல்லானந் தங்கங்களெலாம் பற்றிலா வறிஞன்



நணுகுதலான் ஞானங்கொண்டறி சிவத்தின் கூறாய்த்
தொல்லாநந் தங்களெல்லா நிற்கையி னாலவற்குத்
தோமில கண்டாநந் தச்சித்திதோன் றுதலே
பொல்லாத வினைப்பகையை கடந்த பெருத்தவர்கள்
புகன்றிடுவர் சர்வகாமாப் தியென வன்றே

(இ—ள்)

| | |
|---|---|
| எல்லா வாழ் — வினையும் உறும் சார்வ பௌமாதி | அழகு இளமை ரோகமின்மை திடசித்தம் என்பவற்றை யுடையவனாய் சதுரங்க சேனைகளுடன் பூமண்டல முழுதும் ஆகிய ஐஸ்வரியத்தை அடைந்திருக்கின்ற சார்வ பௌமன் முதல் |
| இரணிய கற் — பாந்தம் ஆய் மேல் மேல் | இரணிய கர்பனீறாக (உள்ளவர்)உத்தரோத்தரமாக (முறையே ஒன்றற்கொன்று ஒரு நூறு மடங்கு அதிகமாக) |
| வேண்டுற்ற — நல்லானந்தங்கள் எல்லாம் | விரும்பிப் பெற்றிருக்கின்ற சிறந்த ஆனந்தங்களனைத்தும் (யானெனதென்னும் அபிமான வடிவச் |
| பற்று இல்லா அறி — ஞன் நணுகுதலால் ஞானம் கொண்டு அறிசிவத்தின் கூறாய் | செறுக்கில்லாத விவேகி புருஷன் அடைந்திருப்பதாலும் (அகம்பிரம்மாஸ்மியென்னும் தத்துவ) ஞானத்தால் அறிதற்குறிய பிரம்மத்தின் அம்சங்களாய் |
| தொல்லானந்தங்கள்— எல்லாம் நிற்கை யினால் | கூறிய பழமையான ஆனந்தங்களனைத்தும் இருப்பதாலும் |

| | | |
|---|---|---|
| அவற்கு தோம் இல் அகண்டானந்த சித்தி தோன்றுதலே | — | அவ்விவேக புருஷனாகிய ஞானிக்கு குற்றமில்லாத அகண்டானந்த வடிவமாக விளங்கும் ஐஸ்வரியம் உண்டாதலே |
| பொல்லாத வினைப் பகையைக் கடந்த பெரும் தவத்தோர் | — | கொடிதாய கர்மசத்துருவை வென்ற பெரும் தவத்தை யுடையவர்கள் |
| சர்வகாமாப்தி என புகன்றிடுவர் | — | சர்வகாமாப்தியென்று கூறுவார் கள் அந்தச் சார்வ பௌமன் முதல் இரணியகர் பனீறாக உள்ளவர்கள் பதினொருவர் ஆவர் |

1 சார்வ பௌமன் 2 மனுடகந்தருபன் (இச் சிருஷ்டியில் மனிதனாயிருந்து புண்ணியத்தால் கந்தருவ பதவியை அடைந்தவன்) 3 தேவ கந்தருபன் (முற்சிருஷ்டியில் செய்த புண்ணியத்தால் இக் கர்பத்தினாதியிலேயே கந்தருப பதவியை அடைந்தவன்) 4 பிதிரர் தமதுலகின்கண் வசிக்கின்ற அக்கிநிஸ்வாத்த முதலியோர் 5 ஆஜான தேவர் (கற்பத்தினாதிலேயே தேவத்தன்மையை அடைந்த வர்கள்) 6 கருமத்தேவர் (இக்கற்பத்தில் அசுவமேதாதி கர்மங்களைச் செய்து பெரும்தவத்தை அடைந்து ஆஜான தேவர்களால் பூஜிக்கப்பட்டவர்கள்) 7 முக்கிய தேவர்கள் (அஷ்ட வசுக்கள் துவாத சாதித்தியர் ஏகாதசருத்திரர் என்னும் இம் முப்பத்தொருவரும் முக்கிய தேவராவர்) 8 இந்திரர் (தேவராஜா) 9 பிரகஸ்பதி (தேவகுரு) 10 பிரஜாபதி (விராட்புருஷன்) 11 இரணிய கர்ப்பன் (சூட்சம சரீராபிமானி இவரே பிரம்தேவர்) ஆவர் இவர்களது ஆனந்தம் முறையே நூறு நூறுமடங்கு அதிக மாயிருப்பதாம் சர்வ காப்தி—சர்வ காம அப்தி எனப் பிரிபடும். அதன் பொருள் சர்வானந்தத்தையு



ஞானியானவன் ஆனந்தாகாரமானதன் புத்திக்கு சாட்சி யாக அல்லது அதிஷ்டானமாகிய பிம்பரூபமாக இருந்து அடைவனென்பதாம். (152)

## 153 கிருத கிருத்தியம்

தத்துவ ஞானத்திற்கு முன்னமிங் கடையத்-
தக்கவிட்டம் பெறவனிட்ட வொழிவிற்கு வேண்டி,
வைத்தவுழ வாதிகளுந் துறக்கமுதல் பெறற்கு.
மகமுதலா யினவுமுத்தி சாதனமா ஞான,
சித்தியுற மிருசவணா திகமு மறிஞர்க்குக்,
செய்வனவாந் தத்துவஞா னத்தின்பின் குடும்பப்
புத்தியொடு பலபோகத் திச்சையிலா மையினால்-
புகன்றவுழ வாதிதொழில் யாவுமிலை யாமால்,

(இ—ள்)

| | | |
|---|---|---|
| தத்துவ ஞானத் திற்கு முன்னம் இங்கு அடையத் தக்க | — | தத்துவஞான முண்டாவதற்கு முன்னர் இவ்வுலகத்தில் (தாம்) அடைவதற்குத் தகுதியாயுள்ள |
| இட்டம் பெற அநிட்டம் ஒழி விற்கும் | — | இஷ்டமான பொருள்களை பெறுவதற்கும் அநிஷ்டமான பொருள்களின் நீக்கத்திற்கும் (ஏதுவாக) |
| வேண்டி வைத்த உழவு ஆதிகளும் | — | விரும்பி (நியமமாகக் கற்பித்து) வைத்திருக்கின்ற. உழவு தொழவு, வரைவு, வாணிபம், சிற்பம் வித்தை என்பனவாம். |
| துறக்கம் முதல் பெறற்கு | — | சுவர்க்கம் முதலிய புண்ணிய லோகங்களை அடைவதன் பொருட்டு |
| மகம் முதல் ஆயினவும் | — | யாகம் உபாசனை தவம் சீலம் விரதங்கள் முதலாயினவும் |

| | |
|---|---|
| முத்தி சாதனம் ஆம்ஞானசித்தி உற மிருசவணாதிகமும் அறிஞர்க்கு செய்வன ஆம் — | மோட்ச சாதனமயுள்ள ஞான சித்தியைப் பெறுவதற்கு மேன் மைமிக்க சிரவணம், மநநம், நிதித்தியாசனமும், விவேகி கட்கு செய்தற்கு உரியனவாம் |
| தத்துவ ஞானத்தின் — பின் குடும்பபுத்தி ஒடு | தத்துவஞான முண்டானதற்கு பின்னர் (யான் குடும்பவான் என்னும்) சம்சாரபுத்தியுடன்ப் (இகலோக) |
| பல போகத்து — இச்சை இல்லாமை யினால் | பிரயோஜனமான சுக முதலிய வற்றில் ஆசையில்லாத படினாலே |
| புகல் உழவு ஆதி — தெழில் யாவும் இலெ ஆம் | முற்கூறிய உழவு முதலிய தொழில் அனைத்தும் இல்லையென்பதாம் |

## 154 கிருத கிருத்தியம்

வந்துசிறு சாளரத்திற் றோன்றுபர மாணு
வான்கதிரின் மிகுமொளியிற் றோன்றிடா வாபோ
னந்தலுறு சிற்றறிஞன் விடயமாம் கருமம்
ஞானியிடைத் தோன்றாமை யாலியற்றத் தக்க
முந்துமக முதலனவிங் கிலைபிரமா னந்த—
முதலுண்மை யெய்தலாற் சவணாதி யெல்லாஞ்,
சிந்தையுற, வியற்றுமள வாகுமதா லிதுவே
செப்பியவக் கிருதகிருத் தியத்துவமென் றறியே

(இ—ள்)

| | |
|---|---|
| சிறு சாரளத்தில — வந்து தோன்று பரமாணு | (ஒரு வீட்டின்) சிறிய சன்னலின் (வெளியே யிருந்து) வந்து (ஆண்டுள்ள சூரிய கிரணத்திலே) தோன்று கின்ற பரமாணுக்கள் வெளியேயுள்ள) |



| | |
|---|---|
| வான் கதிரின் — மிகும் ஒளியின் | மேன்மை பொருந்திய சூரியனது மிகுந்த பிரகாசத்தினாலே |
| தோன்றிடாதவாறு — போல் | தோன்றாத தன்மை போல் |
| நந்தல் உறு சிற்று — அறிஞன் விடயம் ஆம் கருமம் | (தத்துவஞானத்தால்) கெடுதற்குரிய (அஞ்ஞானி யாகிய) சிற்றறிவினனிடத்து, தோன்றுவதான கருமமானது |
| ஞானி இடைத் — தோன்றாமையால் | ஞானியினிடத்து (யதார்த்த மாகத் தோன்றாமையால் (அவன்) |
| இயற்றத்தக்கமுந்து — மகம் முதலன இங்கு இல்லை | செய்யத்தக்க முதன்மையா யுள்ள யாக முதலியன இவ் வுலகத்திலில்லையாம் |
| பிரம்மானந்த முதல் — உண்மை எய்தலால் | பிரமானந்த சொரூபத்தின் யதார்த்த சாட்சாத் காரத்தை அடைந்திருத்தலால் |
| சவணாதி எல்லாம் — சிந்தை உற இயற்றி அவை ஆகும் | சிரவண முதலியன அனைத்தும் (அவனால்) மனத்தின்கண் பொருந்தசெய்யப்பட்டனவே யாம் |
| அதால் இதுவே — செப்பிய கிருதகிருத் தியம் என்று அறி | அதனால் (ஞானி பிரம்மானந்த சொரூபத்தை சுபாவமாய் அடைந்திருத்த லாகிய) இதுவே முற்கூறிய செய்தற்குரிய செயலனைத்தும் செய்து முடித்ததாம் என்று நீ அறியக்கடவாய், (திரியணுவை பரமாணு என்றதாம் |

154

## 155 (பிராப்தப் பிராப்பியம்)

முற்றலுறு விசிட்டபுண் ணியபரிபா கந்தான்-
முத்திவிருப் பரியகுரு வழிபாடு பெருநூல்,
வெற்றிதரு சவணாதி யறிவறியா மைகளின்
விவேகமிகு மஞ்ஞான வழிவொடுதன் னுண்மை
பெற்றசமு சாரதுக்க நிவர்த்திநிசா னந்தப்
பேறெய்தலே பிராப் தப்பிராப் பியமாம்
பற்றுமுயர் முத்திவகை யிரண்டாகு மவைதாம்
பகர்சீவன் முத்தியொடு விதேககை வல்யம்

இ—ள்

முற்றல் உறு விசிட்ட புண்ணிய பரிபாகம் தான் — முடிந்திருக்கின்ற (உயர்வு தாழ்வான அனந்த சென்மங்களுக்கு காரணமான பாவ புண்ணியத்தோடு) கூடிய தன்கண் (நிஷ்காம) புண்ணிய கருமத்தின் பரிபாகமும் (அதனால்)

முத்தி விருப்பு — மோட்சத்தில் இச்சையும் (அதனால்

அரிய குருவழி பாடும் — பெறுதற்கரிய சற்குருபாத சேவையும்,

பெரு நூல் வெற்றி தரு சவணாதி — (அதனால்) வேதாந்த சாஸ்திரத்தின் (அஞ்ஞானத்தை நாசமாக்குதலென்னும்) வெற்றியைத் தருகின்ற சிரவண மநநநிதித்தியாசனமும் (அதனால்)

அறிவு அறியாமைகளின் விவேகம் மிகும் அஞ்ஞான — ஆத்மாநாத்மாக்களின் விவேகமும் (அதனால் செய்யத் தகாததையும் செய்யும்



அழிவு ஒரு — சாமர்த்தியம்) மிகுந்த அஞ்ஞானத்தின் நாசமும் (அதனால்) ஒப்பற்ற

தன் உண்மை — ஆத்ம சாட்சாத்காரமும் உற்ற

பெற்ற சமுசார துக்க நிவர்த்தி — (அதனால்) பிறப் பிறப்பாகிய துன்ப நீக்கமும் (அதனால்)

நிசானந்தப்பேறு எய்தலே பிராப்தப் பிராப்பியம் ஆம் — முக்கிய நிசானந்தப் பிராப்பியமும்(ஆகிய இவற்றை முறையே) அடைதலே பிராப்தப் பிராப்யத்துவமாம், பிறப்புக்கு பயந்தவர்கள்)

பற்றும் உயர் முத்தி வகை இரண்டு ஆகும் — பற்றுதற்குரிக (எவற்றினும்) உயர்வாயுள்ள மோட்சத்தின் வகை இரண்டாகும்

அவைதாம் பகர் சீவன் முத்தி ஒடு விதேககை வில்லியம் — அவைதான் (ஞானிகள் சிறப்பித்துக்) கூறுகின்ற சீவன் முத்தியுடன் விதேக முத்தியும் ஆகும். 155

## 156 சீவன் முத்தி

அறிவுடையார்க் ககமாந்மா வொடுவருசம் பந்தம்
அகறலினாற் பிறருடல்போற் றம்முடலந் தனிலும்
உறுதிதரு மபிமான மின்மையே யாகி
யுண்ணுமநு பவவொப்பால் வருபிரா ரத்த
வறுநுகர்வுண் டாஞ்சுழுத்தி யின்வலியே போல-
மந்தாநு சந்தான மாதலிற்றே காதி,
செறியபிமா நங்கழன்றுங் கடமுதித்துஞ் சுழலுந்
திகிரிபோல் வாதனையா லுறல்சீவன் முத்தி.

(இ—ள்)

அறி உடையோக்கு அகம் ஆந்மா ஒடு வருசம்பந்தம் அக — ஞானிகளுக்கு அகங்காரத் திற்கும் ஆந்மாவிற்கும் (அநாதியாக) வந்துள்ள (தாதான்

| | |
|---|---|
| றலினால் | மிய அத்தியாச) சம்பந்தம் (இருதய கிரந்தி நீங்கியொழிந் தமையின்) அவர் அமுக்கியா கங்காரத்தால் சர்வ விவகாரங் களிலும்) |
| பிறர் உடல் போல் — தம் உடலம் தனிலும் | அன்னியரது சரீரத்தைப் போல தம்முடைய சரீரத்திலும், |
| உறுதி தரும் அபி — மானம் இன்மையே ஆகி | சொப்பனத்தின்றும் விழித் தவன் உரைப்பது போல், சிதாபாசனால் விவகரிப் பனேயல்லாமல்) முக்கிய கங்காரத்தால்) திட (ராகத் தைத்) தருகின்ற (யானென தென்னும்) அபிமானமில்லாத வராயிருப்பர். |
| உண்ணும் அநுபவ — ஒப்பால் | (அஞ்ஞானிகளைப் போல சுகதுக்கங்களை அநுபவிக் கின்ற அநுபவத்தின் ஒப்புவமையால் அவர்கட்கு. |
| வருபிராரத் தவறு — நுகர்வு உண்டாம் | (அநாதியாகத் தொடர்ந்து) வருகின்ற பிராரத்த கருமத்தின் பயனாய சுகதுக்க வடிவ மித்தியாநுபவம் உண்டாகும் |
| புழுத்தியின் வலியே— போல | நித்திரையான் என்றும் விழித்தயுடன் வாசனானந் தத்தில் மயங்கிய சித்தமுதைய பாலர் முதலியோர் போல. |
| மந்தானு சந்தானம் — ஆதலின் | தோஷ திருஷ்டிவயத்தால் விஷயப் பிரவிருத்தி மிகக் குறைவாய் அனுபவிப்பார்கள் ஆதலின் (அகங்காரக்) கிரந்தி |
| தேகாதி செறி — அபிமானம் கழன்று | விடுபட்ட அவர்களுக்கு) தேகேந்திரிய முதலியவற்றில் |



| | |
|---|---|
| | (அநாதியாக) பொருந்தியுள்ள (யானெனதென்னும்) அபிமானம் நீங்கியும் |
| கடம் உதித்தும் — சுழலும் திகிரிபோல் | கடமுண்டான பின்னும் சுழல்கின்ற (குயவன்) சக்கிரம் போல |
| வாதனையால் உறல் — சீவன் முத்தி | (பிராரத்த கரும) வாசனையின் பலத்தால் (உலகத்தில்) சஞ்சரிப்பதே சீவன் முத்தி யாம் |

(வி—தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக் கொண்டிருக்க பிரம சொருபமாய் நிலைத்திருத்தல் சீவன் முத்தியாம். அதாவது யானெனதென்னும் சீவத்து வம்விட்டிருத் தலாம்.

அகங்காரமே ஆத்மாவென்னும் விபரீதபுத்தியாம் இஃது அகங்கரகிரந்தியாம்
சம்சய கிரந்தி—ஆத்மா ஏகமா அநேகமா சித்தாசடமா என்பன முதலிய ஐயங் கொண்டிருத்தலாம்
கருமக் கிரந்தி—ஆத்மா சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமியம் என்னும் கருமங்களையுடையது என்பதாம் 156
கிரந்தி முடிச்சு

## 157 விதேக முத்தி

பரமமா ஞானந் தோன்றுதலுமே கதிர்முன்
பாயிருள்போ லஞ்ஞானத் துடன்தன் காரியமாம்
புரமுதலா யினவனைத்தும் அகன்றிடுத றானே.
புகலரிய விதேககை வல்லியமென் றிசைப்பர்
உரமுறுமிங் கிதுவாகச் சீவன்முத்தி யுளதென்
றுரைப்ப தெவ்வாறெனிற் கயிற்றினரவமயக்
கொழிந்தும்

வருமதன்கா ரியமாகும் பயகம்ப மாதி-
மருவுதல்போல் ஞானத்தால் அஞ்ஞானங் கெடினும்

| | |
|---|---|
| பரம ஞனாம் — தோன்றுதலும் | ஞானிக்குச் சித்தவிஸ் ராந்திக்கு மிக) உயர்ந்த |

| | |
|---|---|
| | தாயுள்ள (சீவப் பிரம்ம ஐக்கிய ஞானம் உதயமான மாத்திரத்தில் |
| கதிர் முன்பாய் இருள் போல் — | சூரியோதயத்தின் முன்னர் பரவியிருக்கின்ற இருள் நீங்குவது போல, |
| அஞ்ஞானத்துடன் அதன் காரியம் ஆம் — | அஞ்ஞானத்துடன் அதனுடைய காரியமாயுள்ள |
| புரம் முதலிய அனைத்தும் — | சரீர முதலியனவாகவுள்ள பொருளனைத்தும் (விழித்தவுடன் சொப்பனம் போல) |
| அகன்றிமுதல் தானே புகல் அரிய விதேக கைவலலியம் என்று இசைப்பர். — | நீக்குதலே (மனத்தால் நினைக்கவும் வாக்கால் கூறவும் அரிய விதேகமுத்தி என்று மேலோர் கூறுவர். |
| இங்கு உரம் உறும் இது ஆக — | இவ்வுலகத்தில் ஞானத்தால் அடைதற்குறிய இவ்விதேக முத்தி யென்பது ஒன்று உண்டாகட்டும் இதற்கிடையில் |
| சீவன் முத்தி உளது என்று உரைப்பது எவ்வாறு என்னில் — | சீவன் முத்தி என்பதொன்றிருக்கின்றதென்று கூறுவது எவ்வாறு பொருந்தும் என்றால் அறியாமையினால். |
| கயிற்றின் அரவம் மயக்கம் ஒழிந்தும் — | ரட்சுசர்ப்பப் பிராந்தி நீங்கினாலும் (இது கயிறென்று அறியாமையால் |
| வரும் அதன் காரியம் ஆகும், பயகம் பாதி, மருவுதல் போல் — | வருகின்ற அந்த ரட்சு சர்ப்ப பிராந்தியின் காரியமாயுள்ள, பயம், நடுக்கம் முதலியன அற்பகாலம் பொருந்தி இருப்பது போல |



| | |
|---|---|
| ஞானத்தால் அஞ்ஞானம் கெடினும் — | தத்துவ ஞானத்தால் ஆவரண விசிட்ட அஞ்ஞானம் நாசமானதும் (இது குளகம்) 157 |

158 அதனதுகா ரியமாகு முடம்பாதி நிற்கும்,
அதனாலும் பிரமஞா நந்தோன்றும் பொழுதே,
சிதைதருமஞ் ஞானமுடன் உடம்பொழியு மாயிற்
றிகழ்பிரம வித்தியா சம்பிரதா யந்தான்,
கதியொழியு மதனாலும் பரசிவனாற் பிரமன்-
கமலனாறுயர் பிரசாபதிய வனான் மநுவாம்,
புதமநுவான் மநுடருணர்ந் தனரெனவே முறைமை
புகல்சுருதி விரோதமா மதானனு மன்றே

(இ-ள்)

| | |
|---|---|
| அதனது காரியம் ஆகும் உடம்பு ஆதி நிற்கும் அதனால் — | அவ்வஞ்ஞானத்தின் காரியமான சரீரம் இந்திரியம் மன முதலியன (பிராரத்த கர்ம வலியால்) தோற்றமாத்திரமாக நிற்கின்ற அக்காரணத்தினாலும் |
| பிரம ஞானம் தோன்றும் பொழுதே — | (அகம் பிரம்மாஸ்மியென்னும்) பிரம்ம ஞானம் உண்டான காலத்திலேயே |
| சிதைதரும் அஞ்ஞானம் உடன் உடம்பு ஒழியும் ஆயின் — | கெடுகின்ற அஞ்ஞானத்தோடு (அதன் காரியமான) சரீரம் மித்தையாகத் தோன்றுதலுமின்றிக் கெடுமானால் |
| திகழ் பிரம வித்தியாசம் பிரதாயத்தின் கதி ஒழியும் அதனாலும் — | அதிகாரிகளுள்ளத்தில் விளங்குகின்ற பிரம்ம வித்தியாசம் பிரதாயத்தின் கிரமம் கெடும் அக்கராணத்தினாலும் |
| பரசிவனால் பிரமன் கமலனால் உயர் பிரசா பதி — | பரமசிவனால், பிரம்ம தேவனும், (ஆயிரத்தெட்டு இதழ்களோடு கூடிய) |

| | | |
|---|---|---|
| | | தாமரை மலர்மேல் விற்றிருக்கின்ற பிரம தேவனால், மேலான பிரசாபதியும் |
| அவனால் மநுவு ஆம் | — | அப்பிரஜா பதினால் மநுவும் |
| புதமநுவால் மநுடர் உணர்ந்தனர் என முறைமை | — | விவேக ஞானமுடைய மநுவினால் இட்சுவாகு முதலிய மனிதரும், பிரம்மத்தை அறிந்தனர் என்று (பிரம்மவித்தியாசம் பிரதாயத்தின் கிரம்மத்தைக்) |
| புகல் சுருதி விரோதம் ஆம் அதனாலும் | — | கூறுகின்ற (சாந்தோக்கியம், பிரகதாரண்ய முதலிய சுருதிகளுக்கு முரணாம் அக் காரணத்தினாலும், (இது குளகம்) 158 |

## 159 இதுவும் அது

செஞ்ஞானிக் குரித்தாகும் சீவன் முத்தி-
சித்திதற் குற்றபிரா ரத்தவா தனையோ,
டஞ்ஞான லேசசற் பாவவுடம் பாட்டால்
ஆகநிலையு ஞ்சீவர்க் குபதேசா திகமும்
எஞ்ஞான்றுங் கிடைத்திடுமா லச்சீவன் முத்தற்
கிரிதருஞ்சஞ் சிதமங்கி புகுமுளிபுற் போல
மெஞ்ஞானத் தாற்பிரா ரத்தநுகர்ந் தொழியும்
மேல்வினைகூ டாதந திகாரியா தலினால்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| செஞ்ஞானிக்கு உரித்து ஆகும் | — | பிரம்மஞானிக்கு (அவன் பெறுதற்கு உரியதாயுள்ள |
| நல் சீவன் முத்தி சித்தித்தற்கு | — | சிறந்த சீவன் முத்தி சித்தற் பொருட்டு |
| உற்ற பிராரத்த வாதனை யோடு | — | பொருந்தியிருக்கின்ற பிராரத்த வாசனையுடன் |



| | | |
|---|---|---|
| அஞ்ஞான லேச சற்பாவம் | — | விட்சேப விசிட்ட அஞ் ஞானத்தின் அம்சம் இருப்புத் தன்மை |
| உடன் பாட்டால் ஆக நிலையும் சீடர்க்கு டபதே சாதிகமும் | — | அங்கிகரித் திருப்பதாலும் தேகத்தினிருப்பு சீடர் முதலியோர்க்கு உபதேச முதலியவற்றைச் செய்தலும் |
| எஞ்ஞான்றும் கிடைத்திடும் | — | எக்காலத்தும் (சீவன் முத்தனாய் இருக்கும் வரை) சித்திப் பனவாம், ஆதலின் சீவன்முத்தியும் உடன் பாடென்பதாம், |

## ஞானப்பிரபாவம் கர்மவிசாரம்

| | | |
|---|---|---|
| அச்சீவன் முத்தற் குச் சஞ்சிதம் | — | அந்தச் சீவன் முத்தனுக்கு சஞ்சித கர்மங்கள் |
| மெய் ஞானத்தால் அங்கிடுகும் முளி புல் போல் இரிதரும் | — | தத்துவஞானத்தினால் அக்கினியிற் சேர்ந்த உலர்ந்த புல்லைப் போல் கெடுவதாம் |
| பிராரத்தம் நுகர்ந்து ஒழியும் | — | பிராரதத்தின் (பயனாகிய சுகதுக்கங்களை அவன்) அநுபவித்துக் கெடுவதாம். |
| மேல்வினை அநதி காரி ஆதலின் கூடாது | — | ஆகாமிய கர்மம் (யான் கர்த்தா போக்தா வென்னும் பிராந்தியின்றி யவனாயிருக்கின்றான் ஆதலின் கர்மம் செய்ய) அதிகாரமின்மையால் (அவனுக்குச்) சம்பவியாது. |

வி—இந்தமது ஞானத்தைச் சாட்சாத் பிரம்மன் பிரஜாபதிக்கு கூறினார், அவர் மநுவுக்குக் கூறினார்

அவர் இட்சுவாகுக்குக் கூறினார். அவன் தன் புத்திரர் முதலியோர்க்கு கூறினார். இந்த வித்தையை ஒருவன் தன் ஜேஷ்ட புத்திதனுக்கு உபதேசிக்க வேண்டும்' மற்றவர்க்கு உபதேசிக்கக் கூடாது என்று சாந்தோக்கிய உபநிஷத்து மூன்றாவது பிர பாடகத்தில் கூறுகின்றது; தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியும், தத்துவஞான சம்ஸ்காரத்தால் அஞ்ஞானத்தின் விட்சேப சத்தியென்னும் அவித்தியா லேசமும் கெடுகின்றனவென்று சாஸ்திரவுடன்பாடாம்

ஞானிக்கு யான் அசங்கன் அகர்த்தா. அபோக்தா, என்னும் நிச்சயத்தின் வலியால், ஆகாமிய கர்மங்களின் பரிசமும் உண்டாவதில்லை. ஆனால் அவற்றின் பயன் பிரியன் துவேஷி யென்னும் புருஷர்களுக்கு போக மாகின்றது என்னும் பஞ்சதசி கைவல்ய நவநீதம் முத லிய நூல்கள் கூறுகின்றன;

சென்ற சரீரங்களில் செய்யப்பட்டு பலனுக்கு வாராதிருக்கின்ற கருமம் சஞ்சிதமாம், சென்ற சரீரத் தில் செய்து வர்த்தமான சரீரத்திற்கு ஏதுவாயுள்ள கர்மம் பிராரத்தமாம். வர்த்தமான சரீரத்தில் செய்து இனிபலத்திற்கு வரப்போகிற கர்மம் ஆகாமியமாம் 159

160 பெற்றவுயர் ஞானத்தின் ஒழிந்தவினை தானே
பிராரத்த போகத்தை யளிக்குமெனி லதுமேல்
உற்றவுட லுற்பத்தி தனையுமியற் றுறுமென்
றுரைப்பில் வறுவிதை நுகர்ச்சிக் கன்றியே முளைக்கு
மற்றதுதான் காரணமன் றதுபோல ஞானி-
வருகரும நுகர்சசினா னேயொழிவ தாகி,
அற்றமுறு பிறவிமேல் விளைத்திடுதற் கேது-
வாகாதென் றியம்புறுவ ரறிவறிதக் கவரே.

(இ-ள்)

| | | |
|---|---|---|
| பெற்றவுயர் ஞானத் தால் ஒழிந்த வினைதானே | — | (அதிகாரி புருஷன் சற்குரு வினிடத்தில் கிரமமாகப்) பெற்ற உயர்வாகிய தத்துவ ஞானத்தால் (தகித்து) ஒழிந் |



| | | |
|---|---|---|
| | | திருக்கின்ற, பிராரத்த கருமமானது. |
| பிராரத்த போ கத்தை அளிக்கும் எனில் | — | பிரரர்த்த போகமான சுக துக்கத்தைத் தருமாயின் |
| அதுமேல் உற்ற உடல் உற்பத்தி தனையும் இயற்றும் | — | அப்பிராரத்த கர்மமானது இனிவரக் கடவதான தேகோற்பத்தியையும் செய்யும் |
| என்று உரைப்பில் வறுவிதை நுகர்ச் சிக்கு அன்றியே முளைக்கும் அது காரணம் அன்று | — | என்று கூறின், வறுத்த விதை யானது புசிப்பதற்குப் பயன் படுமல்லாமல் முளையுண்டா வதற்கு அவ்விதையானது காரணமாவதின்றாம் |
| அது போல ஞானம் வருகருமம் நுகர்ச்சி யினாலே ஒழிவதாகி | — | அதுபோல் தத்துவ ஞானத் தால் அநுபவத்திற்கு வாரா நின்ற பிராரத்த கர்மமானது (தனது சேடமாகிய) பிராரத்த போகத்தைத் தத்துவஞானி அநுபவித்தலாலே ஒழிவதே அல்லாமல் |
| மேல் அற்றம் உறு பிறவி விளைத்திடு தற்கு ஏது ஆகாது | — | இனி (அவனுக்கு) அழிதலைப் பொருந்திய பிறப்பை யுண்டாக்குவதற்கு காரணம் ஆகாது |
| என்று அறிவு அறி தக்கவர் இயம்பிடுவர் | — | என்று அறிவினை அறிந்த பெரியோர்கள் கர்மத்தி னியல்பினைக் கூறுவார்கள் |

வி—அக்கினியால் தகிக்கப்பட்ட வஸ்திரமானது காற்று வருமளவும் கெடாதிருப்பது போல ஞானாக்கினியால் தகிக்கப்பட்ட பிராரத்த கருமம் தனது சேடமாகிய பிராரத்த பலபோக பரியந்தம் தேகாதி பிரபஞ்சம் தன் வடிவம் கெடாதிருப்பதாம் என்று பண்டிதர்கள் கூறுகின்றனர். (160)

## 161 ஞானிக்கும் அதிகாரி புருஷருக்கும் பிராரத்தகரும பேதம்

அ றந்தநுகர் வினையதுதான் லோகயாத் திரைக
ளு நிகரித் துறுநரற்கே யோருடம்பு தன்னிற்
செ ந்துநுகர் வாமவற்றி னதிகிருத ராகிச்
சிற தமா புருடர்க்கித் தசசங்கை யுடம்பில்
உ றந்தலது தீர்ந்திடா தெனினுமறைப் பின்றி
உறுதலால் ஒருவனுக்கிங் கிளமைமுதற் பேதம்
பிறந்திடினும் அவனுக்கோ ருடம்பேயாய் நின்ற
பெற்றிபோலா குமென வுணர்ந்திடுக தெரிந்தே

(இ—ள்)

அறைந்த நுகர் வினை அது தான் — முற்கூறிய அநுபவித்தற் குரியதாக இருக்கின்ற அந்தப் பிராரத்த கருமம்

லோக யாத்திரைகள் அநதிகரித்து உறுநரர்க்கே — (விதி நிஷேத வடிவ லோகாசாரமென்னும்) உலக நடைகளை கடந்திருக்கின்ற (ஞானிகளாகிய) மநுடர்க்கு

ஏய் ஓர் உடம்பு தன்னில் செறிந்து நுகர்வு ஆம் — (கர்மத்தால்) பொருந்திய ஓர் சரிரத்தில் (இருந்து பிராணனானது வேறு சரீரத்திலோ அல்லது வேறு லோகத்திற்கோ செல்லாமல், உலையிரும்புண்ட நீர்போல் துரியமாய் விபுவாய் நின்ற சொருபத்தில் இறந்துபோமென்ற படி) பொருந்தி அநுபவித்தற்கு உரியதாம்

அவற்றின் அதிகிருதர் ஆகி — விதி நிஷேத வடிவ லோகாசாரங்களென்னும் உலக நடைகளை கடந்திருக்கின்ற ஞானிகளினும் மேம்பட்டவராய்



சிறந்தமா புருடர்க்கு — (நற்குண நற்செயல்களால்) சிறப்புற்றிருக்கின்ற. வசிட்டர் பீஷ்மர் முதலிய அதிகாரி புருஷர்க்கு.

தச சங்கை — பத்தென்னும் இலக்கமுள்ள

உடம்பின் உறைந்து அலது தீர்ந்திடாது — உடம்பில் (அல்லது பல சரீரங்களில் பொருந்தியநு பவித்தாலன்றி பிரார்த்த கருமம் ஒழியாது என்று கூறப்படுவதாயினும்

மறைப்பு இன்றி உறுதலால் — (அதிகாரி புருஷர்க்கு அகம் பிரம்மாஸ்மியென்னும் தத்துவ ஞானத்தில் அஞ்ஞான சந்தேக விபரீதங்களால்) மறைத்தலின்றி (அச்சரீரங்களில்) பொருந்நியிருத்தலால் (அச்சரீரங்களவற்கு)

ஒருவனுக்கு இளமை மூதல் இங்கு பேதம் பிறந்திடினும் — ஓர் புருஷனுக்கு (அவனது சரீரத்தில் பால்ய முதல் கௌமாரம் யௌவனம் விருத்த மென்னும் பல)பேதங்கள் இவ்வுலகில் உண்டாகினும்

அவனுக்கு ஓர் உடம்பே ஆய் நின்ற — அவனுக்கு அச்சரீரம்) ஓர் சரீரமேயிருந்த

பெற்றி போல் ஆகும் என தெரிந்து உணர்ந்திடுக — விதம் போல வாகும் என்று (அவ்வதிகாரி புருஷரது பிராரத்த கருமத்தின் பயனை நீ) ஆராய்ந்து அறிவாயாக.

வி—விசிட்டர் பீஷ்மர் முதலியோர் அதிகாரிகளாய் இருந்தமையால் அவர்கட்குப் பல சென்மங்களுண்டாயின. ஏனெனின் அதிகாரி புருஷர்க்கு ஒரு கற்ப பரியந்தம் பிராரத்தம் இருக்கின்றது, கற்பமுடிந்

தல்லது விதேக மோட்சமுண்டாவதில்லை கற்பத்திற் குள்ளேயே அவர்கட்கு இச்சையின் வலியால் பல சரீரங்களுண்டாகின்றன. அங்ஙனமாயினும் ஆத்ம சொரூபத்தில் அவர்கட்கு செனன மரண பிராந்தி யுண்டாவதில்லை. ஆதலால் அவர்கள் சீவன் முத்தர்கள் இந்த அதிகாரி புருஷர்களின் விவகாரங்களனைத்தும், பிறருடைய உபதேச நிமித்தமேயாம் என்று விசார சாகரம் 7ம் தரங்கம் கூறுவதாம்) 161

## 162 ஞானியின் போக சித்தி

விடயங்க ளனைத்தினுக்கும் பொய்மைசா திக்கும்
மெய்ஞ்ஞானந் தனக்குமவைக் குண்மைசா திக்கும்
உடலினுகர் வினைக்குமொன் றற்கொன்று விரோத
முண்மையினான் ஞானிக்கு நுகர்வெங்ங னென்னிற்,
கெடுகநவு முதலவற்றுண் மைதுநாதி களாங்
கேடினுகர் வாதல்போற் பிராரத்த போக
விடயங்க ளுண்மையா யலதாகா தென்னும்
விதியின்மை யானுகர்வு முணர்வு முரணாவால்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| விடயங்கள் அனைத்தினுக்கு | — | (மாயாப் பிரபஞ்சமான) நாம ரூபவிஷயங்கள் சர்வத்திற்கும் |
| பொய்மை சாதிக்கும் மெய்ஞ்ஞானம் தனக்கும் | — | மித்தியாத்துவ நிச்சயத்தைச் சாதிக்கின்ற உண்மையான தத்துவஞானத்திற்கும் |
| அவைக்கு உண்மை சாதிக்கும் உடலின் நுகர் வினைக்கும் | — | அவ்விஷயங்களுக்கு சத்தியத்வத்தைச்சாதிக்கின்ற (சீவர்கள்) சரீரத்திலிருந்து (சுக துக்கங்களை) அநுபவித்தற்கு ஏதுவாயுள்ள பிராரத்திற்கும் |
| ஒன்றற்கு ஒன்று விரோதம் உண்மையினால், ஞானிக்கு நுகர்வு, எங்ஙன் என்னில், கெடுகநவு | — | பரஸ்பரம் வேறுபாடு இருத்தலினால். தத்துவஞானிக்குப் பிராரத்த போகாநுபவம் எவ்வாறு பொருந்துவதாம் என்று வினவுவாயாயின் தத்துவ |



| | | |
|---|---|---|
| முதல் அவற்றுள் ஆம் | | ஞானமின்றியே கெடுதற்குரிய (பிராதிபாசிக) சொப்பனம், இந்திரஜாலம் முதலியவற்றில் உண்டாம். |
| மைதுனாதிகள் கேடு இல் நுகர்வு ஆதல் போல | — | (ஆண் பெண்) புணர்ச்சியும், புலி, பாம்பு முதலியவற்றால் பயமும், கல்கண்டு பலாதிகளை யுண்டு சந்தோஷமும் கெடாத (நிசமான) போகநுபவமும் ஆதல் போலாம். |
| பிராரத்த போக விடயங்கள் | — | (வியாவகாரிக) பிராரத்த கரும போகநுபவ நிமித்தமான விடயங்கள் |
| உண்மையாய் அலது ஆகாது என்னும் | — | சத்தியத்வ தரிசன முண்டானலன்றி பொருந்தாதென்னும் |
| விதி இன்மையால் நுகர்வும் உணர்வும் முரணா | — | நியமமில்லாமையால் பிராரத்த கருமம் போகாநுபவமும் தத்துவ ஞானமும் விரோதமாவன அன்றாம். |

வி—மித்தையான சொப்பன முதலியவற்றிற்கும் சத்தியமான மைதுனாதி போகத்திற்கும் விரோதமில்லாமை போல மித்தையான பிராரத்த கரும போகத்திற்கும் சத்தியமான தத்துவ ஞானத்திற்கும் விரோதமில்லையாம் ஆனால்,தேகாதிகளின் ஸ்தியதிக்கு ஏதுவாகிய சகாமிய கர்ம வடிவ பிராரத்தத்திற்கும், நிஷ்காம கர்மஜன்னிய ஞானத்திற்கும் பிதாவினது சகோதரனுக்கும் சகோதரனது புத்திரனுக்கும் போல பரஸ்பரம் சிநேகமுண்டு (162)

## 163 மாயை அதன்காரியம் நிருபாதிக பிராந்தியன்று சோபாதிக பிராந்தியாதி எனல்

வந்தமயல் ஒழிந்தளவே யிப்பியிடை வெள்ளி
மாய்தல்போ லறிவினா லஞ்ஞானங் கெடலும்

இந்தவுல கதுதோற்ற மேயிலா மையினால்-
எங்ஙனம்ாம் வினைப்போக நுகர்ச்சியெளி லிப்பி
தந்தவிர சதநிருபா திகப்பிரமை யாகுந்
தன்மையால் உணர்ந்தளவில் வெள்ளியுரு வொழியும்
பந்தமுறு மிதுசோபா திகமாகு மதனாற்
பகர்ந்ததுபோ லன்றாமற் றெங்ஙனெனில் உரைப்பாம்
(இ—ள்)

| | | |
|---|---|---|
| வந்த மயல் ஒழிந் தளவே, இப்பி இடை வெள்ளி மாய்தல் போல் | — | ஒருவனுக்கு கிளிஞ்சலின் விசேட ஞானமின்றித் தோன்றிய (இது வெள்ளி யென்னும்) பிராந்தி (கிளிஞ்சல் ஞானத்தால்) நீங்கிய மாத்திரத்தில் கிளிஞ்சலின் கண் வெள்ளி கெடுதல் போல |
| அறிவினால் அஞ் ஞானம் கெடலும் | — | தத்துவ ஞானத்தால் அஞ் ஞானம் அழிந்தமாத்திரத்தில் |
| இந்த உலகது தோற்றமே இலாமை யினால் வினைப் போக நுகர்ச்சி | — | இந்தப் பிரபஞ்சத்தின் தோற்றமே இல்லாமையினால் (தத்துவ ஞானிக்கு) பிராரத்த போகநுபவம் |
| எங்ஙனம் ஆம் எனின் | — | எவ்வாறு பொருந்துவதாம் என்று விநவுவாயாயின் |
| இப்பிதந்த இர சதம், நிருபாதிக பிராந்தியாம் அத் தன்மையினால் | — | கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளியானது, உபாதி இன்றிய பிராந்தியாம் அந்த முறைமையினால் |
| உணர்ந்த அளவில் வெள்ளி உருவு ஒழியும் | — | கிளிஞ்சலை அறிந்தமாத் திரத்தில் வெள்ளியின் உருவம் கெட்டொழியும் |
| பந்தம் உறும் இது சோபாதிகம் ஆகும் அதனால் | — | (சம்சார) பந்தகாரணமாகப் பொருந்தியுள்ள, இப் பிரபஞ்சம் உபாதியோடு கூடியதாகும். அதனால் |



| | | |
|---|---|---|
| பகர்ந்தது போல் அன்றாம் | — | மேற்கூறிய உபாதியின்றிய பிராந்தி போலன்றாம் |
| மற்று எங்ஙனம் எனின் உரைப்பாம் | — | பின் எத்தன்மையதா மென்று வினவுவாயாயின் (அதற்கு விடை கூறுவாம். (163) |

## 164 சோபாதிக திருஷ்டாந்தம்

தடத்தினுயர் கரையமர்வோன் அத்தடத்துப் புனலிற்
றானதோ முகமாக விருப்பதுபொய் யென்று,
படைத்ததெளி வுளமொடிருப் பினுமதோ முகமாம்
படிவம் தோன்று றல்போல மூலவகங் காரம்
அடுத்துவரு சீவபாவாதிகமோ மித்தை,
அறிதுரியன் றானெனவே யுணரினுஞ் சீவாதி
தொடுத்தவுல குறுதலினாற் சீவன்முத்தன் றனக்குத்
துய்க்கும்வினைப் போகவிவ காரமுடன்பாடாம்.

இ—ள்

| | | |
|---|---|---|
| தடத்தின் உயர் கரை அமர்வோன் | — | (தெளிந்த நீரை யுடையஒரு) தடாகத்தின் உயர்வாயுள்ள கரையின்கண் இருப்பவன் |
| அத்தடத்துப் புனலில் தான் அதோ முகமாக இருப்பது | — | அத்தடாக நீரில்தான் (தனது வடிவம்) தலைகீழாக தோன்றுவது |
| பொய் என்று படைத்த தெளிவுளம் ஒடு இருப்பினும் | — | மித்தையாமென்று உறுதியாகக் கொண்டு தெளிந்த மனதோடு இருந்தாலும். |
| அதோ முகமாம் படிவம் தோன்றுதல் போல் | — | (அவனுக்கு) தலைகீழாகவுள்ள வடிவம் தோன்றுவது போல |

மூல அகங்காரம் அடுத்துவரு சீவ பாவாதிகமோ மித்தை — (சீவன் முத்தனுக்கு) மூலாங்காரத்தை சம்பந்தித்து வருகின்ற சீவத்துவம் முதலிய அனைத்தும் மித்தையாம்

அறிதுரியன் தான் எனவே உணரினும் — அவற்றை சாட்சியாக இருந்து அறிகின்ற பிரத்யகாத்மாயானே என்று அறிந்திருந்தாலும்.

சீவன் முத்தன் தனக்கு சீவாதி தொடுத்த உலகு உறுதலினால் — அச்சீவன் முத்தனுக்கு சீவத்துவ முதலியனவாக பொருந்தி இருக்கின்ற பிரபஞ்சத் தோற்றம் பொருந்தியிருத்தலால் (சுகதுக்க) வடிவ போகத்தை

துய்க்கும் வினை போக விவகாரம் உடன்பாடாம் — அநுபவித்தற்கு ஏதுவாயுள்ள பிராரத்த கரும போகாநுபவ விவகாரம் அங்கீகரிக்கப் படுவதாம்

விலட்சண (தனதுசமகாலபரியந்தம் காரியத்தை நிறுத்துவதாகிய) நிமித்த காரணம். ஈண்டு உபாதி யெனப் படும், அவ்வுபாதியோடு கூடிய அஞ்ஞான சென்னியப் பிராந்தி சோபாதிகமாம், எங்ஙனம் பிரகாச அந்த காரங்களின் சம்பந்த வடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோன்றும் ஆகாயத்தினது நீலத் தன்மையின் பிராந்தியிருக்கிறதோ எங்ஙனம் பிம்பத்தின் சந்நிதி வடிவ உபாதியோடு கூடிய கண்ணாடியின் அஞ்ஞானத்தால் தோன்றும் பிரதிபிம்பத்தின் பிராந்தி யிருக்கின்றதோ, அங்ஙனமே சீவர்களது அதிஷ்டான வடிவ உபாதியோடு கூடிய மூலாஞ்ஞானத்தால் தோன்றிய பிரபஞ்சத்தின் பிராந்தி இருக்கின்றது. அது முற்கூறிய உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோன்றிய தாயிருத்தலால் சோபாதிகபிராந்தியாம் 164

**165 சீவன் முத்தனுக்கு உரிய சற்குணங்கள், நான்கு**

சீவன்முத்தற் குரியனவா மைத்திரியே கருணை
திகழ்முதிதை யுபேட்சை யெனுஞ்சற் குணங்கள்
அவற்றுள்



மேவுறுசற் புருடரொடு நட்புமைத் திரியா,
மெலிதருதுக் கிகளிடத்தி னிரக்கமே கருணை
யோவருநற் புண்ணியர்பால் விருப்பமே முதிதை-
உகப்புவெறுப் பிரண்டுமிலா துலகிலவ மியற்றும்
பாவிகளை விடுதலே யுபேட்சையென வறிக
பயனைந்தச் சீவன் முத்தற்குளவவை யீண்டுரைப்பாம்

இ—ள்

சீவன் முத்தற்கு உரியனவாம், மைத்திரியே கருணை திகழ் முதிதை — அந்த சீவன் முத்தற்கு உரிமையாயிருக்கின்ற மைத்திரியும் கருணையும் (புண்ணியரைக்காண்பதனால் விளங்குகின்ற) முதிதையும்

உபேட்சை எனும் சற்குணங்கள் — உபேட்சையென்றும் கூறுகின்ற சிறந்த குணங்கள் ஆம்

அவற்றுள் மேவுறு சற்புருடர் ஒடு நட்புமைத்திரியாம் — அக்குணங்களுள், அறிஞர் யாவரும் விரும்புகின்ற சத்துக்களிடத்தில் சிநேகம் (இவர்கள் யாவரும் நம்மவரே யென்பது) மைத்திரியாம்

மெலி தரு துக்கிகள் இடத்தில் இரக்கமே கருணை — (தாமடைந்த துன்பத்தால்) வருந்துகின்ற துக்கிகளிடத்துண்டாகும் மன, இரக்கமே கருணையாம்

ஓவறு நல் புண்ணியர் பால் விருப்பமே முதிதை — (தமது என்பும் பிறக்குறித்தாக்கும் ததீசி முனிவர் போல தர்ம சிந்தனையென்றும்) நீங்காத சிறந்த தர்மவான்களிடத்தில் (உண்டாகும்) சந்தோஷமே முதிதையாம்

உலகில் அவம் இயற்றும் பாவிகளை உவப்பு வெறுப்பு — உலகத்தில் பாவத்தொழில்களைச் செய்கின்ற, பாவிகளை, விருப்பும், வெறுப்பும் ஆகிய

இரண்டும் இலாது விடுதலே உபேட்சை என அறிக — இரண்டும் இல்லாது விட்டு நீக்குதலே, உபேட்சையா மென்று அக்குணங்களின் இலக்கணங்களை நீ அறிவாயாக

அச்சீவன் முத்தற்கு பயன் ஐந்து உள அவை ஈண்டு உரைப்பாம் — அந்த சீவன் முத்தர்களுக்கு பிரயோஜனமானது ஐந்து விதமுண்டு அவற்றையிவ் விடத்துக் கூறுவாம். 165

166 ஞானரக்கை தவஞ்சகல சம்வாதம் உடனே
நவிறுக்க வொடுக்கமொடு சுகாவிற் பாவந்தான்
ஆனவற்றுண் மருவும்வா சனையழிவு மனத்தின்
அடக்கங்க ளாற்புத்தி நிருமலமா யிருத்தல்
ஞானரக்கை மனம்பொறிகட் கொருமையே தவமா
ஞானியென வுலகமெலாம் வழிபடல்சம் வாதம்
ஆனமனக் கிலேசமற லேதுக்க வொடுக்கம்
அவற்றினாற் பந்தமறல் சுகாவிற் பாவந்தான்

(இ—ள்)

ஞான ரக்கை தவம் சகலசம் வாதம் உடன்நவில் துக்க ஒடுக்கம் ஒடு சுகாவிற்பாவம் — ஞான ரட்சையும், தவமும், சகலசம் வாதமும் உடன் (பின்) கூறப்படுகின்ற துக்கா பாவமும் சுகாவிற் பாவமுமாம்

அவற்றுள் மருவும் வாசனை அழிவும் மனத்தின் அடக்கங் களால், புத்தி நிருமல மாய் இருத்தல் ஞான ரக்கை — அந்தப் பஞ்சப் பிரயோசனங் களுள் (மனதில்) பொருந்திய (அசுத்த) வாசனையின் நாசமும் மனோ நாசமுமாகிய இவ்விரண்டால் (காமாதி விருத்திகள் உதயமாகாமல் களங்கமற்ற கண்ணாடி தன் முன் வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது,



சித்திரமின்றி நின்மலமா யிருத்தல் போல) மனம் (அநாத்மாகார விருத்தியின்றி ஆத்மாகார மாத்திரமாய் செகத்தாகிய சித்திரமின்றி) நிர்மலமாய் இருத்தலே ஞானரக்கையாம்.

மனம் பொறிகட்கு ஒருமையே தவம் — மனதிற்கும், இந்திரி யங்களுக்கும் ஏகாக்கிர முண்டாதலே தவமாம்.

ஞானி என உலகம் எலாம் வழிபடல் சகல சம் வாதம் — (இம் மகான் தத்துவ) ஞானி யெனக் கூறித் துதித்து (பாலர் முதல் பண்டிதர் ஈறாயுள்ள) உலகத்தார் யாவரும் வணங்குதலே சகலசம் வாதமாம்.

ஆன மனம், கிலேசம், அறலே, துக்க ஒடுக்கம் — (பிராரத்த வலியால். பாதி தானு விருத்தியில், தோற்று வதாகிய, விட்சேபமென்னும் திருஷ்டதுக்கமாகிய) மன (பஞ்ச) கிலேசங்கள் நீங்குதலே துக்க நிவர்த்தியாம்.

அவற்றினால் பந்தம் அறல் சுகா விற்பாவம் — ஞானரட்சை முதலியவற்றால், (விட்சேபத்தால் அநாத்மா கார விருத்தியாகிய) பிரதி பந்தமின்றி இருப்பதே, சுகாவிற்பாவமாம் (பஞ்ச கிலேசங்கள், நாம் எழுதிய பிரம்மகீதை பிரம்மானந்தலகரி உரையிற் காண்க,

வி—ஞானரட்சை ஞானத்தைப் பாதுகாத்தல் ஞானம் அகண்ட பிரம்மாகார விருத்தியாம், அதிடஞானிக்கு

ஐயம், விபரீதங்களினின்றும், ஞானத்தை இரட்சிக்கப் படும் திட ஞானியானால், கர்த்தவ்வியமின்றி விநோ தமாக, சீவன் முத்தி விலட்சணானந்தத்தின் பொருட்டு ஞானத்தை இரட்சிக்கப்படும், அஃது அகண்டபிரம்மா காரவிருத்தி அடிக்கடி உண்டாகும்படி செய்வதாகும். அதனால் திடஞானிக்கு விட்சேபத்தாலுண்டாகும் திருஷ்டதுக்கமின்றி மநுடானந்த முதல் இரணிய கருப் பானந்தம் வரையுள்ள பதினோருவகை ஆனந்தகளும் ஒரு திவலையெனும் படியான அபாரமாகிய மகோததி போன்ற பிரம்மானந்தம் ஆவிர்ப் பவிக்கின்றது. இதுவே சீவன் முத்திக்குப் பிரயோசனமாகிய, சுகாவிற்பாவ மென அறிக. அதிட ஞானிக்கும் ஐயம் விபரீதம் நீக்க வாயிலாக சீவன் முத்தி சுகம், சித்திப்பதாம். 166

## 167 சீவன் முத்தனுக்கு உரிய தச சின்னங்கள்

குறிகளோர் பத்துளவாம் ஞானமயற் கவைதாங்
குரோதமின்மை வைராக்யம் பொறிபுலன்க ளடக்கம்
அறமுதவு சமைதமையே சநப்பிரியத்து வமோ
டலோபத்வமொடு கொடையபய நிருமதமென்றறி
நெறிமருவு சீடரொடுபத்த ருதா சீனர்
நிலையில்பா விகளென்னு நால்வகையோ ரிடத்து
முறையினனு கிரகம்வந் துறுமருள்கொள் சீவன்
முத்தனா லென்பரவை முறையினெடுத் துரைப்பாம்

(இ—ள்)

ஞானமயற்கு ஓர் பத்து குறிகள் உளவாம் — ஞான சொருபமாக விளங்கும் சீவன் முத்தனிடத்து ஒப்பற்ற பத்து அடையாளங்கள் உள்ளனவாம்.

அவை, குரோதம் இன்மை வைராக்கியம் — அவ்வடையாளங்கள், துவேஷமில்லாமையும், (யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசிகாரம்



ஆகிய எல்லா வைராக்கியங் களின், பலமும் மேலானது மான) பரவைராக்கியம் ஆம்

பொறி புலன் அடக்கம் — இந்திரியங்களை (தம்தம்) விஷயங்களில் செல்லாமல் அடக்குதலாம். (அஃது வாக் கிந்திரியம் வீண்பேச்சு பேசா மலும், மனமானது ஸ்திரிகளைக் கண்டும்

விகாரமடையா திருத்தலும், காலால் இஷ்டப்படி பலஇடங்களுக்குச்செல்லாமலும், கண்ணால் நாலு நுகத் தடிக்கப்பால் பார்க்காமலும், காதால் வீண்வார்த்தை களை கேட்காமலும் பிரியாப்பிரிய விஷயங்களையறிந் திருந்தும் அறியாதவர் போன்றிருத்தலும் ஆகிய ஜிதேந் திரியத்தையே பொறி புலனடக்கம் என்பதாம்.

அறம் உதவு — புண்ணியத்தை உண்டாக்கு வதற்கு ஏதுவாயுள்ள மன

சமை — அடக்கமும்.

தமை சனப் பிரியத்துவம் — இந்திரிய அடக்கமும் சர்வ ஜனங்களிடத்திலும் பிரிய மாயிருத்தலும்

அலோபத்துவம் ஒடு கொடை — லோபமின்மையும் (தன் பொருளை பிறர்க்குக்) கொடுத் தலும் (எதனாலும்)

அபயம் நிரும தம் என்று அறிக — பயமின்மையும், செறுக்கின்றி இருத்தலும் ஆம் என்று (நீ அவற்றை (அறிவாயாக)

அருள் கொள் சீவன் முத்தனால் — கருணையே தனக்கு வடிவமாக கொண்டுள்ள சீவன் முத்தனுக்கு

நெறி மருவு சீடர் ஒடு — சுபேட்சை முதலிய ஞான பூமிகளில் பொருந்தி ஒழுகு கின்ற சீடர்களோடும்

பத்தர் உதாசீனர் — பத்தர்களும் உதாசீனர்களும்

நிலையில் பாவிகள் — சன்மார்க்கத்தில் நிற்காத பாவிகளும்

என்னும் நால்வகை யோரிடத்தும் — என்று கூறப்படுகின்ற, நான்கு திறத்தோரிடத்தும்

முறையின் அநுக் கிரகம் வந்து உறும் — கிரமமாக அநுக்கிரகம் வந்து பொருந்துவதாம்

என்பர் அவை முறையின் எடுத்து உரைப்பாம் — என்று (அவ்வநுக்கிர வகை யறிந்த மேலோர் கூறுவர்) அவ்வநுக்கிர வகையைக் கிரமமாக எடுத்துக் கூறுவாம் 167

168 தெரிவரிய சீவன்முத்தன் றனை நம்பு மதனாற்-
சீடர்க்கு முத்தியுமன் பொடுவழிபா டதனை;
புரியுமுயர் பத்தற்கு நல்வினையு மவன்றன்-
புனிதமுறு சரிதமது கண்டவுதா சீனர்க்
குரியபுண் ணியவிருப்பு மவன்றன்வடி வினைகண்
ணுறுதன்முத லானவற்றாற் பாவிகட்குப் பாவ,
விரிவுமுறு மென்பர்தருக் காதியால் ஆதல்
எங்ஙனெனின் முத்தனாற் பிரமோப தேசம்

(இ—ள்)

தெரிவு அரிய சீவன் முத்தன் தனை நம்பும் அதனால், சீடர்க்கு முத்தியும் — (ஞானம், தன்னாலேயே அறியத்தக்கதாம் ஆனதால் அன்னியர்கள், இவன் ஞானி யென்று அறிதற்கு மூவுலகத்தும் தேடி) அறிதற்கரிய சீவன் முத்தனை (இச்சற்குரு மூர்த்தி பரமசிவமேயென்று) நம்பிவழி படுவதால் ஞானோபதேசத் தால் சீடர்களுக்கு மோட்சமும்

அன்பு ஒடுவழி பாடு அதனை புரியும் உயர் பத்தர்க்கு நல் வினையும் — அன்புடனே (தக்க காலத்தில் சரீரத்திற்குரிய அன்னம், வஸ் திரம் முதலியவற்றைக் கொடுத்து) ஏவற்பணி செய் யும் மேன்மை பொருந்திய பக்தர்களுக்கு (நினைத்த தடையும்) புண்ணியமும்

அவன்தன் புனிதம் உறும் சரிதம் அது கண்ட உதா சீனர்க்கு உரிய புண்ணிய விருப்பும் — அச்சீவன் முத்தனது பரிசுத் தம் பொருந்திய சரித்திரத்தை (நேரே) பார்த்த உதாசீனர்க் குப் புண்ணிய கர்மத்தைச் செய்ய விருப்பமும்

அவன்தன் வடி வினை கண்ணுறுதல் முதலான அவற்றால் — அச்சீவன் முத்தனது திருமேனி யை (நிந்தித்தல் முதலிய அப சாரமின்றி) தரிசித்தல் (நமஸ் கரித்தல் அந்த ஞானியின் கிருபாதிருஷ்டி தன் மேற் படுதல்) முதலாகவுள்ள. நற் கருமங்களைச் செய்தால்

பாவிகட்குபாவ, இரிவும் உறும் என்பர் — பாவிகளுக்குப் பாவநிவர்த்தி யுண்டாவனவாம் என்று அநுக்கிரக வகையை அறிந்த மேலோர் அருளிச் செய்வர்

முத்தனால் தருக் காதியால் — கருத்துருத்துவாதி அபிமான மில்லாத சீவன் முத்தனால், தருக்க முதலியவற்றால்

பிரமோ உபதேசம் எங்ஙன் ஆதல் எனின் — (சீடர்க்கு) பிரமோபதேசம் செய்வது எப்படி பொருந்து வதாம் என்று வினவு வாயாயின் (குளகம்) 168

169 மறைப்பகலு மொருபிரம சொருபமா தலினான்
மகிழ்ச்சிவெறுப் பிலாவீசற் கநுக்கிரகஞ் செயவும்
ஒறுப்புறவும் வரும்வினையி னோராலத்
தொழில்கள்
உறுதல்போற் சாதகர்தம் பக்குவபே தத்தால்
சிறப்புறுநல்லு பதேசா திகண்ஞானிக் கெய்துஞ்
செப்பியவிவ் விலக்கணமொ டிராதுபல முறையாற்
துறப்பிலருட் சீவன்முத்த ரிருப்பதுதஎன்கொ
லென்னிற்
துணிவுதோன் றுறமுதுநூ றொகுத்தபரி சுரைப்பாம்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| மறைப்பு அகலும் ஒரு பிரம சொருப மாய் இருத்தலால் | — | (இயல்பாகவே) ஆவரணம் நிங்கியுள்ள ஒப்பற்ற பிரம்ம சொருபமாயிருத்தலால் (சர்வ சீவர்களிடத்திலும்) |
| மகிழ்ச்சி வெறுப்பு இலாத ஈசற்கு வரும் வினை யினோரால் | — | இராகத்து வேஷமின்றியுள்ள, ஈசுவரனுக்கு (அநாதியாகச் சம்சார பந்தத்தில் பொருந்தி) வருகின்ற (இரணியன், இராவணன் முதலிய பாவிகளது பாவத் தாலும், பிரகலாத ஆழ்வார் தண்டகாருண்ய மகரிஷிகள் முதலான புண்ணிய வான்களது புண்ணியத் தினாலும் |
| அநுக்கிரகம் செயவும் ஒறுப் புறவும் அத்தொழில் கள் உறுதல் போல் | — | (அவர்களுக்கு முறையே) அநுக்கிரகம் செய்தலும் நிக் கிரகம் செய்தலும் (ஆகிய) அச் செயல்கள் உண்டாதல் போல |



| | | |
|---|---|---|
| ஞானிக்கு சாதகர் தம் பக்குவ பேதத்தால் | — | சீவன் முத்தனுக்கு (ஞான) சாதனஞ் செய்பவரது (விவே காதி சாதனங்களை அடைந்து) பரிபக்குவ பேதத்தால் யாவற்றினும். |
| சிறப்பு உறு நல் உபதேசாதிகள் எய்தும் | — | சிறப்புற்றிருக்கின்ற பிரம்மா னந்தமுண்டாவதற்கு ஏது வாகிய சிறந்த ஞானோப தேச முதலியவற்றை செய்தல் உண்டாவதாம். |
| துறப்பு இல் அருள் சீவன் முத்தர் | — | நீங்குதலில்லாத கருணையை உடைய சீவன் முத்தர்கள் |
| செப்பிய இவ்இலக் கணம் ஒடு இராது பலமுறையால் இருப் பது என்கொல் எனில் | — | முற்கூறிய இந்த லட்சணங் களோடு இராமல் பலவிதமாக இருத்தல் ஏன் என்று வினவு வாய் ஆயின் (உனக்கு அவ் விதமிருத்தல் தகுமென்னும்) |
| துணிவு தோன்று உற முதுநூல் தொகுத்த பரிசு உரைப்பாம் | — | நிச்சயமுண்டாமாறு பழமையான வேதாந்த சாஸ்திரங்கள் தொகுத்துக் கூறிய விதமாக அதனைக் கூறுவாம் |
| வி—அநுக்கிரகம்- | — | இரட்சிப்பு, நிக்கிரகம்- தண்டித்தல், |

பேதம்—ஏதுமுதலிய சாதனங்கள் தாரதம்மியம் 169

## 170 பிராரத்தகரும சமஸ்கார சதுஷ்டயம்

வந்தணையும் பிராரத்த வாசனைதீ விரமே-
மத்தியமந் தஞ்சுத்த மெனவொருநான் காகும்-
பந்தமறு ஞானியா யினும்போகத் தழுந்தி
பசுப்போலத் தன்மகிழ்ச்சி மாத்திரமா யிருத்தன்,
முந்துரைசெய் தீவிரம்போ கச்சிறப்புற் றிடினும்,

மொழியான்ம தற்பரனாய் வினோதமே புரிந்து,
மைந்தரென விருத்தன்மத் தியம்போக மனைத்து
மாற்றிமிது நம்போலானந்தமுறன் மந்தம்,

இ—ள்

வந்து அணையும் பிராரத்த வாசனை — சீவன்முத்தர் தன்பயனை யனுபவித்து தன்னை நீக்கு வித்தற் பொருட்டு அவரிடத்து வந்து பொருந்துகின்ற பிராரத்த கரும சமஸ்காரம்.

தீவிரம் மத்தியம் மந்தம் சுத்தம் என ஒரு நான்கு ஆகும் — தீவிரமும், மத்தியமும் மந்தமும் சுத்தமும் என்று ஒப்பற்ற நான்கு வகையதாம் (அவற்றுள் ஒருவன்)

பந்தம் அறுஞானி ஆயினும் — ஐயம், விபரீதம், நீங்கிய சம்சாரபந்த மற்றுள்ள தத்துவ ஞானியாயிருப்பினும்

போகத்து அழுந்திப்பசுப்போல தன் மகிழ்ச்சி மாத்திரம் — அவன் விஷய போகத் தழுந்திய வனாய்ப் பசுப் போலும் பரபுருஷனை யநுபவித்த நாரியானவள், வீட்டுக் காரியங்களைச் செய்யுங்கால் அநுபவித்த சுகத்தை மாத்திரம் ஸ்மரித்துக்கொண்டு செய்வது போல் ஆத்ம பிரீதி மாத்திரமாய்

இருத்தல் முந்து உரைசெய் தீவிரம் — இருப்பதற்குக் காரணமாயிருப்பது முன்னர் கூறிய தீவிர பிராரத்த கரும சமஸ்சாரம்

போகச் சிறப்பு உற்றிடினும் — (ஞானியானவன் தான் அநுபவிக்கும்) போகத்தில் தலைமை பொருந்தியவனாய் இருப்பினும்



மொழி ஆன்ம தற்பரனாய் மைந்தர் என வினோதமே புரிந்து இருத்தல் மத்தியம் — (அவன் எப்போதும் இலக்கணா விருத்தியால்) கூறுகின்ற ஆன்மாவின் கண் முக்கிய பிரீதி உடையவனாய் பாலர் போலும் (தாதி மனம் நீர்க்குடத்திருப்பது போலும்), பல திருவிளையாடல்களைச் செய்துயிருப்பதற்குக் காரணமாயிருப்பது மத்திய பிராரத்த கரும சமஸ்காரம் ஆம்.

## மந்தப் பிராரத்த சமஸ்காரம்

போகம் அனைத்தும் மாற்றி மிதுனம்போல் ஆனந்தம் உறல் மந்தம் — (ஞானியானவன் தான் அநுபவித்தற்குரிய) போக மனைத்தையும் (வைராக்கியத்தால்) நீக்கியவனாய் (காதலனும் காதலியும், கருத்தொருமித்துக் கூடிய நுபவிக்கும்) ஆனந்தம் போல, ஆனந்த முற்றிருப்பதற்கு காரணமாயிருப்பது மந்தப்பிராரத்த சமஸ்காரம் 170

171 உலகவழக் ககன்றுநிரு பாதிகான் மாவில்-
உற்றதற் பரனாகிப் பரமுத்த னெனவே,
இலகுசுகத் துடனிருத்தல் சுத்தவா சனையாம்
என்பரிந் நால்வகையாகுங் கருமவா சனையாற்
தலைமைகொண் முத் தர்கள்வே றுவேறாய வொழுக்கம்-
சாறினும்செந் நெறிகோணல் நெறிபெருமா நதிகள்,
அலைகடலிற் புகுதல்போன் முடிவினன்மெய்ப் பரமாய்-
அமர்தருநன் முத்திசுக மொருபரிசென் றறியே.
(இ—ள்)

## சுத்த பிராரத்த சமஸ்காரம்

| | |
|---|---|
| உலக வழக்கு அகன்று நிருபாதிக ஆன்மாவில் — | (ஞானியானவன்) உலக வியாபாரம் அனைத்தும் நீங்கியவனாய், மாயாப் பிரபஞ்சம் உபாதியில்லாதுள்ள ஆன்மாவின் கண். |
| உற்ற தற்பரனாய் பர முத்தன் என — | பொருந்திய சித்தமழுந்தியவனாய், விதேக முத்தனைப் போல மாறாது |
| இலகு சுகத்துடன் இருத்தல் சுத்த வாசனையாம் என்பர் — | விளங்குகின்ற, பிரமானந்தத்தோடிருக்கக் காரணமாயிருப்பது சுத்த (பிராரத்த கரும) வாசனை, சமஸ்காரம் ஆம் என்று மேலோர் பிராரத்த கரும சமஸ்கார வகையைக் கூறுவர். |
| இந்நால்வகைஆகும் கரும வாசனையால் — | இந்த நான்கு வகையாயுள்ள பிராரத்தகரும சமஸ்காரத்தால் |
| தலைமை கொள் முத்தர்கள் வேறு வேறாய ஒழுக்கம் சாரினும் — | மைத்திரி முதலிய சற்குணங்களைத் தங்களிடத்துத் தலைமையாக (விளங்கும்படி) கொண்டுள்ள சீவன் முத்தர்கள் (தம்முள்) நானாவிதமான ஒழுக்கங்களைப் பொருத்தினவராய் இருப்பர் (அங்ஙனம்) இருப்பினும் (அதை திருஷ்டாந்த வாயிலாய் அறிவித்தல்) |
| செந்நெறி கோணல்நெறி பெறும் மாநதிகள் — | (தம்மால்) நேரான வழியையும் கோணலான வழியையும் பெற்றுள்ள பெரிய நதிகள் முடிவில் |
| அலைகடலில் புகுதல் போல — | அலைகளால்) அசைகின்ற சமுத்திரத்தில் |



| | |
|---|---|
| | பிரவேசித்து ஏகமாயிருத்தல் போல (பிராரத்தகரும) |
| முடிவினில் மெய்ப் பரமாய் அமர்தரு நல்முத்தி சுகம் ஒரு பரிசு என்று அறி — | முடிவில் சத்துருப பிரம்மாகப் பொருந்தி இருக்கின்ற ஆனந்த வடிவ மோட்ச சுகம் ஒரு விதமாக இருப்பதாம் என்று (இதனை நீ அறிவாயாக) 171 |

## 172 பிராரத்த கருமத் திரயம்

இச்சையுட னநிச்சைபிற ரிச்சையெனு மிவற்றால்
இயம்பலுறு பிராரத்த மூன்றுவகைப் படுமால்
அச்சுரர்க ளாலும்விலக் குதற்கரிய வாகும்
அபத்தியம்செய் திடறனக்கே கேடெனவிங் கறிந்து
வைச்சுமது புரிவித்த லிச்சைசெய்யே னெனினும்
மன்னவர்தம் மாணைபோற் செய்வித்த லநிச்சை
இச்சையநிச் சைகளின்றி யிருந்தய லோரால்-
இன்பதுன்ப நுகர்வித்தல் பிறரிச்சை வினையாம்

(இ—ள்)

| | |
|---|---|
| இயம்பல் உறுபிராரத்தம் இச்சை உடன் அநிச்சை — | முற்கூறிய பிராரத்த கருமம் இச்சா பிராரத்த கருமம் அநிச்சா பிராரத்த கருமம் |
| பிறர் இச்சை எனும் இவற்றால் மூன்று வகைப்படும் — | பரேச்சாப் பிராரத்தம் என்று கூறப்படும் இவற்றால், மூன்று விதமாக இருப்பதாம் இவை |
| அச்சுரர்களானும் விலக்குதற்கு அரிய ஆகும் — | அந்தப் பிரம்மன் முதலிய தேவர்களாலும், நீக்குதற்கு கூடாதனவாம் (அவற்றுள்) |
| இங்கு அபத்தியம் செய்திடல் தனக்கு — | இவ்வுலகில் (ஒருவன்) பத்தியம் தவறுதல் தனக்கு |
| கேடு என அறிந்து வைச்சும் அதுபுரி — | கேடு (உண்டாவது) என்று அதனை அறிந்திருந்தாலும் |

| | |
|---|---|
| வித்தல் இச்சை | (இச்சையின் வலியால்) அதனைச் செய்வித்தல் இச்சாப்பிராரத்தகருமமாம் |

## அநிச்சாப் பிராரத்த கருமம்

| | |
|---|---|
| செய்யேன் எனினும் — மன்னவர் தம் ஆணைபோல் செய்வித்தல் அநிச்சை | ஒருவன் இக்காரியத்தை செய்ய மாட்டேனென்றிருந் தாலும் அரசனது ஆணைபோல பலாத்காரமாக (அதனைச்) செய்விப்பது அநிச்சாப் பிராரத்த கருமமாம் |

## பரேட்சாப் பிராரத்தம்

| | |
|---|---|
| இச்சை அநிச்சைகள் இன்றி இருந்தும் — | ஒருவன் தான் குறித்து சுக துக்கங்களை அனுபவிப்பதன் கண் இச்சை அநிச்சைகள் இல்லாதிருந்தும் |
| அயலோரால் இன்ப — துன்பம் நுகர்வித்தல் | அன்னியரால் (அன்னியரது தாட்சண்ய காரணமாக) அவனை அந்தச் சுகதுக்கங்களை அனுபவிக்கச் செய்வது |
| பிறர் இச்சா — வினையாம் | பரேட்சாப், பிராரத்த கருமமாம் (பிறரது, இச்சையின் காரணமாக, அவன் பத்தியங்களை விடுதலால், அவற்றால் சுகதுக்கங்களை அடையுமாறு செய்வதே பரேட்சாப் பிராத்தமாம்) 172 |



173 இப்பரிசு மூவகையாம் பிராரத்த வினைவா
லெண்ணில்பல வொழுக்கமாஞ் சீவன்முத்தர்க்கிந்த
மெய்ப்பொருளை வசிட்டனா ரதன்றுருவா சன்சீர்,
வியாதனொடு சுகன்வாம தேவனருட் சநகன்,
ஒப்பரிய பரதனெழிற் கௌதமனே முதலா
யுளர்வருத்த நாபேத முணர்த்தலுறு மிங்கன்,
துப்புறவு பிராரத்த கொளினங்ஞா னிக்குஞ்
சுத்தனுக்கும் வேறுபா டெங்ஙனெனின் மொழிவாம்

(இ—ள்)

| | |
|---|---|
| சீவந்முத்தர்க்கு இப்பரிசு மூவகை ஆம்பிராரத்த வினைவால் — | சீவன் முத்தர்களுக்கு, இவ்வாறு மூன்று விதமாக வுள்ள பிராரத்தகருமம் உண்டாவதால் |
| எண்ணில் பல — ஒழுக்கம் ஆம் | எண்ணிக்கையற்றுள்ள நானா விதமான ஒழுக்கங்களுண் டாவதாம் |
| இந்த மெய்ப் — பொருளை வசிட்டன் நாரதன் துருவாசன் | இந்த (ஒழுக்கங்களாகிய சாஸ்திரங்களிலுள்ள) அர்த் தங்களை, வசிட்டர் கர்ம கர்த்தா போன்றும், நாரதர் கானலோலர் போன்றும், துருவாசர் கோபிப்பவர் போன்றும் |
| சீர் வியாசன் ஒடு — சுகர் வாமதேவர் அருள் சனகர் ஒப்பு அரிய பரதன் எழில் கௌதமன் முதலாயவுளர் | சிறந்த வியாச முனிவர் சாஸ் திர கர்த்தாவை போன்றும், சுகப்பிரம்மம். விரத்தியுற்றவர் போன்றும், வாமதேவர் பாவிப் பிரதிபந்த முற்றவர் போன்றும் கிருபை நிறைந்த சனகர் ஸ்ரீராமர் இராஜ்ய பாலன முற்றவர் போன்றும் ஒப்பற்ற சடபரதர் சடர் போன்றும் |

கௌதமர் தர்க்கியைப் போன்றும் ஞாக்ஞவல்கியர் சம்சாரி போன்றும், பிரகலாதர் பத்தனைப் போன்றும் வான்மிகர் துராசாரம் சதாசார முற்றவர் போன்றும் விசுவாமித்திரர் தவத்தவர் போன்றும், தத்தாத்திரேயர், அநாசார முடையார் போலும், சநகாதியர் யோகியார் போன்றும், அனுமார் தூதுவரைப் போலும் இருந்தனர்,

| | |
|---|---|
| சீவன் முத்தரது வருத்தனா பேதமே உணர்த்தல் உறும் இங்ஙன் துப்பு உதவு பிராரத்தம் கொளின் — | சீவன் முத்தர்களது ஒழுக்க பேதமே அறிவிப்பதாம், இவ்வாறு (சுக துக்க வடிவ போகத்தைத் தருகின்ற, பிராரத்த கருமத்தை, (சீவன் முத்தர்கட்கு உண்டென்று கொள்வோமானால் |
| அஞ்ஞானிக்கும் சுத்தனுக்கும் வேறுபாடு எங்ஙன் எனில் மொழிவாம் — | அறியாதவனுக்கும், தத்துவ ஞானிக்கும் (உள்ள) பேதமெப்படியென்று வினவில் (அதற்குவிடை) கூறுவாம் 173 |

174 மண்ணுலகில் விராத்தியர் சோத்திரியர் தமக்கு-
மறையொழிதல் ஓதலாலன்றி யுணன் முதலாம்,
எண்ணவரும் செயலான்வே றிலாமையது போல-
இதயபந்த முறலொழித லாலன்றி போகம்,
உண்ணுநிலை யதனாலஞ் ஞானமுடை யோர்க்கும்-
உணர்வுமய மாய்நின்ற சீவன்முத்தர் தமக்கும்.
நண்ணிவரும் வேறுபாடு இலையெனவே நவில்வர்-
ஞானநூல் பலவுணர்ந்த நல்லுணர்வி னவரே,

(இ—ள்)

| | |
|---|---|
| மண்ணுலகில் விராத்திரியர், சுரோத்திரியர், தமக்கும் — | இந்த மண்ணுலகத்தில், விராத்திரியர், சுரோத்திரியர் ஆகிய இருவகையவர் களுக்கும் |



| | |
|---|---|
| மறை ஒழிதல் ஓதல் அன்றி — | வேதாத்தியயநம், செய்யாமையாலும், செய்வதாலும் பேதமே அல்லாமல், |
| உணல் முதல் ஆக எண்ண அரும் செயலால் வேறு இலாமையது போல — | உண்ணல் உடுத்தல் பொருந்தல் முதலாகவுள்ள, எண்ணிக்கையற்றிருக்கின்ற செயல்களால், பேதமில்லாமை போல |
| அஞ்ஞானம் உடையோர்க்கும், உணர்வு மயம் ஆய்நின்ற சீவன் முத்தர் தமக்கும்- இதய பந்தம் உறல் ஒழிதலால் அன்றி — | அஞ்ஞானிகளுக்கும், ஞான சொருபமாய் விளங்கா நின்ற (சீவன் முத்தர்களென்னும் (ஞானிகளுக்கும்) சித்தம் ஆசை கோபம் யானெனதென்றும் அபிமான முதலான பந்தமடைந்திருந்தலும், இவ்வித சித்த பந்தனமில்லாதிருத்தலும் (பேதமேயல்லாமல் சுகதுக்க வடிவ) |
| போகம் உண்ணும் நிலை அதனால் நண்ணிவரும் வேறுபாடு -இலைஎன ஞானநூல் பல உணர்ந்த நல் உணர்வோர் நவிலுவர் — | போகத்தை அனுபவிக்கும் ஸ்திதியினால் பொருந்தி வருகின்ற பேதமில்லையென்று ஞான சாஸ்திரம் பலவற்றை ஆராய்ந்து அறிந்துள்ள பேரறிவினையுடையவர் (அவ்விருவர்க்கும் உள்ள பேதத்தைக் கூறுவார்கள். |

[வி— அஞ்ஞானியோ, பந்தத்திற்கு இருப்பிடம், ஞானியோமோட்சத்திற்கு இருப்பிடம். ராகம் அஞ்ஞானிக்கும் விராகம் ஞானிக்கும் கொடிகள் எங்ஙனம் கொடி இராஜாவின் பட்டணத்திற்கு அடையாளமாக இருக்கின்றனவோ அங்ஙனமே அஞ்ஞானி ஞானி இருவர்க்கும், ராகமும் விராகமும் அடையாளங்களாக இருக்கின்றன. ஆதலின் அஞ்ஞானிக்கு ராகம் குறி. ஞானிக்

குவிராகம் குறி. அஞ்ஞானியின் அந்தக் கரணத்தில் சாட்சி ரூபமூர்த்தியிருக்கின்றது. சாட்சிக்கு விஷயமான பிரபஞ்சத்தை சாட்சிய மென்பர் சாட்சிரூபமூர்த்தி சுத்தமாயிருக்கின்றது. இவற்றுள் சாட்சியத்துள் அழுந்துவோர் இராகிகள். சாட்சியில் அழுந்துவோர் தியாகிகள் (ஞானிகள்) பிரபஞ்சத்தை சத்தியமென்றறிந்தோர் துக்கமாகிய கிணற்றில் முழுகுகின்றனர். அசல பிரம்மத்தின் நிசசொருபத்தை அறிந்தவர்கள் ஆனந்த சொருபத்தை அடைகின்றனர் என்று விசாரசாகரம். மம்தரங்கம் கூறுவதுணரத்தக்கதாம்.

175 தத்துவஞா னத்தினால் பிரமமடைந்திடு மேற்
றறு கண்வரிப் புலிகண்டோன் போற்சீவத்
துவத்தை
அத்தலேயே யழித்திடிமா தலினாலச் சீவன்
அழிவுதனக் குடன்படுமோ வெனிற்கடவுள்
தன்மைக்
குய்த்தவா தரவினாற் கங்கைமுத லவற்றுள்
ஒழிப்பதனுக் சைவர்நரத் துவமதுபோ லென்றும்
பொய்த்தலிலாத் துரியவடி வாம்பிரமமத் துவத்திற்
பொருந்தத்தன் கேட்டினுக்குங் குடன்படுஞ்சீ
வன்றான்

(இ—ள்)

தத்துவ ஞானத்தினால் பிரமம் அடைந்திடுமேல் — சீவன், சிவப் பிரம்ம ஐக்கிய ஞானத்தால் பிரம்ம சொருபத்தை அடைந்திடுவானாயின் (பிரம்ம சொருபமான)

அத்தலேயே, தறு கண் வரிப்புலி கண்டோன் போல் — அப்பொழுதே, அஞ்சாமையும். வரிகளேயும் உடைய புலியைக் கண்டவன் போல

சீவத்துவம் அழிந்திடும் ஆதலின் — சீவத்துவமானது (அவனுக்கு) அழிந்து போம் ஆதலினால்



அச்சீவன் அழிவு தனக்கு உடன் படுமோ எனின் — அந்த சீவன் (தனது) சீவத்துவ நாசத்திற்கு (வட்டிக்கு ஆசைப்படு வோன் முதலிழந்த கதை போல) உடன்படுவானோ என்று வினவு வாயாயின்

கடவுள் தன்மைக்கு உய்த்த ஆதர வினால் — (கர்ம காண்டிகளுள் சிலர்) தெய்வத் தன்மையை அடைதற் பொருட்டு செலுத்திய விருப்பத்தால்

கங்கை முதலவற்றுள் நரத்துவம் ஒழிப்பதனுக்கு இசைவர் — கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் மனுடத் தன்மையை ஒழிப்பதனுக்கு உடன்படுவார்கள்.

அதுபோல் இங்கு சீவன் என்றும் பொய்த்தல் இலா துரியவடிவு ஆம், பிரமத்துவத்தில் பொருந்த — அத்தன்மை போல் இவ்வுலகத்தில் ஐக்கிய விரோத அவித்தை யாகிய மித்தியாபாக நாசத்தால்) எக்காலத்தும் பொய்யாதல் இல்லாத பிரத்யகாத்ம வடிவமாயுள்ள பிரம்ம தன்மையில் பொருந்தி யிருக்க

தன் கோட்டினுக்கு உடன்படும் — (தத்துவஞானத்தால்) மித்யா விரோதபாக நாசத்திற்கு உடன்படுவான்,

வி—தெய்வத் தன்மையை அடைதல், தேவ சரீரத்தை அடைதலாம் நரத்தன்மையை ஒழித்தல் மனித சரீரத்தை விடுதலாம்) 175

176 வாதரா யணன்முதலோர் போற்சாப முடனே
மற்றருள்செய்-வலியுடையோன் றத்துவஞா
னத்தோன்,

ஏதிலா னலனெனிலவ் வலிதவத்தின் பலமாக
இலங்குதத் துவஞான பலமன்றா மாயின்
மாதவமே ஞானத்திற் கேதுவெனும் சுருதி
வழக்கினாற் றவமிலர்க்குத் தத்துவஞா னந்தான்
ஏதெனிலாஞ் சாபாதிக் குச்சகா மியமே
யேதுநிட்கா மியதவஞா னத்தினுக்கென் றறியே

(இ—ள்)

| | |
|---|---|
| வாதராயணன் முதலோர் போல் சாபம் அருள்செய் — | வியாசர் முதலிய மகரிஷிகளைப் போல (தன்னையிகழ்ந்தவர் களுக்கு) சாபமும், புகழ்ந்த வர்களுக்கு அனுக்கிரகமும் செய்யத்தக்க |
| வலியுடையோனே — | சாமர்த்திய முடையவனே, |
| தத்துவ ஞானத்தோன் | தத்துவ ஞானியாவான் |
| ஏது இலான் அலன் — | அச்சாமர்த்தியம் இல்லாதவன் தத்துவ ஞானியல்லன் என்று |
| எனின் அவ்வலி தவத்தின் பலம் ஆம் இலங்கு தத்துவ ஞானத்தின் பலம் அன்றாம் | கூறின் அச்சாமர்த்தியம் தவத்தின் பயனேயாம் (அஃதன்றி விசாரத்தால்) விளங்குகின்ற தத்துவ ஞானத் தின் பலனன்றாம் |
| ஆயின் ஞானத்திற்கு — மாதவமே ஏது எனும் சுருதி வழக்கினால் | அங்ஙனமானால் தத்துவ ஞானமுண்டாவதற்கு மாட்சிமை பொருந்திய, தவமேகார ணமாமென்று, கூறுகின்ற சுருதி வாக்கிய மிருத்தலால் |
| தவம் இலர்க்கு — தத்துவ ஞானம் ஏது எனின் | தவமில்லாதவர்களுக்கு தத்துவ ஞானம் (உண்டாவது) எங்ஙனமாம் என்று வினவு வாயாயின் |
| சாபாதிக்கு — சகாமியமே ஏது ஆம் | சாபானுக்கிரகங்களுண்டா வதற்கு காமியத் தவமே காரணமாம் |



| | |
|---|---|
| ஞானத்திற்கு — | தத்துவ ஞான முண்டாவதற்கு |
| நிட்காமிய தவம் — | நிஷ்காமியத்தவம் காரணமாம் |
| என்று அறி | என்று (அவ்விரு தவங்களின் பயனையும் நீ அறியக் கடவாய் |

(வி—பலனைக் கருதிச் செய்கின்ற தவம் காமியத் தவமாம். பலனைக் கருதாமல் செய்கின்ற தவம் நிட்காமிய தவமாம்) 176

177 வேதவியா சாதிகட்கு ஞானம்வலி யிரண்டும்
மேவுமே யெனிலவர்கட் கிருதவமு முளவாம்,
ஆதலினால் அவ்விரண்டு மாகுமொரோர் தவமே
ஆயினொவ் வொன்றேயடையு மதனான்மா
றின்றாம்

மேதையாஞ் சாபாதி வலியிலர்க ளாகி-
விதியிற்த் துவஞானி களைக்கிரியா நிட்டர்.
ஓதுவார் நிந்தையெனி லவர்தமக்கும் விடயத்,
துழல்பவரா னிந்தையா தலிற்குறைவின் றாமால்

(இ—ள்)

| | |
|---|---|
| வேதவியா சாதி கட்கு ஞானம் வலி இரண்டும் — | அந்த வேதவியாசர் முதலிய மகரிஷிகளுக்கு, தத்துவ ஞானமும் சாபானுக்கிரக சாமர்த்தியமுமாகிய இரண்டும் |
| மேவுமே எனில் அவர்கட்கு இரு தவமும் உளவாம் — | பொருந்தியிருக்கின்றனவே யென்றால் அவர்களுக்கு (அந்த) இருவித தவமும் உள்ளனவாம் |
| ஆதலினால் அவ் விரண்டும் ஆகும் | ஆதலால், தத்துவ ஞானமும், சாபானுக்கிரக சாமர்த்தியமு மாகிய இரண்டும் உண்டாகும் |
| ஓர் ஓர் தவமே ஆயின் ஒவ்வொன்றே அடையும் — | (ஒருவன் அவ்வி நவகை தவங்களுள்) ஒவ்வொரு தவத்தையே செய்திருப் பானாயின் அவ்விரு வகைப் |

| | | |
|---|---|---|
| | | பயன்களுள் ஒவ்வொரு பயனையே அடைவன் |
| அதனால் மாறு இன்றாம் | — | அவ்விதத்தால் விரோத மில்லையாம் |

(வி—தவத்தால் பிரம்மத்தை அறியக் கடவாய் என்று தைத்திரிய உபநிஷத் முதலாவது அத்தியாயம் கூறுவதாகும்)

| | | |
|---|---|---|
| மேதை ஆம்சா பாதிவலி இலர்கள் ஆகில் விதி இல்தத்து வஞானிகளை | — | மேன்மையமைந்த சாபானுக்கிரக சாமர்த்தியம் இல்லாதவராய் (வேதத்தால் இது செய் இது செய்யற்க வென்று) விதித்தலில்லாத சீவன் முத்தர்களை |
| கிரியா நிட்டர் நிந்தை ஓதுவர் எனில் | — | கர்ம காண்டிகள் நிந்தனை (செய்து) பேசுவார்களே என்று வினவு வாயாயின் |
| அவர் தமக்கும் விடயத்து உழல்பவரால் நிந்தை ஆதலின் குறைவு இன்றாம் | — | அக்கிரியா நிஷ்டர்களுக்கும் விஷயப்பற்று உடையவராய் இருக்கின்ற மூடரால், இவன் சைவப்பழம், வைஷ்ணவக் கொழுந்து. காகம் குளிப்பதால் மோட்சமுண்டாகுமா என்பதாக, நிந்தனை (கேட்கப்படுதலின்) அக்கிரியா நிட்டர் செய்யும் நிந்தையால் தத்துவ ஞான நிஷ்டர்களுக்கு குறைவுண்டாதலில்லையாம் |

(கிரியாநிட்டர் — வேதத்தில் விதித்த கருமங்களைச் செய்பவர்) 177

## 178 ஞானியின் மகாத்மியம் உரைத்தல்

உல கிறந்த சீவன் முத்தன் நுகர்வினைவா சனையால்-
உண் பொருள்கள் பலகவர்ந்து மௌனமே யுற்றும்,
பலதிறங்கள் மொழிந்தும் உபதேசநெறி புரிந்தும்,
பரிதவித்தும் மகிழ்ந்துமிகு வேடங்கள் புனைந்தும்,
கலைதுறந்து முடையுடுத்துங் கல்விபல பயின்றும்,
கல்லாது மாதர்முயக் கிடையுற்று மிவ்வா
றலகிறந்த நடையுற்று மருள்விளையாட் டென்றே
அவன்றனை நம் புகலவைய மொருசிறிது முறாமல்



(இ—ள்)

| | | |
|---|---|---|
| உலகு இறந்த சீவன் முத்தன் | — | (தனது திருஷ்டியில்) உலகமிறந்துள்ள சீவன் முத்த புருஷன் |
| நுகர்வினை, வாசனையால், உண்பொருள், கள் பல கவர்ந்தும் | — | பிராரத்த கருமத்தின் சமஸ்கார வசத்தால் (தான்) அனுபவித்தற்கு உரிய பொருள்கள் பலவற்றைக் கிரகித்தும் |
| மௌனமே உற்றும் | — | வாக்கு மௌனம் செய்தும் |
| பல திறங்கள் மொழிந்தும் உபதேச நெறி புரிந்தும் | — | பலவிதமான சொற்களைச் சொல்லியும் (உடனே சீடர்களுக்கு, தத்துவம்அசி மகா வாக்கிய உபதேசத்தைக் கிரமமாகச் செய்தும் |
| பரிதவித்தும் மகிழ்ந்தும் மிகு வேடங்கள் புனைந்தும் | — | (விரும்பிய பொருள் பெறாமையினால் துன்ப முற்றும் (விரும்பியதை பெற்றமையால்) சந்தோஷ முற்றும் பலவிதமான வேஷங்களைத் தரிப்பவராயும் |
| கலை துறந்தும் உடை உடுத்தும் கல்வி பல பயின்றும் | — | (உடுத்தியிருந்த) ஆடையை அவிழ்த்தெரிந்தும் (நிர்வாணமாயிருந்தும்) ஆடையைத் தரித்தும், சாஸ்திரங்கள் பலவற்றை அப்பியாசித்தும் |

| | | |
|---|---|---|
| கல்லாதும் மாதர் | — | சாஸ்திராப்பியாசம் செய்யாமலும் |
| முயக்கு இடை உற்றும் | — | பெண்களைக் கூடுவதில் பிரியமுற்றும் |
| இவ்வாறு அலகு இறந்த நடை உற்றும் | — | இங்ஙனம் அளவு கடந்த ஒழுக்கங்களை உடையவனா யிருப்பினும் (அவற்றை) அவனது அருள் விளையாடல் எனக் |
| அருள் விளையாட்டு என்று ஐயம் ஒரு சிறிதும் உறாமல் அவன் தனை நம்புக | — | (கருதி) சந்தேகமென்பது ஒரு சிறிதும் அடையாமல், அந்த சீவன் முத்த புருஷனை (நீ, சிவ மென்று) நம்புவாயாக |

வி—சீவன் முத்தனது நடைகள் லோகனுக கிரகத்திற்கு அல்லாமல் அவற்றால் அவர்க்கு ஓர் பிரயோஜனமும் இன்மையின் அத்திருவிளையாடல்களை அதிகாரிகள், பிரயத்யக பின்ன பிரம்மத்தினுல்லாசமென்று அறிய வேண்டுமென்பதாம்.

## 179 விதேக முத்தியடையும் கிரமம்

என்றுமெவ் விடத்தினுமோ ருடம்புமுறா தொன்றா-
யிருந்த சச்சி தானந்த சிவசொரூப மாதல்,
நன்றிதரு விதேககை வல்லியமென் றிசைப்பர்-
நவின்றவிதை யெய்துமா றெவ்வாற்றா னென்னிற்
பொன்றலினித் தியகருமா நுட்டானந் தன்னாற்-
புண்ணியமப் புண்ணியத்தாற் பாவவொழி வதனாற்
குன்றலறு சித்திசுத்தி யதனாற் பொய்க் குடும்பக்
குற்றநிகழ் வதனான்மெய்த் துறவுதுற வதனால்

இ—ள்

| | | |
|---|---|---|
| என்றும், எவ் விடத்தும், ஓர் உடம்பும், உறாது | — | (அதிகாரி புருஷன்) எக் காலத்தும் எத்தேசத்தும், ஓர் சரீரத்தையும் அடையாது ஏக |



| | | |
|---|---|---|
| ஒன்றாய் இருந்த சச்சித் ஆனந்த சிவ சொருபம் ஆதல் | — | வடிவமாயிருக்கின்ற சத்து, சித்து, ஆனந்தப் பிரம்ம சொருபமாய், விளங்குதலையே |
| நன்றி தருவிதேக கைவில்லியம் என்று இசைப்பார் | — | மீண்டும் பிறவித்துன்ப மின்றிப் பேரானந்த மாகிய) நன்மையைத் தருகின்ற விதேக மோட்சமென்று (மேலோர் கூறுவர்) |
| நவின்ற இதை எய்தும் ஆறு | — | முற்கூறிய விதேகனகவல்லிய மோட்சத்தை அடையும் கிரமம் |
| எவ்வாற்றால் என்னில் | — | எவ்விதத்தால் ஆமென்று, வினவுவாயாயின் (ஒரு முமுட்சுவிற்கு) |
| பொன்றல் இல் நித்திய கரும அனுட்டானம் தன்னல் புண்ணியம் | — | (நற்பயனைத் தருவதில்) தவறுதலில்லாத, நித்திய நைமித்திய, பிராயச்சித்த கருமங்களைச் செய்வதனால் புண்ணியம் உண்டாவதாம் |
| அப் புண்ணியத்தால் பாவ ஒழிவு | — | அந்த புண்ணிய கருமத்தால் பாவம் நாசமாவதாம் |
| அதனால் குன்றல் அறுசித்த சுத்தி | — | அச்சித்த சுத்தியால், மித்தையாகிய, சம்சார தோஷ தரினம் உண்டாவதாம் |
| அதனால் மெய்த் துறவு | — | அச்சம் சாரதோஷ தரினத்தால், உண்மையான துறவு உண்டாவதாம் |
| துறவு அதனால் | — | அந்தத் துறவால் (இதுகுளகம்) 179 |

180 முத்திவிருப் பதனானே புறக்கரும வொடுக்கம்
மொழிந்ததனால் யோகநிலை முயற்சியது தன்னாற்
பொய்த்தலறு துரியவிழை வத்துரிய விழைவாற்-

புகலருமா வாக்கியவா ராய்ச்சியத னானே,
அத்துவித ஞானமத னாலவித்தை நாசம்
அதனாற் பொய்த் துவிதமயக் கழிதலத னானே,
மெத்துசுக துக்கநினை வொழிவதனால் விருப்பு
வெறுப்பறுத லதனாலொண் விதிவிலக்கோய்
வதனால்

(இ—ள்)

| | | |
|---|---|---|
| முத்தி விருப்பு அதனால் புறக் கரும ஒடுக்கம் | — | (முமுட் சுத்துவமென்னும்) மோட்ச விருப்பம் உண்டா வதாம்) அம் மோட்ச விருப் பத்தால் பாகிய கரும பரித் தியாகமுண்டாவ்தாம் |
| மொழிந்த அதனால் யோக நிலை முயற்சி | — | கூறிய வெளிப் பிரவிருத்தி நீக்கத்தால் நிலை பெற்ற யோகாப் பியாச முயற்சி (உண்டாவதாம்) |
| அது தன்னால் | — | அந்த யோகாப்பியாச முயற்சியால் |
| பொய்த்தல் அறு துரிய விழைவு | — | அழிவில்லாத பிரத்யகான்மப் பிரீதி (உண்டாவதாம்) |
| அத்துரிய விழைவால் | — | அந்தப் பிரத்யகான்மப் பிரீதியால் |
| புகல் அரும் மகா வாக்கிய ஆராய்ச்சி | — | (கருமதற்பரம், அல்லது உபாசனாதற்பரம், அல்லது ஞான தற்பரமென்று அறிவுடையோர்க்கும் கூற, அரிய தத்துவ மசி முதலிய மகாவாக்கிய விசாரம் (உண்டாவதாம்) |
| அதனாவ் அத்து வித ஞானம் | — | அம்மகா வாக்கியங்களின் விசாரத்தால் அத்துவித ஞானம் உண்டாவதாம் |



| | | |
|---|---|---|
| அதனால் அவிச் சை நாசம் | — | அவ்வத்வைத ஞானத்தால் சொரூபா வணரமென்னும் அஞ்ஞான நாசம் (உண்டாவதாம்) |
| அதனால் பொய்த்து வித மயக்கு ஒழிதல் | — | அவ்வஞ்ஞான நாசத்தால் மித்தையாகிய, துவிதப் பிராந்தி நாசம் (உண்டாவதாம்) |
| அதனால் மெத்து சுக துக்க நினைவு ஒழிதல் | — | அந்தத் துவிதப் பிராந்தி நாசத்தால் (இச்சையால்) மிகுந்து வளர்கின்ற சுக துக்கங்களின் சங்கற்ப நாசம் உண்டாவதாம் |
| அதனால் விருப்பு வெறுப்பு அறுதல் | — | அச்சுக துக்க சங்கற்ப நாசத்தால் இராக துவேஷங் கள் நாசமுண்டாம் |
| அதனால் ஒண் விதி விலக்கு ஓய்தல் அதனால் (இது குளகம்) | — | அவ்விராகத்து வேஷங்களின் நாசத்தால் சிறந்த விதி நிஷேத கருமங்களின் நாச முண்டாவதாம். அவ்விதி நிஷேத கருமங்களின் நாசத்தால் |

பரித்தியாகம் — நீக்கம், பிரத்யகான்மப் பிரீதி — ஆன்மாவை அபரோட்சமாக அறிய வேண்டு மென்னும் ஆசை சொருப ஆவரணம் — ஆத்ம சொருபத்தை மறைப்பது 180

181 வினையிரண்டு மகறலத னாற்றேக பாவ-
விச்சிந்தி யதனானே பாசமெலா மொழிதல்,
பினையறைந்த வதனானே பராபரமாய் முடிவாய்
பெயர்சாதி குறிபெறா தொன்றாகி வாக்கு,
மனமிறந்து நித்தியா னந்தமய மாகி,
மறிவிலா விதேககை வல்லியம்வந் தெய்தும்

எனவறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனால்
இன்பவீ டடையுநெறி விருப்புறுமுத் தமரே

இ—ள்

| | | |
|---|---|---|
| வினை இரண்டும் அகறல் | — | (புண்ணிய பாவமென்னும் இருவினைகளின் நாசம் (உண்டாவாதம்) |
| அதனால் தேக பாவ விச்சிந்தி | — | அவ்விரு வினைகள் நாசமா வதால் தேகத்தை யானென தென்னும் பாவனை கெடுதல் (உண்டாவதாம்) |
| அதனால் | — | தேகமே ஆத்மாவென்னும், அத்தேகபாவனைகெடுவதால், |
| பாசம் எலாம் ஒழிதல் | — | பாசங்கள் அனைத்து நாசம் ஆவதாம் |

வி—யான் பிரம்மத்தை யறியே னென்னும் அஞ் ஞானமும் பிரம்மம் இல்லை விளங்க வில்லையென்னும் இருவித ஆவரணங்களும், புண்ணிய பாவங்களைச் செய் கிற கர்த்தாவும் சுக துக்கங்களை அனுபவிக்கின்ற போக்தாவுமாகிய சீவனாகிறேன் என்னும் பிராந்தியு மாகிய அவித்யாதி ஜாலங்களென்னும் அனைத்தும் நாசமாமென்பதாம்.

| | | |
|---|---|---|
| பினை அறைந்த அதனால் பராபரமாய் முடிவு ஆய் | — | பின்னர் கூறியஅப்பாச நாசத்தால் (எந்த பிரம்மாதி தேவர்கள், எந்த பரமாத் மாவை நோக்கத் தாழ்ந்தனர் ஆகின்றனரோ, பரமஸ்தான மாகிய பராபரமாகியும், (சகல சாஸ்திரங்களுக்கும் அர்த்த மாகிய) முடிந்த பொருளாயும் |
| பெயர் சாதி குறி பெறாது | — | பெயரும் சாதியும் (குறிக்கும் ஓர்) அடையாளமும் பெறாத தாயும் |



| | | |
|---|---|---|
| ஒன்று ஆகி வாக்கு மனம் இறந்து | — | ஏகமாகவும், (சத்தி விருத்தி யாகிய) வாக்கிற்கும் (பல வியாப்தியாகிய) மனத் திற்கும் எட்டாத தாகியும் |
| நித்தியானந்த மயம் ஆகி மறிவு இலாவிதே ககை வல்லியம் வந்து எய்தும் என | — | நித்தியானந்த வடிவமாயுள்ள (இறப்பு பிறப்பாகிய சம்சாரத்தில்) திரும்புதல் இல்லாத விதேக மோட்ச மானது (கிரமமாக) வந்து சித்திப்பதாம் என்று (விதேக மோட்ச மடையும் கிரமத்தை) |
| சுருதியால் குருபரனால் | — | சுருதி வாக்கியத்தாலும், சற்குரு நாதனது உபதேசத் தாலும் |
| இன்ப வீடு அடையும் நெறி | — | நிரதிசயானந்த வடிவ மோட்சத்தை அடையும் மார்க்கத்தை |
| விரும்பு உறும் உத்தமர் துணிந்து அறிந்திடுக | — | விரும்புகின்ற உத்தம அதிகாரி புருஷர்கள், நிச்சயமாக அறிபவர் ஆகுக |

182 வேதமுத லாகியநூ லனைத்தினுஞ்சொல் பொருளை-
விளங்கியிடக் கரதலா மலகமெனக் காட்டிப்
போதமய மாகியபே ரானந்தத் தழுத்தும்
பொருவிகந்த விந்நூலை முத்திபெறற் குரிய
சாதநான் கினையுமடைந் தெவரானு மென்றும்
தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக் கெண்ணி
ஆதரவின் அருட்குருவன் றனைத்தேடி யுருகும்-
அன்புடையோர் தமைக்காணி னளித்திடுக
வுவந்தே

(இ—ள்)

| | | |
|---|---|---|
| வேதம் முதல் ஆகிய நூல் அனைத் தினுக்கும் | — | வேதங்கள் முதலான சர்வ சாஸ்திரங்களனைத்திற்கும் |

| | | |
|---|---|---|
| சொல் பெருளை விளங்கி இடா | — | சொல்லா நின்ற அர்த்தங் களனைத்தும் விளங்கும் பொருட்டாக |
| கரதலா மலகம் எனக் காட்டி | — | உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி போல விளங்கச் செய்து |
| போத மயம் ஆகிய பேர் ஆனந்தத்துத்து அழுத்தும் | — | ஞான வடிவமாகிய பேரின்பத்தின் கண் முழ்கும் படி செய்வதாம் |
| பொருவு இகந்த இந்நூலை | — | ஒப்பற்று (விளங்குகின்ற, இந்த வேதாந்த சூடாமணி யென்னும் சாஸ்திரத்தை |
| முத்தி பெறற்கு உரிய சாதனம் நான் கினையும் அடைந்து | — | மோட்ச வீடு அடையவேண்டும் என்பதற்குரிய சாதனங் களான, விவேகம், வைராக்கியம், சட்சம்பத்தி முமுட்சுத்துவ மென்ற நான்கையும் பெற்று |
| எவரானும் என்றும் தடுப்பரிய பிறவி நோய் | — | எப்படிப் பட்டவர்களாலும் எக்காலத்தும், நீக்குவதற்கு அரிய பிறவி நோயை |
| தணிப்பதனுக்கு எண்ணி ஆதரவின் அருள் குரவன்தனை | — | நீக்குவதற்கு நிச்சயித்து பத்தி விசுவாசத்தோடும் கருணையே வடிவாகி சற்குரு நாதனை |
| தேடி உருகும் அன்பு உடையோர் தமை காணின் அளித்திடுக உவந்தே | — | தேடி உருகுகின்ற பக்தி யுடையவர்களைக் கண்டால் (அவர்களுக்கு) சந்தோஷமாக கொடுக்கத் தகுந்ததாம் |

வேதாந்த சூடாமணி மூலமும்
பிரம்மானந்த விளக்கமென்னுப் உரையும்
சப்பூரணம், வேணும் சற்குருநாதன் துணை
சுபம் சுபம் சுபம்



## வேதாந்த சூடாமணி மூலமும் உரையும்

| பக்கம் வரி | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|
| | தற்சிறப்பாயிரம் | ... | தற்சிறப்புப்பாயிரம் |
| 11— 1 | போற்றுபவம் | ... | போற்றுமவன் |
| 19— 18 | அடக்க | ... | அடக்கல் |
| | காமாதில் | ... | காமாதி |
| 20— 27 | கூறமடத்து | ... | கூறுமிடத்து |
| 30— 19 | சிறத்திருந்தி | ... | சிறத்திருத்தி |
| 31— 1 | நினையவரு | ... | நினையலரு |
| 39— 16 | உகலலும் | ... | உகலரும் |
| 44— 13 | யுணர்குரிய | ... | யுணர்தற்குரிய |
| 45— 3 | சுவகாதி | ... | சுவகதாதி |
| 46— 10 | வஷ்துவை | ... | வஸ்துவை |
| 54— 1 | ஏவு | ... | மேவு |
| | மாசமும் | ... | ஆகாசமும் |
| 60— 20 | கூறபப்டும் | ... | கூறப்படும் |
| 62 — 26 | பிராதிபாதிகன் | ... | பிராதிபாசிகன் |
| 76— 8 | சுட்சும | ... | சூட்சும |
| 79— 15 | அஞ்ஞானமாகி | ... | அஞ்ஞானமாகிய |
| 86— 27 | மாலையினுடைய | ... | மாயையினுடைய |
| 89— 8 | சான்லாய | ... | சான்றாய |
| | திருவிகற்ப | ... | நிருவிகற்ப |
| 108- 23 | திண்ணம் | ... | திண்மை |
| 123- 24 | சீல | ... | சீவ |
| 141- 13 | அங்காரம் | ... | அவிகாரம் |
| | அன்று -என் | ... | அன்று என |
| 159- 32 | தங்கனை | ... | தங்களை |
| 163- 3 | என்றன் | ... | என்றல் |
| 165- 28 | தேவதத்தனுடத்து | ... | தேவதத்தனிடத்து |
| 176- 18 | பனக | ... | பகை |

| பக்கம் வரி | | | |
|---|---|---|---|
| 177- 11 | ரெண்ணும் | ... | ரென்னும் |
| | ஒன்றாற் | ... | ஒன்றாந் |
| | பரோட்சபவ | ... | பரோட்சமவ |
| 179- 12 | காத்திரம் | ... | மாத்திரம் |
| 180- 16 | தாதான்மய | ... | தாதான்மிய |
| 186- 25 | மூன்றுள | ... | மூன்றுன |
| 189- 4 | சீவன்ஒரு | ... | சிவம் ஒடு |
| 191- 5 | வலிகின்றாம் | ... | வலிஇன்றாம் |
| | சாமர்த்தியங் | ... | சாமர்த்தியமில்லை |
| | நிதித்தியாச | ... | நிதித்தியாசனம் |
| 192- 16 | பசுர்-தந்து-பகர் | ... | பகர்-தத்து-உப |
| 200- 12 | போகதுபவ | ... | போகானுபவ |
| 202- 1 | ந நா | ... | நா நா |
| 204- 32 | ரே | ... | ஒரே |
| 207- 19 | வாயும் | ... | வாயுவும் |
| 214- 21 | கரியம் | ... | காரியம் |
| 216- 30 | பிராணயா | ... | பிராணயாம |
| 229- 14 | பிரமாத்திரம் | ... | பிரமமாத்திரம் |
| 244- 25 | ழுத்தி | ... | சுழுத்தி |
| | நித்திரையான் என்று | ... | நித்திரையின் நின்று |
| 246- 13 | அகன்றி முதல் | ... | அகன்றிடுதல் |
| 247- 9 | கமலனானுயர் | ... | கமலனால்உயர் |
| 248- 29 | சித்தர் | ... | சித்தித்தற் |
| 250- 3 | புத்தித | ... | புத்திர |
| 255- 24 | ஸ்தியதிக்கு | ... | ஸ்திதிக்கு |
| 262- 17 | சனும | ... | சமை |
| 276- 10 | மம்தரங்கம் | ... | 6-ம் தரங்கம் |
| 16 | ஒழிப்பதனுக் | ... | ஒழிப்பதனுக்கி |



# வேதாந்த சூடாமணி செய்யுள் 182

## முதற் குறிப்பு அகராதி

49 முதல் எழுத்தைக்கொண்டது.

